ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

செம்பகாரண்ய மகத்துவமென்னும்

# மன்னூர்கோயிற்

# புராணம்.

இஃது.

நாகபட்டணம் தாசில் - ம-ா-ா-ஸ்ரீ

**வேங்கடராயலு நாயகரவர்கள்**

கேட்டுக்கொண்டபடி.

ம-ா-ா-ஸ்ரீ மஹாவித்வஜ்ஜன சேகரராகிய

திரிசிரபுரம்.

**வி - கோவிந்தபிள்ளையவர்கள்**

பாடி.

ஷை தாசில்தார் அவர்கள்

உத்தரவின்படி

சைதாபுரம்,

**சோமசுந்தரமுதலியாரது**

ஸ்டார் ஆப் இந்தியாபிரஸ்ஸில்

அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

விபவஹு ஐப்பசிமீ.

MADRAS.

PRINTED AT THE STAR OF INDIA PRESS.

35, MAKEY MOOTIA MOODELLIAR STREET.

1868.



ஸ்ரீமதேராமாநுஜாயநம,

# முகவுரை.

சந்திரகிரிக்குலத் துதித்த தேசிகாசாரிய ஸ்வாமி திருவடிகளாகிய - பாலொடு தேன்சலந்தாற் போற சம்பந்தமான- திருநாகை ஸ்ரீமது - விரராகவ நாய்கரவர்கள்.

வகையால் மனமொன்றி மாதவனை நாளும். புகையால் விளக்காற் புதுமலரா னீராற். றிறைதோ றமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற. தகையான் சரணந்தமர்கட் கோர்பற்றே - கண்ணன் கழலிணை - நண்ணும் மனமுடையீர்-எண்ணுந் திருநாமம்-திண்ணம்-நாரணமே - என்பவைகளை அநுசந்தித்து. ஸ்ரீயப்பதியாய்ச் சர்வேசுவரனுன பரமகருணாநிதியென்னும்- கலௌ - வேங்கட நாயகனை முன்னிட்டாற்றிய. ததியாராதன தவத்தினாலும்-பின்னும்- வழுவாதியற்றிய பகவத்பாகவதாராதன கைங்கரிய குணானுபவ காலக்ஷேபங்களினாலும். மாயன் மணிவண்ணன் றாள்பணியு மக்களைப்பெற்று மகிழ்வர்களே யென்கிறபடியே மூன்று புத்திரர்களை ஈன்றருளினார்.

அப்புத்திரர்களில் சிரேஷ்ட புத்திரருக்கு வேங்கடராயலு தாசரென்றும்-கனிஷ்டருக்கு-நாராயணசாமி தாசரென்றும்-திருதிய புத்திரருக்கு - கோபாலசாமி தாசரென்றும்-திருநாமங்கள் சாத்தி.

தந்தை மகற்காற்று நன்றியவையத்து முந்தியிருப்பச் செயலென்கிறபடியே செய்ய - மகன்றந்தைக்காற்று முதவியிவன் றந்தையென்னோற்றான்கொல் என்கிறபடியே - கல்விகேள்விகளிற் சிறந்தவரான- சிரேஷ்ட புத்திரர் அதிபாலிய முதல். நல்லொழுக்கமு நல்லறிவுமுள்ளவர்கள் கூட்டரவிலே தேனும்பாலுங் கன்னலு மமுதுமாகித் தித்திப்பக் கலந்திருக்கும் அந்நாளில் - தந்தையான - விரராகவ நாய்கர் - விந்தையாகிய திருநாட்டில் - உலகமுண்ட பெருவாயாவென்கிற பாசுரந்தொடங்கி - அகலகில்லே னிறையுமென்றலர் மேன்மங்கை யுறைமார்பா - நிகரில் புகழாயுலக மூன்றுடையா யென்னையாள்வானே - நிகரில மரர்முனிக்கணங்கள் விரும்புந் திருவேங்கடத்தானே புகலொன்றில்லா வடியேனுன்னடிக் கீழமர்ந்துபுகுந்தேனே என்கிறபடியே இந்தவுடல் விட்டிரவிமண்டலத்தூடேகி யிவ்வண்டங் க

ழித்திடையிலா வரணமேழ்போய் அந்தமில் பாழ்கடந்தழகார் விரசைதனிற் குளித்தங்க மானவனு லொளிக்கொண்ட சோதியும் பெற்றமரர் வந்தெதிர் கொண்டலங்கரித்து வாழ்த்தி வழிநடத்தவைகுந்தம்புக்கு மணிமண்டபத்திற் சென்று - நந்திருமாலடியார்கள்குழாங்களுடன் கூடியிருக்க.

அத்தந்தையினது சரமகைங்கரியங்களை வெகு வைபவங்களோடு நடத்தி வேம்பின் புழுவேம்பன்றி யுண்ணாதடியே னுன்பின்னுமுன் சேவடியன்றி நயவேனென்று நிதியினைப்பவளத்தூணை நெறிமையானினையவல்லார் கதியினைக்கஞ்சன் மாளக்கண்டு முன்னண்டமாளு மதியினை மாலே வாழ்த்தி-இரும்பு நன்றுண்ட நீர்போ லெம்பெருமானுக்கே அரும்பெறலன்பு புக்கிட்டடிமை பூண்டிருக்கும்.

அப்போது வேங்கடராயலு தாசருக்கு - நின்னையே தான் வேண்டிநீள்செல்வம் வேண்டாதான் றன்னையே தான் வேண்டுசெல்வம்போல் ஒரு லௌகிகங்கிடைத்தது - அத்தருணத்தில் அவர். திருவேங்கடத்தானுடைய நிரஹேதுக கடாக்ஷத்தாலே திருநாகை திருத்தஞ்சைமுதலான திவ்ஷியதேசங்களில். ஸ்ரீ ஹரியினுடைய நாமத்தை விடாமல் பாகவதார்த்தங்களைச் சேதநர்களுக்குப்போதித்து ஆனந்த முள்ளடங்காமல் - நடந்தும் பரந்தும் குனித்தும் கிதங்கள் பலபல பாடிப் பரமபாகவதரான வேங்கட விடலதாசருடைய சஹவாசத்தாலே.

ஒழிவில் காலமெல்லா முடனுகி மன்னிவழுவிலா வடிமைசெய்ய வேண்டுநாம். தெழிகுரலருவித் திருவேங்கடத்தெழில் கொள் சோதியெந்தைதந்தை தந்தைக்கே. என்கிறபடியே- அத்திருவேங்கடத்தானையே குலதனமாய்ச் சதாவுஜ்ஜீவித்து திருமலைபி லெழுந்தருளியிருக்கும் எம்பெருமானைத் தெரிசிக்க உத்தேசமாய் யாத்திரை புறப்பட்டுப்போய் முக்கோடி தீர்த்தங்களும் கொண்டாடுவதான சுவாமிபுஷ்கரணியில் நீராடல் செய்து திருமண்காப்பு முதலியவை யணிந்து.

வேங்கடங் கண் மெய்மேல் வினைமுற்றவும் - தாங்கடங்கட்கு நல்லனவே செய்வார். வேங்கடத்துறைவார்க்கு நமவெனலாங் கடமையது சுமந்தார் கட்கே - என்கிறபடியே நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திருவேங்கடத் தெம்பெருமானைச் சரணமடைந்து மாதவா-ஹரிகேசவா முகுந்தா - பரந்தாமா - பத்மநாபா - தாமோதரா-வா

மனு - மதுசூதனு திருவிக்கிரமா என்று ஸ்மரணை செய்து ஆனந்தக்க ளிப்போடு தீர்த்தப்பிரசாதங்களை ஸ்வீகரித்து - அலர்மேன் மங்கைப் பிராட்டியையும்சேவித்து. ஆக்ஞாபித்த கைங்கரியங்களைத்திருவடியின் கண் சமர்ப்பித்து அவன் தாளிணைமேவி மருவிய கடாக்ஷத்தாலே.

வம்புலாஞ் சோலைமாமதிற்றஞ்சை மாமணிக்கோயிலே வணங்கி. என்கிறபடியே தஞ்சையாளியைக் கைதொழுது வசிக்குங்காலத்தில். மன்னப்படு மறைவாணனை வண்டுவரா பதிமன்னனை யேத்துமினென் கிறபடியே தஞ்சைமா நகரத்துக்குத் தென்கிழக்கிலுள்ள சுயம் வியக் தமான திவ்வியதேசங்களிற் சிறந்த தென்று வாரகையில். கோப்பிர ளயர் கோபிலரென்னு மஹாமுனிகளுக்கு லீலா விபூதியில் தனது அ பிமான சேஷ்டிததிருவிளையாட்டைச் சேவைதந்தருள எழுந்தருளிய ஸ்ரீராஜகோபாலனுடைய வைபவங்களைச்சேவித்து ஆனந்தா தீதபரவ சராய். அந்த ஸ்தலபுராணத்தை அந்தச்சந்நிதியிலிருந்த ஸ்ரீ கிருஷ்ண தீக்ஷிதராலே வடமொழியி லிருக்கிறபடியே தென்மொழியிற் கேட்டு டுபட்டவராய் ஸ்ரீ கிருஷ்ணதீர்த்த ஜீரணோத்தாரணம் திருமண்டப முதலான கைங்கரியங்களையும் சிறப்போடலங்கரித்து- திருநாகை பொ ன்னைய நாய்கருடைய உதவியால். அந்த மையமண்ட பாலங்காரத்து டனே தெப்பவுற்சவஞ் செய்வித்து. ஸ்ரீ ராஜகோபாலன். உபயநாச்சி யாருடனே திருமண்டபத்தி லெழுந்தருளியிருக்கும் வைபவத்தைச் சேதனுள் உஜ்ஜீவிக்கும்படி விக்ஞாநோபதேசம் போதிக்கவும் வேதா ந்ததேசிகருடைய சச்சம் பிரதாயங்களையும் விவரணஞ்செய்ய. அந்த வேதாந்த தேசிகரோ இக்காலத்தில் திருவவதரித்திருக்கிற ஸ்ரீ மஹா உபயவேதாந்த சீனிவாச தேசிகாசாரியயதிகளானமுனியத்திர சுவாமி களும்-சார்வதாசுகப்பிரம்ஹருஷியைப்போல் ஸ்ரீபாகவத காலக்ஷேபஞ் செய்து கண்ணனல்லாற் றெய்வமில்லையென்று காதலித்து. மூவாசை களில்-முயற்சிகளின் மிக்கதான பொன்னாசையும்மதிமயக்கஞ் செய்வி க்கிற பெண்ணாசையும். தீரவொண்ணாத மண்ணாசையும். நித்திய மன் று அநித்திய மென்றுணர்ந்து. ஞாநாதிகராகிய ஸ்ரீமது குருமூர்த்தி யாகிய பாலசுவாமி யதிகளும் பத்துடையடியவர்க் கெளியவனென்கிற பதிலே. அச்சுவாமிகள் பிரம்ஹானந்தத்தை யடைந்தது போல. எல் லாப்பாகவத கோஷ்டி ஜனகோஷ்டிகளும். உபயநாச்சிமாரோடு பரம பத நாட்டிலெழுந்தருளி யிருக்கின்றதையொத்த திவ்விய தெரிசனாந ந்த சேவையைச்சேவித்து. பணியென்ப ரேதவமென்பனோ பாலெ

ன்பனோ பாகென்பனோ மணியென்பனோ வமுதென்பனோ வகைசேரு நல்லறமென்பனோ நனுமேழிசைச் சுவையென்பனோ நந்தாவொளிச் சுடரோ- கூவுமாறறியமாட்டேன் குன்றங்களனைத்து மென்கோ மேவு சீர் மாரியென்கோ விளங்குதா ரகைகளென்கோ-நாவியல் கலைகளென் கோ ஞானநல்லாவி யென்கோ பாவுசீர்க்கண்ண னெம்மான் பங்கயக் கண்ணனையே என்கிறபடியே ஆண்டுகடோறும். அடியோமோடு நின் னோடும் பிரிவின்றி. எற்றைக்குமேழேழ் பிறவிக்கு முன்றன்னோடுற் றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோ மென்கிறபடியே சேவை சாதித்தருள வேணுமென்று மங்களாசாஸ நம்பண்ணினார்கள்.

அக்காலையில் உத்தேச கிருஷ்ணதீர்த்த கைங்கரியம் பூரணமாக- நிறைவேறுவதற்கு முன்னமே தானே-அக்கண்ணபிரான் பகவத்பாகவ தகைங்கரிய முகமலர்ச்சியாக உஜ்ஜீவனார்த்தமாய்ப் பெருமைபுகழோடு கூடின தாசில்தாரென்கிற லௌகிகம் நடத்திவரும்படி சடாக்ஷித்தரு ளி-அதை-நேர்கொண்டவா கொள்ளாமல் உத்தேச கைங்கரியம் பூர ணமாய் நிறைவேறின அன்றே அதிகாரஞ் செலுத்தும்படி விடைகொ டுக்கப்பெற்று.

மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெலாம் பொய்யனாகும் புறமே தொழுவார்க்கெலாம். செய்யில் வாளையுகளுந் திருக்கண்ணபு ரத்தையனாகத் தணைப்பார் கட்கணியனே என்கிறபடியே ஸ்ரீ திவ்விய மங்கள கல்யாண குணரூபனான. சௌரிராஜ னென்னும் கண்ணபுரத் தெம்பெருமானை. அருகிலிருந்தனுபவிக்கும்படி செய்தருளின- லௌ கிகச்சிறப்பின் பெருமைக்கெல்லோரு மாயன் பெருமையையுகந்து கண்டோம் கண்டோம் - கண்டோம் கண்ணுக்கினிய னகண்டோம்- தொண்டீரெல்லீரும் வாரீர் - என்கிறபடியே ஆச்சரியானந்த மடைந் தார்கள்.

பின்பு தூயனாயுமன்றியுஞ் சுரும்புலாவு தண்டுழாய் மாயநின்னை நாயினேன் வணங்கிவாழ்த்து மீதெலாம்- நீயுநின் குறிப்பினிற் பொறு த்து நன்குவேலை நீர்ப்பாயலோடு பத்தர் சித்தமேய வேலைவண்ண னே. என்கிறபடியே அவனதின்னருளால் - மாமதிற்றஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி என்கிறபடியே - அதனருகிருக்கும் - திருவாதியி லும்-தஞ்சைமா நகரத்திலும்-மனமகிழ்ச்சியோடு பெரும்பாலு நன்கு மதிக்கும்படியான புகழோடு வசிக்கும்படி செய்து-கண்ணிலு நெஞ்சி

லுகின்ற விக்காரணம் சட்டுரையே-என்கிறபடியே - அற்புதானந்த தே ஜோமயராய்ச் சதா - இருதயத்தில் அந்தராத்மா சேவைதந்தருளிய ஸ்ரீராஜகோபாலன் செங்கமலத்தாயார் கடாக்ஷத்தால் அன்னமுங் கே மூலு மீனுமாய ஆதியைநாகையழகியாரைக்கன்னி நன்மாமதில் மங்கை வேந்தன் காமருசீர்க்கலிகன்றிகுன்று இன்னிசையாற் சொன்ன செஞ் சொன் மாலையேழு மிரண்டுமோ ரொன்றும் வல்லார். மன்னவராயுல காண்டு மீண்டும் வானவராய் மகிழ்வெய்துவாரே. என்கிறபடியே-திரு நாகையில்.

பொன்னிவர்மேனி மரகதத்தின்
  பொங்கிளஞ் சோதியகலத்தார்
மின்னிவர் வாயினல் வேதமோதும்
  வேதியர் வானவராவர்தோழி
என்னையுநோக்கி யென்னல் குலுநோக்கி
  யேந்திளங் கொங்கையு நோக்குகின்றார்
அன்னையென் னோக்குமென் றஞ்சுகின்றே னச்சோ
  வொருவரழகியவா என்று சேவித்து.

அந்த லௌகிகச்சிறப்போடு கூடிவாழும்படி பின்பு கடாக்ஷித்த ருளின. ராஜகோபாலன் கழலிணையை எல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும் படி செண்பகாரணிய ஸ்தலபுராணம் கீர்வாணமா யிருந்ததைத் திரவி டமாகச்செய்ய ஸ்ரீ ராஜகோபால சுவாமி கடாக்ஷத்தால் அந்தத்தாசில திகாரவேங்கடராயலு தாசரவர்கள். உள்ளத்திலே தோற்ற முண்டாகி.

சீரார்வடக்குத் திருவீதிப்பிள்ளை யெழுதேரார் தமிழ்வேதத் திடு தனைத் தாருமென வாங்கிமுன் னம்பிள்ளையீயுண்ணி மாதவர்க்குத்தா ங்கொடுத்தார் பின்னதனைத்தான்- என்கிறபடியே அந்தவம்ஸஸ்தரான மாதவாசாரியர் புத்திரர் ஸ்ரீநிவாசாசாரியாரைக்கொண்டு-தமிழில் மொ ழிபெயர்த்து- அதைத்தில்லை ஸ்தானத்தி லெழுந்தருளியிருக்கின்ற-பா கவதோத்தமரானவைகுண்டாசாரியசுவாமியையும்-பகவத் கல்யாணகு ணங்களைத்தானேவாக்குப்படுத்துவதால்வருஷிக்கும்பக்தரானகோபா லபாகவதரையும் - ஒத்துப்பார்க்கும்படி செய்து, தமிழிற்சிறந்தவராய் இலக்கிய இலக்கண வித்துவானுமாய் விசேஷவைலக்ஷண்ய-அஷ்டாத சரஹஸ்ய பகவத் விஷயமான திரவிடதிவ்யப்பிரபந்தங்களைமுறைமை யாய்ச் சேவித்துணர்ந்த சுகுணசாந்தரான - திரிசிரபுரம் - ம-ா-ா-ஸ்ரீ கோவிந்தபிள்ளையவர்களைக்கொண்டு தமிழில் விருத்தப்பாவாய்ப் பாடு வித்து அச்சிற்பதித்துப்பிரசித்தஞ்செய்வித்த - இதற்குச் செய்யுள்.



தஞ்சை நகரத்தில் சிறந்த வித்வானாகிய

ம-ா-ா- மதுரை முத்துப்பிள்ளை அவர்கள்பாடின.

# சிறப்புப்பாயிரம்.

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

கார்நிறை தருமலர்க் காமரஞ் சோலையும்
ஏர்நிறை சிகரமு மெங்கணு நிறைந் த
மகத்துவச்சைய வரைநின்றிழிந் து
சகத்துளோர்செய்த தவமென விரிந் து
கல்லார் மனம்போற் கலங்குபுதிரைந் து
நல்லார் சொன்னூ னெறிநிகர் நடந் து
சோணாடெனும்பூ சுரநாடனுகி ப்
பாஸ்ரீரங்கமா புரத்திற்பன்ன க
மீத்துயில்கூர்தரு விமலமெய்ப்ப ர
மாத்துமமூர்த்திக் கழகியமாலையாய் ப்
புகறரக்கதித்தும் போந்திருபாலு ம்
நிகரறப்பரவி நேர்மையோடொழுகி த்
தருக்கிளைதொறுமலர் பொதுளுநந்தனநி றை
திருக்குடந்தையிலுத் தியோக நித்திரைசெயு ம்
பேராயிரமுடைப் பெருங்கருணை ர
ஆராவமுத னாழியந்தீர்த்தமா ய்
மண்புகழ்தரவளர் மதுகரமணுகா ச்
சண்பகாரணியச் சுயம்புத்தலத்தி ல்
இராஜகோபாலன் யவனகோபியொ டு
விராவிநீர்க்கிரீடை விருப்பொடு புரிவா ன்
அரித்திரா நதியென அன்புடன் விளங் கி
நெரித்த பூங்குழலா ரணிமஞ்சணிறந்தழீ இ
வருணைக்கூடி மகிழ்வுறு பொன்னி த்
தருணமங்கையா டானன்புகூர்ந் து
தாய்போற் சராசர மனைத்துந்தழைக் க
நேயமாய் வளர்க்கு நீர்நாட்டகத்து த்
திருப்பதி நூற்றெட் டினுக்குமுற்பதியா ய்

இருக்கு மரங்கத் தலத்தினுக்கைந் தி
யோசனை கீழ்பா லுறங்குமெம்மா ழி
கேசனூர் திருக்குடந் தையின்றெற்கிலிர ண்
டானயோசனைக்கண் ணரசாயமர்ந் து
ஞானமாமுனிவர்க ளவாவியநற்சுக ம்
யாவையுமீயு மிராஜகோபால ன்
சேவைசாதித்த செம்பகாரணிய த்
திருமான்மியமரி வம்சசே ஷ
தருமமறுபான் மேனான்குசார்ந் த
அத்தியாயத்தும்பிர மாண்டபுரா ண
நத்துமேற்படியத்தி யாயங்கணான்கினு ம்
காந்தநாகரகண் டநூற்றுமுப்பானொ ரு
போந்தவத்தியாயங்க ணான்கினும்புகன்றதை ப்
பூர்வம்பண்ணிய புண்ணியம்வந் து
சேர்தலாற்றனது சிந்தைநசையொ டு
பத்திகூர்கிருஷ்ணார்ச் சகப்பண்ணவன்பா ல்
சித்தநற்றெளிவுறச் சிரத்தையாய்க்கே ட்
டநுதினமும்மவ் வற்புதந்தன து
நினைவினையகலா திருக்குநேர்மையா ல்
பஞ்சபாணனைப் பயந்தகடல்வண ன்
அஞ்செஞ்சரணினை யன்பொடுபோற் றி
செயச்செயத்தனது சிந்தையானந் த
வயத்தினிலாகி வளர்தென்றுவாரகை க்
கோன்பேரமுதினைக் கொள்ளைகொண் டு
தானேயுணிற்றரும மின்றெனவெணி யீ
உண்ணிமாதவப் பெருமாள்குலத் து
நண்ணியமாதவா சாரியர்நல்கி ய
சீனிவாசவா சாரியாராற்செ க
மேனிகழ்வடமொழி யைத்திராவிடத்தி ல்
மொழியாய்ப்பெயர்ப்பித் ததனைமூன்றா ல்
வழியேயழியா மரபினதோவென த்
தில்லைத்தானத் திருப்பதியமர்ந் து
குல்லைத்தாரான் கோகநகப்பத ம்

## சிறப்புப்பாயிரம்.

மறவாப்பாக வதோத்தமராகி ய
அறமார்வைகுண் டாசாரியனாயு ம்
வரவூர்மேவி வைகலும்வாழு ம்
பரமபாகவத னெனப்பார்புகழு ம்
பண்புடைக்கோபால பாகவதனாயு ம்
நண்புறக்கொண்டு நவையிலாதாய்ந்துபி ன்
அரங்கநாயகன்பா லசஞ்சலபத் தி
உரங்கொடனுன்சம யோசிதநூலெலா ம்
தேர்ந்திலக்கியவிலக் கணத்திரையாழி யை
நீந்தியதத்துவ நெறியுளான்பூர்வ ச்
சால்புடைப்புலவருஞ் சமழ்ப்புறவிலக்க ண
நூலரைக்கணத்திடை நூதனமா க
விதிக்குமகாகன வித்துவானாகி த்
துதிக்கியாவருந்திரி சிரபுரந்துலங்கி ப்
பேர்பெறுகோவிந்த பிள்ளையவர்களா ல்
சீர்பெறுசெந்தமிழ் விருத்தப்பாவாய் ச்
சொற்சுவைபொருளின் சுவையாவருக்கு ம்
நற்சுவையாகநன் குறச்செய்வித் து
மன்னார்கோயிற் புராணமென் ன
எந்நாளும்பெய ரிலங்குறப்புனை ந்
திமிழ்திரையுடுத்த இவ்வுலகத்து த்
தமிழ்நிலத்தோர்க டம்பவநீங்கி த்
துன்பமுறுதிக சுகம னுபவித்துமே ல்
இன்பவாழ்வடைக வென்றுவந்தீந்தன ன்
தாவியகுணகடற் றடங்களைப்பாங்க ர்
காவிரிக்குத்தக் கணமதாகி ய
திசைவளர்கிருஷ்ணா ரணியச்செந்தே ன்
பசைநிறைபழனப் பைங்கூழ்வளர்ப்பவு ம்
அலையெறிதரள மளவர்தஞ்சிறுமிய ர்
உலையிடைப்பெய்தாட் டோதனமிழைப்பவு ம்
செல்வமங்கைதன் றிருமனையாகவு ம்
கல்விநாயகிபயில் கழகமாகவு ம்
சவுந்தரராஜப் பெருமாள்சா ல

உவந்தேழியருளி யுயிரெலாமோம்பவு ம்
நிறைபெறுவளனொடு நீதிநல்லொழுக்க ம்
முறைவழியோங்கி முதுநகரியாவையு ம்
வாகைகொண்டுயர்ந்து மாண்புடனிலகு று
நாகபட்டணந்தனி னாடொறும்வாழ்வோ ன்
சந்திரகிரிகுல வழிமுறைசார்ந் த
சுந்தரத்தேசிகர் சரண்டலைச்சுமந்தோ ன்
ஏதிலார்பகைஞ ரினத்தோர்மெலிந் த
ஆதுலர்தமக்கன மருத்தியுண்ணறிஞ ன்
அரிதிருவடியார்க் கன்புறுதொண் டு
புரிதலேபொருளென நினைவோனாகி ய
நற்குணவீரராகவ நாய்க ர்
அற்புதத்தவத்தி னரும்பயனோருரு க்
கொண்டுதித்தன்ன குணாலயன் செய் ய
புண்டரீகாக்ஷன் பொற்கழலிணை யை
இரவினும் பகலினு மிதயத்திருத்தி ப்
பரவிநின்றேத்தும் பத்தசிரோம ணி
நிரந்தரம்வைணவ நெறிவழுவா து
புரந்தசத்துவகுணப் புண்ணியசீல ன்
தந்தையார் செய்த தருமத்தொழிறனை ச்
சிந்தையுண்மறவாத் திரநிலையுடையோ ன்
பாகவதகோஷ்டியிற் பற்றுதலன்றி த்
தாகமொன்றினிலுஞ் சார்தராத்தன்மையோ ன்
தென்றிசையெங்கணுந் திருமால்பஜனை பே
நன்றிசேர்மோட்ச நல்கிடுமென்ன க்
கைக்கொண்டெவருங் கருதுதற்கிசை ய
மெய்க்கிருபாகர விமலன்கதையையு ம்
தாசர்களடைந்த தனிப்பெரும்பதத்தையு ம்
வாசுதேவமா மந்திரமுறையையு ம்
விதைத்தஞ்ஞான வனத்தைவேரொடு ம்
சிதைத்துமெய்ஞ்ஞானந் திகழ்தரவளர்த்தி ய
பாங்குடைப்பரம பாகவதனொடு ம்

வேங்கடவிட்டலர்விளம்பியபோதமு ம்
பாகவதார்த்த பாகங்கண்முழுவது ம்
ஓகையோடுணாசெயு முயர்ஞானமுடைமையி ற்
சீலமார்சுகரோ யிவரெனச் செப்பு று
பாலசுவாமிகள் விழியருட்பார்வையு ம்
தேசிகர்சம்பிரதா யங்களைச்செகத்தி ற்
பேசிநாட்டுறுமப் பெருவலியதனா ல்
தனிப்புகழோடுறு சாந்தமுநிறைந் த
முனியத்திரயவா சானருண்மொழியு ம்
பெற்றுவேங்கடப் பிரான்றுதிதனை பே
கற்றதேவ காரியவுதார ன்
திருவேங்கடமுடை யான்றிருவடிக ளை
ஒருவாவன்புட னுவந்துகண்டேத்தி ய
அவாவினையாய்ந்தவ் வண்ணலாரருளா ற்
சவாபுநவீசுத்தி யோகத்தைத்தா வே
மன்னார்கோயிலில் வாழ்செங்கம ல
அன்னையோடத்தனை யன்புடன்வணங்கி ச்
சைத்திரமாதச் சாத்துமுறையா ம்
விசித்திர விழாவரு டந்தொறு நடாத்துவோ ன்
முப்போதுந்தொழின் முறைசெயும்போது ம்
எப்போதுந்தன திதயவாதரத்தொட ச்
செம்பகாரணியத் திருச்சரித்திரத்தை யே
நம்பிச்சிந்தித்து நயக்குமுள்ளத்தா ன்
பேருறுமிராசகோ பாலப்பெருமா ன்
சீருறுவிமானத் தென்கீழ்த்திசைக்க ண்
சிதலமாகிய கிருஷ்ணதீர்த்தத் தை
அத்தலம்வரையி லகழ்ந்து புதியவாய் ச்
சூழ்வரப்படிக டலங்குறக்கட் டி
வாழ்தருமைய மண்டபமியற் றி
எழின்மிகுதீபமெங்கணுமேற் றி
மொழியலங்கார முழுவதுஞ் செய் து
உபயநாச்சியா ரிருபாலும்முற ச்
சுபமிகிராசகோபால சுந்தரனை த்

தெப்பமீதேற்றித் திருக்குளமதனி ல்
முப்பிரதட்சண முறையாய்ச்சுற் று
வித்தமண்டபத்தில் விளங்குமூஞ்சலி ல்
சித்தமாமகிழ்வொடு மேழச்செய் து
சேவைசெய்தமலன் றிருவருட்கிரு பை
மேவியதவ முடை விஜயப்பிரதாப ன்
வார்சடையோன் வாழ் கைலையுமலரோ ன்
ஊர்தியுமிந்திர னும்பலுலோக் கி
விசனமெய்தி மெலிந்துநா ணி
அசரமாய்ப்பறப் பனவாய் மிருகமா ய்
இழிதிணையாகி யியலும்வண்ண ம்
பொழிகதிராலிருள் போகப்புனி த
இருநான்குகால்களு மிணையிலாநகா சு
தருமணியும்மரைத் தளமுறழ்தட்டு ம்
சியமேய்ப்பச் செய்தபோதிகைகளு ம்
ஆயத்தகாத அழகுடைக்கொடுங்கையு ம்
பூரணமதியைக் கொடுபொத்திய து
தாரணமாகச்சார்த்தியபரப்பு ம்
நவமணியிழைத்த நவபொற்கலசமு ம்
தவநலமிஃதெனத் தரணியோர்சாற்றவு ம்
விளங்குமநேக விசித்திரமா க
வளந்தருவெள்ளியால் மகாரதஞ்செய் து
மீனமதியின் விழாவிற்கோபால ன்
தானேறியுலாவத் தந்தவரோதய ன்
வாசுதேவப்புரி வள்ளல்பேரருளா ல்
தாசீலுத்தியோகஞ் சதுருடன்பெற் று
விளங்கியதிக மேன்மையோடோங் கி
வளம்பெறுநீதி மநுமுறைசெலுத் தி
அரசருஞ்செயற்கொணா யாகங்கள்முடித் து
வரசரோருகன்புரிவாவிகடிருத்தி த்
தண்ணீர்ப்பந்தருந் தங்குசத்திரங்களு ம்
உண்ணீர்க்கூபமு மொழுங்கினுண்டாக்கி ச்
சாற்றருங்கன்னிகை தானமுஞ்செய் து

பேசாற்றியேழைகளைப் போசனமருத்தி க்
கல்வியுமவர்க்குக் கற்பித்துப்பின்ன ர்
நல்வகையுத்தியோகங்களு நல்கி க்
காத்திரட்சிக்குங் கருணைசேர்மனத்தோ ன்
பாத்திராபாத்திர மறிதருபண்பின ன்
மேலாமறையிஃதே யெனவிளங்கு ம்
நாலாயிரப்பிர பந்தத்துணற்திரு ப்
பாசுரம்புகழு மிராஜகோபால ன்
தாசனெனவே சாற்றுநற்பெய ர்
தாங்கியநாகைபட் டணத்தசீலாகி ய
வேங்கடராயலு நாய்கமேன்மைய னே

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கார்திகழ்கிருஷ்ணாரணியத்திற்குணபாற்கடற்றிரா நவமணிசொழிக்கும்
சீர்திகழநாகைப்பதியிடைத்தாசில் செயுமதிகிரிகுலத்திலகப்
பேர்திகழ்வேங்கடராயலு நாய்சர் பிரமரமணுகுருச்சோலை
ஏர்திகழ் மான்மியத்தினைத்தமிழா லிசைத்தருள்வாயெனவியம்ப
மதிமிகுசூதமுனிவராற் புகன்றமாபாரதத் தரிவம்சம்
கதிமிகுத்தோங்கு பிரமாண்டபுராணங் காந்தநாகரகண்டமிவற்றுள்
துதிமிகுதென்றுவரா மான்மியத்தைத்தொகுத்துறு கற்பனைநிறைத்து
நிதிமிகுதருதண்டமிழ்ச் செயுளாகநீடுபல்லெழிலுறப்புனைந்து
அணிபெறு மன்னார்கோயிற் புராணமாகப்பேர் தந்தியற்றினனால்
திணிபெறு தமிழ்ச்சாகரத்தினைக்கடந்த திரனற்புல் வர்கடிலகன்
மணிபெறுசேடன்மீத்துயில்வோன்றாள்வணங்குவோன்றிரிசிரபுரத்தில்
கணிபெறு வாழ்க்கைக் கோவிந்தபிள்ளையெனுங் கவிவலதிவாகரனே
கம்பரோயென்று மற்றைநாவலரைக் கழறுதன்மதிநிகர்முகமென்
றிம்பரிற்கூறுமிலக்கண மேய்க்குமிராச கோபாலனேழியவிச்
சம்பகாரணியத் தமிழுமக்கம்பர் தமிழுமொற்றுமையுறநோக்கில்
அம்புவியிட்டத்திற் கோவிந்தபிள்ளையன்றி நேரொருவராகுவரோ.

கூட்டுறவென்பது கூட்டரவென மரீஇயது.

-----



ஸ்ரீ

உபயவேதாந்ததேசிகர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ மன்னனார் கோவிலென்னும்

# மன்னார்கோயிற்புராணசங்கிரகம்.

இது மஹாபாரத ஹரிவம்சசேஷ தருமத்தில்-கூ௰-முதல்-ச- அத்தியாயங்களாலும். பிரமாண்ட புராணத்தில்-கூ௰-முதல்-ச- அத்தியாயங்களாலும் ஸ்காந்தாகர கண்டத்தில்-ளகூ௰-முதல்-௫ - அத்தியாயங்களாலும். விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இம்மூன்று புராணங்களிலும் - சொல்லப்பட்ட மன்னார்கோவில் மஹத்துவத்தில்-சிலவற்றைச் செந்தமிழ் விருத்தப்பாவாய்ச் செய்யப்பட்டிருக்கின்றன.

இந்த மன்னார்கோவில் ஸ்தலமானது - அருள் கொடுத்திட்டடியவரை யாட்கொள் வானமருமூரணியரங்கமான ஸ்ரீரங்கந் திருப்பதிக்குக்கிழ்பால்- ௫-யோசனை தூரத்திலிருக்கின்ற - சீரார்செங்நெல்கவரிவீசுஞ் செழுநீர்த்திருக்குடந்தைக்குத்தெற்கு- உ - யோசனை தூரத்தில்-வண்டுவராபதி மன்னன்மருவியுறைகின்ற மன்னனார் கோவிலென்பது மன்னார்கோயிலென வழங்கிவருகின்றது.

இதற்கே சம்பகாரணிய மென்றும் - தக்ஷிணத்து வாரகையென்றும்-வாசுதேவ புரியென்றும் பெயர்கள்.

இத்தலத்தில் - ஸ்ரீ வாசுதேவமூர்த்தி - ஸ்ரீதேவி பூதேவியோடும்-பெருமாள் - ஸ்ரீ ராஜகோபால மூர்த்திதாயார் ஸ்ரீ செங்கமலவல்லி நாச்சியார் சுயம்புவிமானம் தீர்த்தங்கள் ஹரித்திராநதி சங்கதீர்த்தம் சக்கரதீர்த்தம்-கிருஷ்ணதீர்த்தம் ருக்குமணிதீர்த்தம் கெஜேந்திரதீர்த்தம் க்ஷீரசாகரதீர்த்தம் கோப்பிரளயதீர்த்தம் கோபிலநாததீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம் இது தெக்ஷணத்து வாரகையாகையால் - ஸ்ரீதுவாரகையிலுள்ளபடியே ஒன்பது தீர்த்தங்களும் மிகவும் மஹத்துவம் தங்கியனவாகவே யிருக்கின்றனவற்றில் கங்கைக்கு- ஸ்ரீமந்நாராயணனுடையபாத ஸ்பரிசத்தால் அதிமஹத்துவ முண்டாகியிருக்கிற கங்கையிற் புனிதமாய காவிரிநடுவுப்பாட்டுப் பொங்குநீர்பரந்து பாயுமென்கிறபடியேயுள்ள காவேரிசங்கம முள்ளதான ஹரித்திராநதி -ஸ்ரீராஜகோபாலன் கோபிகாஸ்திரீகளுடனே ஜலக்கிரீடை செய்து சர்வாங்க சம்பந்தமுடையதாகையால். இது சகலதீர்த்தங்களிலும் விசேஷ மஹாத்

திய முள்ளதாய் கோபிகளுடைய மஞ்சள் கலந்தமையால் ஹரித்திரா நதியென்றும் பெயர்பெற்றதா யிருக்கின்றது. இதின் கரையில் - பிரம தேவர் பிருகுமஹாருஷி லட்சுமிதேவியார் அக்கினிதேவன் ராஜசேகர ராஜாமு சுகுந்தச்சக்கரவர்த்தி கோப்பிரளயர்- கோபிலர் ஆகிய இவர்க ளிருந்துதவஞ் செய்து இவர்கள் மனோரதமும் பூரணமாகிலீலா விபூ தியிலுள்ள சகலவிதபாக்கியங்களேயும் அடைந்து கடைசியில்-சாசுவத மான நித்தியவிபூதி சுகத்தையும்-பெற்றார்கள்.

பூர்வம் பிரமதேவர் தன்னிற்சிறந்த தேவரில்லை யென்று ஈசுவரா பிமானத்தைக்கொண்டார்-அப்பொழுது அவர் சிருஷ்டித்தொழிலை மற ந்து பிரமைகொண்டார்-மேல் சனகாதிநான்கு முனிவர்களுடைய போ சனையால் பிரமதேவர் இச்சம்பகாரணியத்தில் வந்து ஸ்ரீ வாசுதேவனை க்குறித்துத் தவஞ்செய்தார் அவர் தவத்துக்கிரங்கிச் சுவாமிபிரசந்ந ராகி அந்தப்பிரமையை நீக்கிநின்ற நான்குமுகனுகிச் சிருஷ்டிக்கும்படி வல்லமையைக் கொடுத்தருளினார். உடனே பிரமதேவர் இத்தலத்தில் விமானமுண்டாக்கி அந்த விமானத்தின்கண் ஸ்ரீ ராஜகோபாலனை யெ ழுந்தருளப்பண்ணுவித்து எக்காலமும் இதில் தேவரீரெழுந்தருளியிரு ந்து சேவைசாதித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார் அப்படியே சுவாமி யெழுந்தருளியிருந்து சேவைசாதிக்க பிரமதேவர் சேவித்து ஆனந்த மடைந்து ஸ்துதிசெய்தமையால் சுயம்புஸ்தல மென்று பெ யராயிற்று.

உ - பிருகு முனிவருடைய பாரியாள் - அசுரர்களுக்கு ஒத்தாசை செய்தநிமித்தம் பெருமாள் திருவாழியானது அவளை வதஞ்செய்ய இச்சங்கதியை மேருவடியில் தவஞ்செய்திருக்கின்றபிருகுமுனிவருக்கு அசரீரி வாக்குத்தெரிவிக்க அதற்கு அவர் யோசித்துப்பாராமல் இங்க னஞ செய்தோன் தன்பத்தினியைப்பிரிந்து வருத்தப்படக்கடவனென் று சபித்துவிட்டபின் ஸ்ரீஹரியாலேவிய சக்கரத்தாலாயிற்றென்றுதெ ரிந்து தன்னைத்தான்காக்கிற சினங்காக்க காவாக்காற்றன்னையே கொல் லுஞ்சினம்-என்கிறபடியே அவர்மிகுந்தவிசனப்பட்டு சாமியைச்சபித் ததோஷம் - நீங்குவதற்கானமார்க்கத்தைப் பிரமதேவர் மூலமாய்த்தெ ரிந்துகொண்டு இந்தச்சம்பகாரணியத்தில் வந்து அரிதான தவத்தைச் செய்து ஸ்ரீ ராஜகோபாலனுடைய கிருபையால் லட்சுமியைத்தனக்கு ப்புத்திரியாகப்பெற்று அந்த புத்திரிக்குப் பார்க்கவியென்று பெயரிட்டு அதிக பக்தியுடனே இந்தத்தலவாசம் பண்ணிக்கொண்டிருந்தார். இப்

பாலந்தப்பார்க்கவியென்கிற மகாலட்சுமி பிதாவின்மனதின் படிக்கே இவிடத்திலிருந்து - ஸ்ரீமந்நாராயணனைக்குறித்துத் தவஞ்செய்து தன தெண்ணப்படிக்கு நாராயணனை விவாகம்பண்ணிக்கொண்டு தன்பிதாவுக்குண்டாயிருந்த தோஷம் சுவாமியால் நீங்கும்படிசெய்வித்து சுவாமியின் பிரீதிதனதுபிதாவின் மீது மிகவுமுண்டாயிருக்கும்படியாகப்பகவானைவணங்கிப் பெற்றுக்கொண்டாள்.

௩. கெருடாழ்வார் தன்தாயாரானவினதைசிறியதாயாகியகத்துருவுக்கு உளழியஞ்செய்கின்ற குறைவை நீக்குவதற்காகத்தேவலோகத்துக்குப்போய் அமிர்தகலசத்தை யெடுக்கும்போது-தேவேந்திரனுடைய ஏவலாலே அக்கினிதேவன் தடைசெய்தான் அப்போது மாதுருவாக்கிய பரிபாலனம்பண்ணவந்த கருடாழ்வார் அக்கினிதேவனைச்சபித்துவிட்டுத் தான் வந்தகாரியத்தை முடித்துக்கொண்டுபோயினர். அப்பால்கெருடாழ்வார் சாபத்தால்வருத்தப்பட்டுத் தனதுகாந்தியும் உஷ்ணமுமிழந்து அந்தச்சம்பகாரண்யக்ஷேத்திரத்துக்குவந்து ஸ்ரீராஜகோபாலனைவேண்டித்தவஞ்செய்தான் அப்போதுசுவாமிபிரசன்னராகிக் கெருடனுல்வந்தசாபத்தையும் போக்கி அவனுக்கு முன்னிலுமதிகப்பிரபையையும் உஷ்ணத்தையும் கொடுத்தருளினர்.

௪. இராஜசேகரனென்னுமரசன் - எக்கிய சீலனென்கிற முனிவரால் முன்செய்யப்படிருந்த உபகாரத்தை மறந்ததனல்- எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைசெய்ந்நன்றி கொன்றமகற்கு-என்கிற படிக்கு நன்றிமறந்ததானகிருதக்கினத்து வதோஷத்தையடைந்து ராச்சியத்தை விட்டு நீங்கிப்பயித்தியங் கொண்டு ஆசாரமின்றிப் பிச்சையெடுத்துண்டு திரியும்போது சிலவருஷங்களுககுப்பின் அவ்வுபகாரஞ்செய்த எக்கிய சீலமுனிவருடைய ஆசிர்மத்துக்குப்பிச்சைக்குவர- அம்முனிவர்கண்டு அரசனென்றறிந்து மிகவுமனமிரங்கி உபசரித்து ஸ்ரீவாசுதேவனுடைய திருத்துவாதசாட்சரியை உபதேசித்துச் சம்பகாரணியத்துக்குப்போய் தவஞ்செய்யென்றனுப்பினர் அப்படியே ராஜசேகரன்வந்து அத்தலத்தில் அம்மந்திரத்தைத்தியானித்துத் தவஞ்செய்ய ஸ்ரீ ராஜகோபாலன் சேவைசாதித்துப் பூர்வராச்சியத்தை யாளும்படி இம்மையில் பாக்கியத்தையும் மறுமையில் மோக்ஷத்தையும் கொடுத்தருளினர்.

௫. முசுகுந்தச் சக்கரவர்த்திமோக்ஷத்தைஅபேக்ஷித்துச்சிவனைப்பிரார்த்தனைசெய்தபோது சிவன்றோன்றி ஓ - சக்கிரவர்த்தியே நீர்வி

ரும்பிய மோக்ஷத்தைக் கொடுக்கும்படியான அதிகாரமெனக்கில்லை சாய்கொண்டவிம்மையுஞ் சாதித்து வானவர் நாட்டையும் நீகண்டுகொள்ளென்று வீடுந்தருமென்றும் வீடுடையானென்றுஞ் சொல்லுகிறபடியே அந்த அதிகாரம் முகுந்தனன் ஸ்ரீமந் நாராயணனுடைய தாதலால் அவருடைய துவாதசாக்ஷரியை நானுமக்குபதேசிக்கிறேன் நீர் சம்பகாரணியம்போய் அத்தலத்திலிந்த மந்திரத்தைத் தியானிப்பீராகில் எம்பெருமானுமக்குச் சேவைசாதித்துமதுமனோபீஷ்டத்தைப் பூரணமாக அருளுவானென அப்படியே முசுகுந்தச்சக்கிரவர்த்தி இத்தலத்தில்வந்து தவஞ்செய்யும்போது ஸ்ரீ ராஜகோபாலன் பிரசன்னராகிச் சேவைசாதித்து அவரபீஷ்டத்தின்படி மோக்ஷத்தையுங் கொடுத்தருளினர்.

௬. கோப்பிரளயர் கோபிலரென்னு மிரண்டுமுனிவர்கள் செய்த தவத்துக்கிரங்கிப் பக்தவச்சலனன ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவர்களைத்துவாரகாபுரிக்குவரும்படியாக அனுக்கிரகம்பண்ணினர் அவர்கள் தவத்தினல்சிலகாலம் கிரமித்தபின் துவாரகையைநோக்கிப்போகிறமார்க்கத்தில் சேமமுடை நாரதரைக்கண்டு வணங்கிச்சேவித்துத் தங்களுக்குப்பகவான்ஆக்ஞாபித்திருந்ததைச் சொல்லக்கேட்ட நாரதர்ஸ்ரீகிஷ்ணபகவான்சுடரொளியாய் நின்றதன்னுடைச்சோதிக்கெழுந்தருளினர் துவாரகையிலிருக்கும் ஸ்ரீ ருக்குமணி பிராட்டியார் திருமாளிகையைத் தவிர மற்றமுழுமையும் சமுத்திரங்கொண்டுவிட்டதே இப்போதங்கே போய்ப்பயனென்னவென அம்முனிவர்களிருவரும் மிகுந்ததுக்கத்தையடைந்து வருத்தப்படுவதைப்பார்த்துங் கிருபைகூர்ந்து அவர்களுக்கு ஸ்ரீமந் - அரிவாசுதேவனுடைய திருத்துவாதசாக்ஷரியை உபதேசித்து நீங்கள் சம்பகாரணியம்போய் பெருநீர்த்திரைபெழுகங்கையிலும் பெரிய தோர்தீர்த்தபலந்தருவதாகிய ஹரித்திராநதிக்கரையிலிருந்து இம்மந்திரத்தைத்தியானித்துத் தவஞ்செய்புங்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானே வந்து உங்கள்மனோபீஷ்டத்தைப் பூரணமாக்கிச்சேவைசாதித்தருளுவானென்று சொல்லக்கேட்டமுனிவர்கள் அப்படிக்கே அந்தத்தலத்தில் வந்து தவஞ்செய்யும் போது ஸ்ரீ ராஜகோபாலன்சேவைசாதித்து உங்களுக்கு யாதுவேண்டுமென- தேவரீர் துவாரகையில் கிருஷ்ணவதாரஞ்செய்து நடத்தி யஅற்புதசேவைகளையெல்லாம் தெரிசிக்கவேண்டுமென்று கோப்பிரளயமுனிவரும் கோபிலமுனிவரும் பிரார்த்தித்துக் கேட்க பக்தவத்சலரான சுவாமிகிருபைகூர்ந்து இந்தச்சம்பகாரணியத்

னைத்தெக்ஷிணத்துவாரகையாக்கித் தேவகியார்வயிற்றிலிருந்துதித்தது முதலாகிய அவசரங்கள் முப்பத்திரண்டையும் தனித்தனியே சேவை சாதித்தருளி அவர்கள் மனோபீஷ்டத்தையும் பூரணமாகக் கடாக்ஷித்தருளினார்.

அந்த அவசரங்களிலே.

முதலாவது.— உற்பத்தி யன்றிலும் அளவன்றியிலும் ஒழிவிலன்பரந்தென்கிறபடியே - நிறைந்து பூரணமாய் இருந்தபோதிலும் மண்ணின்பாரநீக்குதற்கே வடமதுரைப் பிறந்தானென்றும்வசுதேவர் தம்முடையசித்தம் பிரியாததேவகிதன் வயிற்றிலத்தத்தின் பத்தாநாட் டோன்றியவச்சுதனென்றுஞ் சொல்லுகிறபடியே பூமிபாரம்நீங்குவதின்பொருட்டுத் தேவகியினுடைய கெர்ப்பத்திலுண்டாகிப்பிறப்பன்றியிருக்கிறவிபுவாகியும் சதுர்புஜத்துடன் நாந்தகம்,சங்கு,தண்டு,நாணொளிர்,சாரங்கம்,திருச்சக்கரம், ஏந்துமென்கிறபடியே பஞ்சாயுதங்களையுந் தரித்துக்கொண்டு பதினாயிரம்பாலசூரியனுதித்தாற்போல் திருவுடம்பு வான் சுடரென்கிறபடியே தேககாந்தியுடன் - சித்தர் சாரணர் கின்னரர் கெந்தர்வர்கள் தேவர்களாலேதுதிசெய்யப்பட்டும் ரத்தினமயமான மகரகுண்டலங்களாலே சோபிக்கப் பட்டும் மங்களாசீர்வாதங்கள் செய்யப்பட்டு மிருக்கிறதேவனைக் கோப்பிரளயர் கோபிலராகியமுனிவர்களிருவருஞ் சேவித்தார்கள்.

இரண்டாவது.—கம்ஸனுடையபயத்தாலேஒருத்திமகனாய்ப்பிறந்தோரிரவி லொருத்திமகனாயொளித்துவளர, என்கிறபடியே திருவாய்ப்பாடியில் நந்தகோபன்மனையிலே சேர்ந்து - பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை அணைத்தாரவுண்டுகிடந்த, விப்பிள்ளையென்கிற படியே ஆயர்பாடியிலிருக்கையில் கஞ்சன்கருக்கொண்டுநின்மேற் கருதிறச்செம்மயிர்ப்பேயை வஞ்சிப்பதற்குவிடுத்தானென்கிறபடியே-கம்ஸனாலேயேவப்பட்ட பூதகியென்கிற வொருபசாசு உலகத்திலுள்ளபாலர்களைக்கொல்லுகிறநிமித்தியமாய்ப் பெண்ணுருவாகி- நள்ளிருள் வந்த பூதனையென்கிறபடியே ௰௬- வயதுப்பெண்போலே சுந்தரமானவேஷத்தைத்தரித்துப் பிருந்தாவனத்தில்வந்தாள். அந்தப்பாலசாதகி- ஸ்தனத்தில் விஷத்தைக்கலந்து நந்தகோபருடையஅழகானகிரகத்தில் வந்து சூதிகாக்கிரகத்திலிருக்கப்பட்ட கோபாலனனசிசுவை யெடுத்துநிரம்பவும் பிரீதியுடனே ஒக்கலைவைத்து முலைப்பாலுண்ணென்று தந்திடவெ

ன்கிறபடியே,குழந்தாய் என்னுடையமுலைப்பாலைப்பானம்பண்ணென்றுசொல்ல கள்ளத்தினால்வந்தபேய்ச்சி பெருமுலையூடுயிரை-வற்றவாங்கியுண்டவாயானென்னுஞ் சொல்லுகிறபடியே அந்தப்பூதகியினுடைய விஷத்தோடேகூடின முலைப்பாலை அமிர்தம்போலேஅவளுயிருடனெல்லாச்சத்தையும்பாலரூபியான அரிபானஞ்செய்தார்-பூதனைதலைகீழே சாய்ந்துவிழுந்தவுடனே யசோதையும் இன்னம் சாதுசித்த முள்ள கோபிகாஸ்திரீகளும் மஹா பயங்கரப்பட்டுபிரக்ஞைதப்பினார்கள். அப்போது அரிரோதனஞ்செய்கையால் கோபிகாஸ்திரீகள் மங்களாசீர்வாதஞ்செய்தார்கள் இப்படிப்பட்ட ஆச்சரியமான அவசரத்தைக்கண்டு முனிவரிருவரும் சேவித்தார்கள்.

மூன்றாவது.—அழகுபொருந்திய- நந்தகோபரசத்தில் குழகனேயென்றன்கோமளப்பிள்ளாய் கோவிந்தாவென் - குடங்கையில்மன்னிஎன்கிறதாயானயசோதையின்மடியிலேயிருந்து ஸ்தன்னியபானஞ்செய்துகொண்டு நீலமேகசியாமளராய்பேரோழில் இளஞ்சிறுதளிர்போன்ற ஒருகையாலொருமுலை முகநெருட வென்கிறபடியே - மிகுந்தவெழிலையுடைத்தான இளமைபொருந்திய சிறியதளிர்போன்ற ஒருகையால் மற்றொரு ஸ்தனத்திலிருக்கிற பாலைத்தொடைத்துக்கொண்டும் என்முகத்தை யெழிலகொளவின்திருக்கண்ணிணைநோக்க என்கிறபடியே அழகுபொருந்திய தாமரைப்பூப்போன்ற கண்களாலே தாய் முகத்தைப்பிரீதியுடன் அடிக்கடிபார்த்துக்கொண்டு மிருக்கிறதேவகிபுத்திரனான அந்தப்பாலகோபாலனை அந்தமுனிவரிருவருஞ் சேவித்துச்சந்தோஷித்தார்கள்.

நான்காவது —யசோதையின்மடியில்-பாலரூபியாகவிருந்து நக்க செந்துவர் வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பன் முளையிலக வென்கிறபடியே மாதாவின்முலைப்பாலினாலே விளங்கப்பட்டபற்களாகியமுத்துக்கள்பிரகாசிக்கப்பட்ட திருவதரத்தோடுகூடிய திருமுகமும் மந்தகாசமும்கன்னப்பிரதேசத்தில்ஒளிவிடுகிறகுண்டலங்களும்எல்லோருக்கும் ஆனந்தசந்தோஷத்தைப் பெருக்குகிறபாலசரீரமுங்கொண்டு மாசூணாச்சுடருடம் பாய்மலராதுகுவியாது மாசூணாஞானமாயென்கிறபடியே ஞானஸ்வரூபமான சுந்தராகாரமாய்ப் பார்க்கப்பார்க்க அழகு விஞ்சியும் அக்காலத்திலே சராசரங்களான சகலலோகங்களையும் தேவரீர் பிரமா ருத்திரன் இந்திரன் சித்தர்கள் வித்தியாதரர்கள் அப் சரஸ்திரிகளுடன் கூடியகெந்தர்வர்கள் கின்னரர்கள் இவர்களை யெல்லாம்

வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே யென்கிறபடியேதன் வாய்க்குள்ளேசராசர யசோதைக்குக் காட்டியும்சபடஜாரசோரனாகியும் அமரர்க்கரியானைத் தமர்கட்கெளியானை யென்கிறபடியேபிரமாதிகளுக்குக்கிடைக்காமல் பக்தர்களுக்குக்கிடைக்கும்படி-ஆச்சரியமானதிருமேனியுடன் கூடிவிளங்குகின்ற எங்குநிறைந்த ஹரிஸ்வரூபியானஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவுடம்பு வான்சுடர் செந்தாமரைகண் கைகமலந் திருவிடமே மார்வமயனிடமே கொப்பூழொருவிடமுமெந்தைபெருமாற்கரனேயோ வென்கிற திவ்யமங்கள விக்கிரகத்தைக்கண்டு சேவித்தார்கள்.

ஐந்தாவது.—நவரத்நங்களாலேசோபிக்கப்பட்டநந்தகோபருடையகிரகத்தில்- உழந்தாணறு நெய்யோர்தடாவுண்ண விழந்தாளெரிவினலிர்த்தெழின்மத்தின் பழந்தாம்பாலோச்சப் பயத்தாற் றவழ்ந்தான் முழந்தாளிருந்த வாகாணீரென்கிறபடியே.அந்தமுழங்கால்களாலும் கைகளாலும் தவழ்ந்தோடிக்கொண்டும் அதிகசுந்தரமாயும்உச்சாகத்துடன்பிரியமாய்ப்பார்க்கிற மாதாவினுடையசந்தோஷத்தினாற் பிரகாசிக்கப்பட்ட முகத்தைப்பார்த்துக்கொண்டும் - செங்கமலக்கழலிற்சிற்றிதழ்போல் விரலிற்சேர்திகழாழிகளுங்கிண்கிணியும் அரையிற்றங்கியபொன்வடமுந்தாளினன்மாதுளையின் பூவொடு பொன்மணியுமோதிரமுங் கிறியுமங்கலவைம்படையுந்தோள்வளையுங்குழையும் மகரமும்வாளிகளும் சுட்டியுமொத்திலகவென்கிறபடியே-பாலியத்துக்கு யோக்கியங்களான ஆபரணங்களாலும், பூசுஞ்சாந்தென்னெஞ்சமே யென்கிறசந்தனப்பூச்சுமுதலானவைகளாலும் அலங்கரிக்கப்பட்டும்- பிறர்களுக்கரியவித்தகனென்கிறபடியே பிரமாதிகளுக்குச் சுலபமன்றியும்,பத்துடையடியவர்க்கெளியவனென்கிறபடியே கோபஸ்ரீகளுக்குச்சுலபனாகியும்,குண்டலகாந்தியோடு குழற்கற்றையுடன்கூடியும் - அயர்வறுமமரர்களுக்கதிபதியென்கிறபடியே தேவதேவர்களுக்குப்பதியாகவுமிருக்கிற பாலகோபால சேவையைச் சேவித்தார்கள்.

ஆறுவது.—தடங்தோள்களுள்ளளவும்கைநீட்டிஎன்றும்வந்துகாண்மின்கள் கையெல்லாம் நெய்வயிறுஎன்றும் சொல்லுகிறபடியேஒருகையில் வெண்ணெயையேந்திக்கொண்டும் மற்றொருகையினால் அதனுக்கேற்றகூத்தையாடி என்கிறபடியேஅபிநயங்காட்டிநிர்த்தனஞ்செய்துகொண்டும் திருமுகம்வாசச்செங்கமல மென்கிறபடியேதாமரைப்புஷ்பத்தையொத்ததிருமுகமும் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வடியோடிநீண்டவப்பெரியவாயகண்களென்கிறபடியே கருவிழியுடன்

பக்கம்பெருத்துச் செவ்வரியோடிநீண்டு விஸ்தாரமானகண்களுடன்கூடிவிளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசெக்கமலத்தலர் போலுங் கண் கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலேபோலுந் திருமேனியைக்கண்டு நமவென ஸ்தோத்திரஞ்செய்தார்கள்.

ஏழாவது.—பாலரூபத்துடன் கட்டிநன்குடுத்த பீதகவாடையென்றும் கருங்கண்டோகைமயிற்பீலியணிந்தென்றும்சொல்லுகிறபடியே ஒற்றைவஸ்திரத்தைத்தரித்து மயிற்றோகையாலே சிரசிலலங்கரிக்கப்பட்டும் முடிச்சோதியாயுனது முகச்சோதிமலர்ந்ததுவோ-வென்கிறபடியே விகசிதமான அம்புயம்போன்றதிருமுகத்துடன் துவராடையுடுத்தொருசெண்டு சிலுப்பிக்க வராகமுடித்துக்கலிக்கச்சுகட்டி யென்கிறபடியே செண்டும்கடையாவின்கழிகோற்கைச் சறையினாென்கிறபடியே இடையர்களுடையகோலத்தரித்தும் இட்டமானபசுக்களை யினிதுமறித்து மென்கிறபடியே பசுக்கூட்டங்களை மெள்ளமெள்ள மேய்த்துக்கொண்டும் குடையும் செருப்புமென்கிறபடியே பாதுகையைப்பாதகமலங்களிலே தரித்துக்கொண்டு விளங்குகின்ற கோபாலனான மையகண்ணாள் மலர்மேலுறைவாளுறை மார்பினன்செய்ய கோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமானென்கிற லட்சுமிபதியைச்சேவித்தார்கள்.

எட்டாவது.—பலபலவே ஆபரணமென்கிறபடியே அனேகநவரத்தின பூஷணங்களா லலங்கரிக்கப்பட்டு - அழகுபொருந்திய நந்தகோபருடைய கிரகத்திலே விதானமேபோலமேன் மேலுமிகவெங்கும்பரந்ததின்கீழ்க்காயாம்பூமலர்ப்புறங்களன்னமாலையுடன்-குத்துவிள க்கெரியக் கோட்டுக்காற் கட்டிலின்மேல் மெத்தென்றபஞ்ச சயனத்தின்மேலேறி என்கிறபடியே வெண்பட்டு அஸ்மானகிரியினாலலங்கரிக்கப்படும் புஷ்பங்களாற் பரப்பப்பட்டும் மங்களதீபங்களாலே பிரகாசிக்கப்பட்டுமிருக்கிற அம்ஸதூளிகா மஞ்சத்தில் சயனம்பண்ணிக் கொண்டிருக்கிற கருமாமுகிலுருவாவென்கிறபடியே நீலமேகசியாமளமான பாலகோபாலரூபியாயும்இடைப்பெண்களுக்குப்பதியாயும்,சுந்தரமாயும், யசோதைகையினால் ஆலிங்கனம்பண்ணப்பட்டுமிருக்கிறகுழந்தை மத்தினாலோசைப்படுத்ததயிரரவமென்கிறபடியேதயிர்கடைகிற ஓசையினாலே விழித்துக்கொண்டும்விளங்கப்பட்ட கண்களுடனே தோள்வளைகள் இடுப்புச்சலங்கைகளால்லலங்கரிக்கப்பட்டும்மருவிநின்றிருநெற்றியிற்சுட்டியசையவென்கிறபடியேதிலதத்தினால்விளங்கப்பட்டநெற்றியுடன்பிரகாசமுள்ளகுண்டலங்களோடுஉறியார்ந்தவெண்ணெயையொளியாச்செ

ன்றென்கிறபடியே வெண்ணெ திருடுகிறதாக- ஓசைப்படாமற்சென்றும் கோபிகைகள் கடைகிறதயி ரோசையுடனே தீபச்சாயையில் சத்தப்ப டாமல் மறைந்தும் கள்ளவிழியை விழித்துப் புக்கென்கிறபடியே பார்த்துச்சென்று வாய்க்காற்றினாலே விளக்குகளை அணைத்தும் இடைப் பெண்களை வஞ்சித்தும், சாரகிருத்தியத்துடன வெண்ணெயைத் திருடிக்கொண்டு மிருக்கிற - தேவகிநந்தனை இளவாய்ச்சியர்கள் கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்பிரானைச் சேவித்தார்கள்.

ஒன்பதாவது.—ஒருக்கா லிடைச்சேரியிலுள்ள பெண்கள் விளையாட்டு நிமித்தியமாய் வனத்தில்வந்து பூஷணங்களையும் வஸ்திரங்களையும், கரையில்வைத்துப் பச்சிலைமரங்களி னிழலினாலே கறுத்தும் தெளிந்துமிருக்கிற காளிந்தியின் ஜெலத்தில் பிரவேசித்துவிளையாடும்போது- சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றிற்கடியனாயோடியென்கிறபடியே அவர்களுடைய பூஷணவஸ்திரங்களை யெல்லாம் அபகரித்துக்கொண்டு கரையிலிருக்கும் பூங்குருந்தேறி யிருத்தியென்றும் குருந்திடைக் கூறையென்றும்குருக்கத்தின்மரத்தின்மேலேறிக் கிளையிலே கட்டிப்போட்டுச் சந்தோஷத்தையடைந்து கொண்டிருக்கும்போது கீழேஜலக்கிரீடை பண்ணின பெண்களெல்லாரும் வந்துகரையிலே பார்த்து வஸ்திரபூஷணங்களைக்காணமல்லஜ்ஜையுடனே கைகளினாலும் சுந்தரங்களான தலைமயிர்களாலும் தங்களுடைய அங்கங்கள்தெரியாமல் மூடிக்கொண்டு கண்களை மூடுகிறதினாலும் புருவங்களை நெறிக்கிறதினாலும் மனோகரங்களான அபிப்பிராயங்களுடன் கூடியவிலாசங்களினாலும் கோலச்சிற்றாடை பலவுங்கொண்டு நீ யேறியிராதே கோலங்கரிய பிரானே - குருந்திடைக் கூறைபணியாயென்றும் விதியின்மையாலது மாட்டோமென்றும் பல்லாருங்காணமே போவோம் பட்டைப்பணித்தருளாயே யென்றும் விடத்தேளெறிந்தாலேபோலவேதனையாற்றவும் பட்டோமென்றும், அஞ்சவுரைப்பா ளசோதை ஆனடவிட்டிட்டிருக்குமென்றும் கோமளவாயர் கொழுந்தேயென்றும் சொல்லுகிறபடியே நயத்தாலும் பயத்தாலும் தங்கள்வேதனையினாலும் தங்களுக்கவனோடுண்டான சம்பந்தத்தாலும்,வஸ்திரங்களை யாசிக்கிறவர்களாயிருக்கிற சகல கோபகன்னிகைகளாலே மரத்தின்கீழே சூழப்பட்டவனாகியும்- விளையாட்டுப் புத்தியுடனவர்களைப் பார்த்து இரண்டுகைகளுஞ் சேர்த்து அஞ்சலி - பண்ணுங்கோளென்ன அவர்களும் தோழியுநானுந் தொழுதோந் துகிலைப்பணித் தருளாயென்ன அக்காலத்தில் அந்தக்கன்னிகை

களோடு லீலாமானுஷ விக்கிரகனைத் தேவர்களுக்குப்பதியான ஸ்ரீகிருஷ்ணனைச் சர்வலோகசரண்யாவென்று சேவித்தார்கள்.

பத்தாவது.—சிறுவிரல்கள் தடவிப்பரிமாறச் செங்கண்கோடச் செவ்வாய் கொப்புளிப்பச்குறு வெயர்புருவங் குடிலிப்பக் கோவிந்தன் குழல்கொடூதினபோ தென்கிறபடியே செங்கழுநீ மொட்டுப்போலிருக்குங்கைவிரல்கள்ரந்திராபூரணஞ்செய்ய-செவந்ததிருக்கண்கள்கோடச் செய்யவதரங்கொப்புளிக்கும்படி பொல்லாங்குழல்வாசித்துக்கொண்டும்கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுகவிழ்ந்திறங்கிச்செவியாட்டில்லாவேஎன்கிறபடியேஒருபசுவின்பக்கத்தில்ஒருபக்கமாய்ச்சாய்ந்துகொண்டும் அப்பசுவினால்நக்கப்பட்டஒருதிருவடித்தாமரையுடன் கூடியும்·வேணுகானவிந்யாசத்தினால்பாலேவருஷிக்கும்படியான பசுக்களாலேசூழப்பட்டும்பறவையின்கணங்கள்கூடுதிறந்துவந்து சூழ்ந்து படுகாடுகிடப்பவென்கிறபடியே பக்ஷிக்கணங்கள் கூட்டைவிட்டுப்படுகாடு கிடக்கப்பட்டும் தேவர்களால் சேவிக்கப்பட்டும் ஸ்துதிக்கப்பட்டுமிருக்கிற வேணுகோபாலஸ்வாமியைக் கண்டுசேவித்தார்கள்.

பதினோராவது.—கிருஷ்ணன் திருட்டைப் பிடிக்கிறதற்காகக் கதவைக் கொஞ்சம் திறந்து வைத்து ஒரு கோபியானவள் வீட்டின் உள்ளறையில் வெண்ணை தயிர்முதலானவைகளை நாளுமுறியேற்றி நன்கமையவைத்த தனையென்கிறபடியே ஓரிடத்திலே வைத்துக் கதவைக்கொஞ்சங் திறந்துவைத்துத் தான்மறைந் திருக்கும்போது படலடைத்த சிறுகுரம்பை நுழைந்து புக்கென்கிறபடியே கண்ணன் முன்பின்பக்கங்களை அடிக்கடிபார்த்துக்கொண்டு அடியோசைப்படாமல் அவளகத்தினுட்புகுந்து அவள்செய்திருக்கிற கபடத்தைத் தெரியாதவர் போலே அவள் வைத்திருக்கிற வெண்ணிறத்தயிர்முதலானவைகளை யெல்லாம் பொத்தவுரலை கவிழ்த்த தன்மேலேறித் - தித்தித்தபாலுந்தடாவினில் வெண்ணையு மெத்தத்திருவயிறார விழுங்கியென்கிறபடியே புசிக்குங்காலத்தில் அந்தகோபியினாலே காணப்பட்டார்- கண்ட அந்தக்கோபிகை கதவைச்சாத்திச்சங்கிலிபோட்டுத்தாயாரான அசோதையினிடத்தில் தெள்ளியவாய்ச் சிறியநங்காய் உறிமேலைத் தடாநிறைந்து வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணையைவாரிவிழுங்கி யிட்டுக்கள்வனுறங்குகின்றான் வந்து காணென்று பிள்ளையின் சேஷ்டையைச் சொல்லவந்தாள்- அப்போது மத்துறுகடை வெண்ணைகள்வினிலுரவிடையாப்புண்டு உரலினோடிணைந்திருந் தேங்கிய - வெளிவெத்திற மென்றும்

பெருஉரலில் பிணிப்புண்டிருந் தங்கிருமாமருதமிறுத்தவிப் பிள்ளையென்றும் ஈடுபடும்படி யசோதைவீட்டிலும் உரலிலேகட்டப்பட்டும் மாயாவிலாசத்துடன்கூடிய கண்ணனைப்பார்த்து அந்தக்கோபிகைஆச்சரியப்படும்படியான சேவையைச்சேவித்தார்கள்.

பனிரண்டாவது.—காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்து என்கிறபடியே பிருந்தாவனத்தில்அனேகம்பசுக்களையும்ஓட்டிக்கொண்டுபோய்மேய்த்து காலிப்பின்னேவருகின்ற வென்கிறபடியேபின்சென்றுஇடதுகாலைக்கொஞ் சம்வளைத்துக்கொண்டுமற்றொருகாலினால் நேராகநின்று வேயின்குழலூதி வித்தகனாய் நின்றவென்கிறபடியே மூங்கிற்பொல்லாங்குழலினாலே ஆச்சரியமாய்க்கானஞ் செய்துகொண்டுநின்று நடந்தும்இடதுபக்கத்திலேதலைசாய்த்துக்கொண்டும்கணங்களோடு மின்மேகங்கலந்தாற்போல வனமாலைமினுங்கவென்கிறபடியே விசித்திரமான புட்பங்களால் செய்தவனமாலையினால் அலங்கரிக்கப்பட்டும் மயிலிறகுகளினாலும் கன்றுகள்கட்டுகிறகயிறுகளினாலும் - அலங்கரிக்கப்பட்டுத் தேவகந்தர்வசித்தர்களாலே சேவிக்கப்படுவதான - சேவையைச்சேவித்தார்கள்.

பதின்மூன்றாவது.—பாதாம்புஜத்தால்பின்பக்கமாக இடதுபுறங்காலில்தொட்டுக்கொண்டு இடதுகாலைநேராகவைத்து - இரண்டுகால்களாலும் வித்தியாசமாய்நேராய்நின்றுகொண்டு காடுகளூடுபோய்க்கன்றுகள்மேய்த்தென்றும் ஆக்கள்போகவிட்டு என்றும் மருண்டமான்கணங்கள் மேய்ச்சைமறந்துமேய்ந்தபுல்லும்கடைவாய் வழிசோரவென்றும் பறவையின்கணங்கள் கூடுதுறந்து வந்து ஆழ்ந்து என்றும் சொல்லுகிறபடியே கன்றுகளுடன்கூடியபசுக்களாலும்மான்களாலும்பக்ஷிகளாலும் சூழப்பட்டும் பசுக்களை மேய்க்கும்கோல் நுனியிலிரண்டுகைகளையும்வைத்துக்கொண்டு அதின்மேல்சிரசையும் வைத்துக்கொண்டு என்னையுநோக்கி யென்னல்குலுநோக்கி யேந்திளங்கொங்கையும் நோக்குகின்றார் என்கிறபடியேகோபிகைகளுடையதாமரைமொக்குப்போலிருக்கும் ஸ்தனங்கள் முதலான அவையவங்களைப் பிரீதியுடன்பார்த்துச்சந்தோஷிக்கும் தேவகிகுமாரன் சேவையைச்சேவித்தார்கள்.

பதினாலாவது.—பிருந்தாவனத்தில்பசுவைக்கறககருமித்தியமாய் கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் நின்றொழிந்தே னுன்னைக்கூவியென்கிறபடியே வலதுகையால்பால்கறக்கிறபாத்திரத்தை

யும்இடதுகையிலணைகயிறுபிணைகயிறுகளைத்தரித்துக்கற்பகவிருக்ஷத்தி னடியிலே நிற்கும் ஆயர்பெருமானென்று - இடையர்களுக்குப்பதியும் செகத்பிதாவுமான கிருஷ்ணனாகச்சேவைசாதித்தார்.

பதினைந்தாவது.—அரிக்குத்தீங்குவருநிமித்தியமாய்தியபுந்தீக்கஞ் சனுன் மேற்சினமுடையன் சோர்வுபார்த்து மாயந்தன்னால் வலைப்படு க்கிலென்கிறபடியே கம்சனாலேவப்பட்ட இரண்டு அசுரர்கள் விளாம் பழத்தினுடைய பசுவின்கன்றினுடையவுமான ரூபங்களைக்கபடமாகத் தரித்துக்கண்ணனுக்குத்தீங்குநினைத்து-சமையம்பார்த்துக்கொண்டிருந் தார்கள்அக்காலத்திலிடைப்பிள்ளைகள்அந்தப்பழத்தைஆசைப்பட்டுஅ டையாமல் தீனர்களாகக் கண்ணனைப்பார்த்துவிளாங்கனிவேணுமென் றுயாசிக்ககண்ணன்கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ளவசுரர்தம் மைச் சென்றுபிடித்துச் சிறுகைகளாலேவிளங்காயெறிந்தாய்போலும் என்கிறபடியே அந்தக்கன்றின்வேஷமான அசுரனைபிடித்துக் கன்றுகு ணிலா யென்கிறபடியே அடித்தபோது இரண்டு அசுரர்களும்-பிராண ன்போய்க் கீழேவிழுந்தார்கள் இந்த ஆச்சரியமானசேவையைச் சேவி த்தார்கள்.

பதினாறாவது.—தடம்படு தாமரைப் பொய்கைகலக்கி விடம்படு நாகத்தை வால்பற்றி யீர்த்துப் படம்படும் பைந்தலை மேலெழப்பாய்ந் தாயென்றும் காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன்றீய பணத்துச்சில ம்பார்க்கப்பாய்ந்தாடியென்றுஞ்சொல்லுகிறபடியே சர்ப்பங்களுக்கு ரா ஜாவாகியும் குரூரனாகியும் படத்தை விரித்துக்கொண்டும் காலகோடி விஷத்தினால் அணுகப்படாமலு மிருக்கிற காளியனென்கிற சர்ப்பத் தைப் பிடித்து அதின் படத்தின்மே லிடதுகாலினாலே நின்று - இடது கையினாலே அதின் வாலைப்பிடித்துக்கொண்டு-வலதுகையினா லபிநயங் களைக்காட்டிக்கொண்டுநிர்த்தனஞ்செய்கிறசேவையைச்சேவித்தார்கள்.

பதினேழாவது.—நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த ம ணிமார்பா வென்கிறபடியே - இடைப்பெண் களினுடைய சம்போகத் தின் அடையாளங்களால் அழகுபொருந்தியும் - ராதையின் உயர்ந்தப யோதரங்களால் நழுவப்பட்ட முத்துமாலை முதலான அலங்காரத்து டன் கூடியும் அவர்களுடைய காடாலிங்கனத்தால் மறைந்தும் மறை யாமலு மிருக்கிற சந்தனப்பூச்சுடன் கூடியும் இடம்விட்டுநழுவியதோ ள் வளைகள்செவிமலர்களாற்சோபிக்கப்பட்டும் கடைக்கண்கள் சிவந்து

ம், அதரத்தின் சிவப்புமாறிப் பூரணச்சந்திரனையொத்த வதனத்துட ன் மணிகளால் விளங்கும் தலைமயிருடன் பொன்னிற வாடையைத் தாங்கி யென்கிறபடியே மஞ்சளடையாளமுள்ள பீதாம்பரம் நழுவியு ம், நழுவு முப்புரிநூலொடு மானுரி யிலங்கு மார்பினிலென்கிறபடியே யக்ஞோப வீதத்துடன் பிரீதைகளான கோபிகைகளினுடைய பல்லு நகக்காய அடையாளங்களால் சோபிக்கப்பட்டு, மூன்றுவளைவுள்ள பி ரம்பைத் தரித்துக்கொண்டு இப்படி வரும்போது நாச்சிமார்களும், ஊ டுதல் காமத்துக்கின்ப மதற்கின்பங் கூடி முயங்கப்பெறினென்கிற பிர ணய கலகமானது பின் காமத்திற்குச் சாவஹ மாகையாலே- தேவிமா ராவார் திருமகள் பூமியேவ மற்றமராட் செய்வாரென்கிறபடியே பரி சனங்க ளெல்லாம் தேவிமாரிட்ட வழக் காகையாலே பொன்னியலு மாடக் கபாடந் திறவாதேயிருக்க மன்னாரும்துவராடையுடுத் தொரு செண்டு சிலுப்பிக்க வராகமுடித்துக் கலிக்கச்சு கட்டிச் சுவரார் கதவி ன்புறமேவந்து நின்றீரொன்று பூச்செண்டு முதலான அலங்காரத்துட ன் கதவடியிலே தேசமுடையாய் மாமான்மகளே-நந்தகோபாலன் ம ருமகளே, நப்பின்னாய் கந்தங்கமழுங் குழலீ, மணிக்கதவின்றாழ்திறவா யென்று அழகையும் முறைமையையும் சம்பந்தத்தையும் சொல்லிச் சத்தியபாமையை நேசநிலைக் கதவை நீக்கச்சொல்ல-திருவாசல் காக்கி ற தேவிமார்களும்தேடித் திருமாமகள் மண்மகளிருப்ப மடவாரொடு நீபோய்க் கூடிக் குரவைபிணைந்து, என்னுக் கவணாவிட் டிங்குவந்தாய் உன்மாயங்கள் மேலைவானவரு மறியார் உன்கைதவம் மண்ணும் விண் ணு நன்கறியும். இன்ன மங்கேநட நம்பி நீயேயென்று ருக்குமணியும் சத்தியபாமைப் பிராட்டியும், மிகுந்த காதலோடிருக்க பாதிநேரத்தி லுறக்கஞ் சோதித்துப்போய்க் கிரீடைசெய்து இப்போ திங்குவந்தீர் இன்னு மங்கேயேபோகு நம்பியென்று வஸ்திராபரணங்க ளிடம்விட் டு நழுவியிருப்பதையும் அவயவங்கள் வாடி அழகுமாறிக் குறிகள்பட் டிருப்பதையும், நிரூபிக்க வண்டுவராபதிமன்னனும், வேரிமாறுதபூமே லிருக்கு மெல்லியலே ஆலிநாடனருள்மாரி மங்கைவேந்தன் வாள்வீசு ம்பரகாலன்-நம்மை வழிபறித்தான். அப்போது தோள்வளையும் குழை யுநழுவ-அறுகளை - கன்னிறைந்துநிந்து கழையுடைந்து கால்சுழன்று பின்னுதிராவயிற்றிற் பேயேதிரிந்துலவக் கொன்னவிலும்வெங்கானத் தூடுபோய்த் தேடும்போது அப்போது வந்த சின்னங்களேதவிர வே

ருகச் சங்கிக்கவேண்டாகா னென்ன-நாச்சிமார்களும் காரார்மேனிநிற த்தெம்பிரானே-வண்ணந்திரிவு மனங்குழைவு மானமிலாமையும் வாய் வெளுப்பும் கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து மஞ் சளு மேனியும் வடிவுங்கண்டேன். நின்புள்ளுவ மறியாதவர்க் குனை நம்பியென்றார்கள். மன்னனாரும் தபோதனர்களான ருஷிகளினிடர்தீர் க்கவேண்டி வேட்டையாடும்போது கொவ்வைக்கனிவாயைப் பைங்கி ளி கோதி வெளுத்துச் செந்தூளியால் பரியட்டமும் சிவந்ததென்ன. அந்தக் கெண்டை யொண்கண்மடவாரும். மூன் பரகாலன் வழிபறித் தானென்றும் பின் வேட்டையாடினேமென்றும். கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனான பாம்பணையார்க்குந் தம்பாம்புபோல் நா வு மிரண்டுளவாயிற்றே வென்றார்கள். அப்போது மன்னனா ரருளிச் செய்கிறார். ஓ மட்டவிழுங் குழலிகளே உங்களுக் கென்னிடத்தி லதிக சங்கையிருந்ததாகில் மகத்தான சபதங்களைச் செய்கிறேன் என்னிடத் தில் பிரசாத முண்டாமளவிலும் தண்ணிரிலே முழுகிக்கிடக்கிறேனெ ன்ன, பாற்கட லுளானென்றும் பாற்கடலுட் பையத்துயின்ற பரமனெ ன்றுஞ் சொல்லுகிறபடியே திருப்பாற் கடலிலே யோகநித்திரை கொ ள்ளுகிற வுனக்கு ஒருபடுகுழியில் முழுகுவது பாரமோவென்ன-சர்ப் பத்தின் தலையிலே கையைவைக்கிறேனென்ன-சென்றாற் குடையா மி ருந்தாற் சிங்காதனமாம், நின்றா லிரு திருப்பாதுகையாமெனவும் பை கொளுகத்தணையனான வுமக்கு ஒரு புழுவின்றலையிலே கையைவைப் பது பரமோவென்ன, அல்லது தீக்குழியிற் குதிக்கிறே னென்றார் கோடிசூரியப் பிரகாசமான திருவாழியை யேந்துகிறவுமக்கு ஒருதீக்கு ழியி லடிவைப்பு பெரிதோவென்ன. அன்றி-ஒரு கல்லுண்டையை வி ழுங்குகிறேனென்றார். காரேழ்-கடலேழ்-மலையேழுலகுண்டு மாராவயி றனான வுமக்கு ஒருபரல் விழுங்குவது வருத்தமோவென்ன. ஆனாலெ ந்தத் தேவதாசந்நிதியி லெந்தப்பிரமாணஞ் செய்யச்சொன்னாலும் செ ய்கிறேனென்றார் அயர்வறு மமரர்க ளதிபதியென்று சகலதேவர்களும் நீரிட்டவழக்காயிருக்க உமக்குத்தேவதையென்பதொன்றுண்டோவெ ன்ன, அப்போது ராஜகோபாலனும் என்னுடைய சத்தியமெல்லாம் அசத்தியமாச்சுது, என்றாற்சொல்ல அடுப்பது ஒன்றுமில்லை,அபராதி யைத் தோஷத்தையே பச்சையாகக்கொண்டு பொறுப்பது பெரியோ ர்கடன். துவளாயென்னு மதில் நாயகனாகிவீற்றிருந்த மணவாளர் திரு வாசலில் நின்று தபிக்கிறானென்றால் அந்தக்குறை உங்களுதன்றோ ஆ

கையா லெவ்விதத்திலும் பொறுப்பித்துச் சேரவிடுவீர்களென்று பிரார்த்தித்தார். தேவிமார்களும் வேரிமாருதபூமே லிருப்பிருப்பாள் திருமுகப்படிக்கு கொண்டல்வண்ண விங்கே போதராயே கோயிற்பிள்ளாயிங்கே போதராயேயென்று, உம்முடைய குற்றங்களையெல்லாம் செங்கமலநாயகியார் பொறுத்தார் உள்ளே யெழுந்தருளி இருவருமான சேத்தியில் பல்லாண்டு பல்லாண்டா யெழுந்தருளி இன்னமொரு நூருண்டிருமென்று தேவியார் முன்பே யெழுந்தருளப்பண்ண. அப்போது அந்தமில் பேரின்பத்தோ டவயவங்களெல்லாம் புதுக்கணித்து வீற்றிருந்த மணவாளரான ராஜகோபாலன் சேவையை ஆழ்வார் திருமக ளாண்டாளென்றும், பெரியாழ்வார் பெண்பிள்ளையென்றும் பைங்கமலத்தண்டெரியற் பட்டர்பிரான்கோதையென்றும், வில்லைத் தொலைத்த புருவத்தாளென்றும், போகத்தில்வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழென்றும்,சொல்லுகிறபடியே ஆபிசாத்தியத்தினுலும் தனக்கு நிகரில்லாத ஆண்டாளும் கண்ணனென்னுங் கருந்தெய்வமென்றும், கோலானிரைமேய்த் தாயனுயென்றும், குற்றமற்ற முலைதன்னைக் குமரன் கோலப்பணைத்தோளோடு, அற்றகுற்றமவைதீர வணையவமுக்கிக் கட்டீரோயென்றும், யாசிக்கும்படியாயும், கோவர்த்தனனைக் கண்டக்காற் கொள்ளும்பயனொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும் அள்ளிப்பறித்திட் டவன்மார்பிலெறிந் தென்னழலைத் தீர்வேனென்று கோபத்தினுலும், பிரியில் தரியாமையினுலும், அனங்கதேவா வென்றும், உன்னையு மும்பியையுந் தொழுதேனென்றும், நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்க ணென்னை யுய்த்திடுமினென்று மன்மதனை வேண்டியும், ஆசைப்படும்படியான காமனைப்பயந்த காளையென்கிறபடியே மன்மதனுக்கு மன்மதனை ஜாரசிகாமணியைச் சேவித்தார்கள்.

பதினெட்டாவது.—செம்பொனிலங்குவலங்கைவாளி திண்சிலை தண்டொடுசங்கமொள்வாள், உம்பரிருசுடராழியோடுகேடக மொண்மலர்பற்றி, யென்கிறபடியே சங்கம்-சக்கரம்-பாசம்-கரும்புவில்- பாணம் அங்குசங்களைத் தரித்த சதுர்ப்புஜங்களையுடைய மன்மதாகாரத்துடன் பங்கயம்போலொத்த முகத்துடன் கூடினவராகவும், ஷட்கோணசக்கரத்தி னடுவிலே பிரகாசிக்கிற மதனகோபாலமூர்த்தி சேவையைச் சேவித்தார்கள்.

பத்தொன்பதாவது.—அடியசைந்தாய மடவாரோடு நீபோய்க்கூடிக் குரவைபிணை கோமளப்பிள்ளாயென்று, குரவை யாய்ச்சியரோடு கோத்ததுமென்கிறபடியே ராஜமண்டலத்தி னடுவி லிருந்துகொண்டும், தேவர்களுக்கெல்லாம் தேவனாகியும், தன்னிரண்டுபக்கங்களிலும் இரண்டு கோபிகைகள் கராக்ரத்தைத் தன்னுடைய கரங்களாலே பிடித்துக்கொண்டு தான் நடுவிலேநின்று நிர்த்தனஞ் செய்துகொண்டும், வேணுகானஞ்செய்துகொண்டும், அழகுபொருந்திய முத்துமாலைகளாலும், தோள்வளைகளாலும் படிச்சோதி யாடையோடும், பல்கலனென்கிறபடியே-நாலுதிக்கிலும் சோபிக்கப்பட்டும், பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னு மதிள்நாயகராக வீற்றிருந்த மணவாளனென்கிறபடியே பதினாறுயிரம் கோபாங்கனைகளினடுவிலே மின்னலையொத்த பீதாம்பரத்துடன் நீலமேகம்போல அவர்கள் மத்தியில்அனந்தரூபியாகப் புலிநகப்பதக்க முதலான பூஷணங்களா லலங்கரிக்கப்பட்ட லட்சுமி பதியான ஸ்ரீஹரியினுடைய ராஜகேளி அவசரத்தைச் சேவித்தார்கள்.

இருபதாவது.—முல்லைநன்னறுமலர்வேங்கைமலரணிந்து,பல்லாயர்குழாநடுவே யென்கிறபடியே-விளையாட்டு நிமித்தமாய்க் கோபகுழந்தைகளுடன்கூடி வீதியில் நடந்துவரும்போது ததிபாண்டனென்னுங் கோபவிர்த்தன்வீட்டில் பிரபு தன்னுடைய சகாக்களுக்குத் தெரியாமல் மறைந்து அவனனுமதியி லிருக்கையில் ஸ்ரீஹரியானவ ரிங்கில்லையென்றே னே ததிபாண்டனைப் போலேயென்று கிருஷ்ணாவதாரத்தி லொருபொய்யே உத்தாரகமென் றிருக்கும் பிரபன்ன சிகாமணியான அவருடைய புண்ணிய பரிபாகத்தால் தன்னுடைய அவதாரங்களையெல்லாம் அவருக்குச்சேவைசாதித்த அவசரத்தையும்சேவித்தார்கள்

இருபத்தோராவது.—பாலரூபியாயும் புஷ்டியுடன் கூடிய அங்கங்களுடனே பாலியத்துக் குசிதமான பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டும், இசைந்த சுருட்டைமயிர்களால் செங்கமலப் பூவிற் றேனுண்ணும் வண்டேபோற் பைங்கிளிகள்வந் துன்பவளவாயை மொய்ப்பவென்கிறபடியே விளங்குகின்ற முகத் தாமரையை யுடைய நீலமேக சாமளராகியும், மயிற்றழைப்பீலி சூடியென்கிறபடியே அழகான மயிற்றோகையினால் சிரசில் அலங்கரிக்கப்பட்டும், காளிந்தி நதியினுடைய ஓரத்திலுள்ள பச்சிலை மரங்களினிழலால் மறைக்கப்பட்ட அழகான ம

ணலிலே-கோபர்கள் கோபியர்கள் நடுவில் மன்மதனுக்கு மன்மதனாயி ருந்து சிநேகர்களுடன் கட்டியசோறுங் கறியுந் தயிருஞ் சலந் துடனு ண்டாய்போலு மென்கிறபடியே-தேவர்களுக்குங் கிட்டாத தயிர்பொ ழியும் ததியோதனப் பிரசாதத்தை இடதுகைவிரற் சந்துகளில் ஊறு காய்களுடன் வைத்துக்கொண்டு சாப்பிடுகிற அவசரத்தில் பரிகாச ஆ சியத்துடன் கொம்பும் பிரம்பும் கக்கத்தில் வைத்துக்கொண்டு குதுகு லத்துடன் கோபர்களாற் புசிக்கப்பட்டவராகவும், அவர்கள் சேஷத் தைத் தான்வாங்கியும், தன்சேஷத்தை அவர்களுக்குக்கொடுத் துண் ணும் அப்பிராகிருதராகவும், அநாதிகளுக்கு சகல அபீஷ்டங்களையும் கொடுக்கிறவராகவும், அநேக பக்தர்களை ரக்ஷிக்கிறதில் தீக்ஷித்துக்கொ ண்டு மிருக்கிற தேவதேவனுடைய சேவையைச் சேவித்தார்கள்.

இருபத்திரண்டாவது.—ஆயிரங் கண்ணுடை யிந்திரனாருக்கென் றுயர் விழவெடுப்ப, பாசன நல்லனபண்டிகளாற்புகப்பெய்த வதனையெ ல்லாம் "போயிருந்தங்கொரு பூதவடிவுகொண் டுன்மகனின்றுநங்காய் மாயமதனையெல்லாமுற்றும் வாரிவளைத்துண்டிருந்தானென்றும், வ ழுவொன்றுமில்லாச்செய்கை வானவர்கோன் வலிப்பட்டு முனிந்துவி டுக்கப்பட்ட மழைவந்தெழுநாள் பெய்து மாற்றடைப்ப மதுசூதனெ டுத்து மறித்த மலையென்றுஞ் சொல்லுகிறபடியே பிரதிவருஷம் கோ குலவாசிகள் இந்திரனுக்குச்செய்யும் பூசையைக் கிருஷ்ணபகவானது அனுமதிப்படி நிறுத்திக் கோவர்த்தனகிரிக் கீடாய் இந்திரன் கோபத் தினாலுண்டான பெருமழையினால் பொழிய-தீனரான கோபிஜனங்க ளுடன்,பசுமுதலானபிராணிகளைப் பகவான் ரக்ஷிக்கவேண்டிய நிமித்த ம் கோவர்த்தனமென்கிற பெரிதான பர்வதத்தை விளையாட்டாகவெடு த்துக் குடையாகப்பிடித்துத் தனதுகடாக்ஷாமிர்த விருஷ்டியினால்-கோ குலத்திலுள்ள கோபகோபி ஜனங்களுடன் கோக்களையும் ரக்ஷித்ததே வதேவனுடைய சேவையைச்சேவித்தார்கள்.

இருபத்துமூன்றாவது.—கோக்கள்கன்றுகள் கோபகுழந்தைகள் இம்மூன்றையும் கிருஷ்ணமகாத்மியத்தை யறியவேண்டிப் பிரமாவா னவர் அவைகளை அபகரிக்க நான்முகனு முன்னையறியாப் பெருமை யோனே முற்ற வுலகெல்லா நீயேயாகி மூன்றெழுத்தாய முதல்வனே யோவென்றும், எம்மாண்பிலயனான்கு நாவினாலு மெடுத்தேத்தி யீரிர ண்டு முகமுங்கொண்டு எம்மாடு மெழிற்கண்க ளெட்டினாலுந் தொ

ழுதேத்தி யினிதிறைஞ்சவென்றுஞ் சொல்லுகிறபடியே பிரமாதிகளா லு மறியக்கூடாத பெருமையையுடைய சக்தரூபியாய் அந்தப் பிரமாவி னுடைய நான்குநாக்கினாலும், நான்குமுகத்தாலும் எட்டுக்கண்களாலு ம் ஸ்துதித்தும்,சேவித்தும்,வாயாரப் பாடிக்கொண்டும் கிட்டி ஆனந்தி க்கும்படியான அனந்தரூபியான பகவான் அந்தக்கன்றுகள் கோபகுழ ந்தைகளாக வெவ்வேறு ரூபங்கொண்டிருந்த சேவையைச் சேவித் தார்கள்.

இருபத்துநான்காவது.—ஒருகோபிகையின் வீட்டருகிலுள்ள உ த்தியானவனத்தில் புஷபமண்டபத்தினடுவில் மந்தமாருதத்தா லசைய ப்பட்ட குட்மல்லிகைப்பூவினால் வாசித்துக்கொண்டும். அநேகபுஷ்பங் களாற் பரப்பப்பட்டும். சந்தனம் அகிற்கட்டைத் தூபங்களால் வாசிக் கப்பட்டு மெத்தென்றிருக்கிற பஞ்சசயனத்தின்மேலேறி யென்கிறபடி யே பஞ்சுமெத்தைப் படுக்கையில் ஜெகத்பதி சுகமா யிருந்துகொண்டு வெண்பட்டுடன் சகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டும் சந்தி ரன்போ லழகான திருமுகத்துடன் கூடியும் நற்புருவத்துடன் கூடியு ம் சர்வாங்க சுந்தரியாகியும், அழகுபொருந்திய பின்தட்டுடன்கூடியும் அபிப்பிராயங்களுடன் கூடிய அழகானபார்வைகளுடன்கூடியு மிருக் கிற ஒரு இடைப்பெண்ணை மடியில் வைத்துக்கொண்டு அவளுடைய தலைமயிர்களை சந்தனுதித்தயிலந்தடவிச் சீப்பினால்வார்ந்து விடுத்துக் கொண்டு கண்ணிமைகொட்டாமல் அவளுடைய அங்கங்களைப்பார்த்து ம் தொட்டும் அவளுடையஉதறுதலினாலே பயவார்த்தைகள் சொல் லியும் மிகுந்த சந்தோஷத்தை அடைந்து கொண்டு இப்படியாச்சரிய மான செய்கையுடன்கூடி யிருக்கிறகண்ணனைச் சேவித்தார்கள்.

இருபத்தைந்தாவது—'என்னதன்றேவிக்கன்றின்பப்பூவியாதாள் தன்னதன்காணவே- வன்னதப்புள்ளால்வலியப்பறித்திட்டவென்னத,, னென்றும் மட்டவிழுங்குழலிக்காய்வானோர் காவின்மரங்கொணர்ந்தா னென்றுஞ் சொல்லுகிறபடியே.சத்தியபாமையின் சந்தோஷத்துக்காக க் கண்ணன்சுவர்க்கலோகத்தில்தேவர்களுடன்யுத்தஞ்செய்து பாரிசாத மென்கிற கற்பகவிருக்ஷத்தை அபகரித்துச் சத்தியபாமையின் வீட்டு த் தோட்டத்தில்வைத்து அதின்புஷபங்களை ருக்மணிப்பிராட்டிகிரகத் தில் விழும்படிசெய்து சத்தியபாமையைச்சமாதானப்படுத்தினசேவை யைச்சேவித்தார்கள்.

இருபத்தாறுவது.—செமந்தகமணி- நித்தியம்-எட்டுப்பாரம் சுவர்ணம் உற்பத்திசெய்கிறது தன்வசத்தி லிருக்கிறத்தினாலே சத்தியபாமை அதிகநெருவத்துடனிருந்தாள். அவளுடையகெருவத்தைப்போக்கடிக்கவுஞ் சேமமுடைய நாரதனைத் தன்னியராக்கவுங்கோரி ஸ்ரீகிருஷ்ணபகவான்நினைத்தவுடனே நாரதர்வந்து சத்தியபாமையுடனே சொன்னார்.புண்யவிரதம்தவிர-மற்றையெல்லாப்பாக்கியமும்உனக்கிருக்கிறது. புண்ணியவிரதமென்பதுபுருஷனைப்பாரிசாத விருக்ஷத்தின்புஷ்பமாலையாலேகட்டிப் பிராமணனுக்குத்தானங்கொடுத்தால் ஜன்மஜன்மங்களுக்குமவரேபர்த்தாவாகலபிப்பாரென்றுஞ்சொன்னார். அந்தக்கபடந்தெரியாமல்அந்தவிரதத்தில்ஸ்ரீகிருஷ்ணனை நாரதருக்குச்சத்தியபாமைதானங்கொடுத்தாள். நாரதர்ஸ்ரீகிருஷ்ணனைத் தன்பிறகேஅழைத்துக்கொண்டுபோக யத்தனப்பட்டதைப்பார்த்துச் சத்தியபாமைவியசனப்படுகையில் கிருஷ்ணனவ்வளவு நிறைசுவர்ணங்கொடுத்தால்கிருஷ்ணனைக்கொடுக்கிறேனென்று நாரதர்சொன்னார். உத்தமஸ்ரீயான சத்தியபாமை கிருஷ்ணனை துலாரோகணஞ் செய்து மற்றொரு தட்டில் சுவர்ணங்களை வைக்கையில் “உலகுமழிசையு முள்ளுணர்ந்துதம்மிற்-புலவர்புகழ்க்கோலாற்றூக்க-உலகுதனை வைத்தெடுத்த பக்கத்தெம்மா நீர்மழிசையேவைத்தெடுத்தபக்கம்வலிது,, என்கிறபடியே-கிருஷணனைவைத்தபக்கம்வலிதாக சர்வசுவர்ணபாரமும்ஸ்ரீகிருஷ்ணனிறைக்குச்சரியாகாமற்போச்சுது நாரதர் பிரீதிவிரக்தியாகவேண்டியநிமித்தம் சத்தியபாமையானவள்ஸ்ரீகிருஷணனைவிட்டுவிடும்படி ருக்குமணிபிராட்டியை யாசித்தாள் ருக்குமணிபிராட்டிசுவர்ணத்தைத்தள்ளிப்போட்டு “தோளிணைமேலும்நன்மார்பின்மேலுஞ் சுடர்முடிமேலும்-தாளிணைமேலும்புனைந்ததண்ணந்துழாய் ,, தெய்வத்தண்ணந்துழாய்த்தாராயிலும்-தழையாயினுந் தண்கொம்பதாயினு மதின்வேராயினும் நின்றமண்ணாயினுங் கொண்டுவீசுமினேயென்கிறபடியேஅடிமுதல்நுனிவரையிலும்,துளசியினுடையமகத்துவந் தெரிந்தவளாகையாலே பகவானுக்குப்பிரீதியுள்ளது இதுவேயென்றறிந்து“தோளிசேர்பின்னைபொருட்டெருதேழ்தழீஇக்-கோளியார்கோவலனார்குடக்கூத்தனார் - தாளிணைமேலணி தண்ணந்துழா,, யென்கிறபடியே ஸ்ரீகிருஷ்ணன் திருவடியிலே சமர்ப்பித்த துளசீதளம் ஒன்றைவைத்தாள் ஸ்ரீகிருஷணன் மேலேபோனார் திருத்துழாய் பழுவாய் கீழேயிருந்தது துளசிபாரம் சரியான ஸ்ரீகிருஷ்ணன் ருக்குமணி பிராட்டிக்குச்சொந்தமானார் நாரதர்ஸ்ரீகிருஷணனுடையதி

ருவடியில்சமர்ப்பித்திருந்த திருத்துழாய்தமக்குக்கிடைத்த லாபத்தினா ல் சுவர்க்கலோகத்துக்குப் போனார் இப்படிப்பட்ட சவுரிசேவையைச் சேவித்தார்கள்.

இருபத்தேழாவது. தேவாதி தேவனாகியும் ஜெகத் பதியாகியும் "கோதைக்குழலாளசோதைக்குப் போதந்தபேதைக்குழவி,, யென் கிறபடியே யசோதைக்குப்பிள்ளையாகியும் "வார்கடாவருவியானைமாம லையின்மருப்பிணைக்குவடிறுத்துருட்டி,, யென்றும் ஓடைமா மதயானை யுதைத்தவனென்றுங் கஞ்சன்விட்ட வெஞ்சினக்களிறடர்த்த காளையெ ன்றுஞ் சொல்லுகிறபடியே கொழுத்தகுவலயாபீடமென்கிறமதயானை யை மர்த்தனஞ்செய்து மதுராபுரியில் மல்லர்களிடம் பிரவேசிக்கும் போது அரங்கின்மல்லலைக்கொன்று என்றும், மற்பொருதோளுடை வாசுதேவாவென்றுஞ், சொல்லுகிறபடியே மல்லர்கள்கண்ணுக்கு மிரு த்தியுவைப்போலவும், பெண்கள்கண்ணுக்கு மன்மதனைப்போலவும், ம னிதர்கண்களுக்கு ராஜாவைப்போலவும் ஜனங்களுக்குத்தயாரூபமாகவு ம் இப்படி ஆச்சரியப்படும்படியாய் அநேக விதங்களாகத் தோற்றுகிற சேவையைச் சேவித்தார்கள்.

இருபத்தெட்டாவது. அழகுபொருந்திய சூட்டுயர்மாடங்கள் சூ ழ்ந்துதோன்றுந் துவராபதியென்கிறபடியே துவாரகாநகரியல்மின்னொ ளிசேர் விசும்பூருமாளிகை மேலென்றுசந்திரன் போல்வெளுத்த உப ரிகையில் மன்னும்பவளக்கால் செம்பொன்செய் மண்டபத்துள்ளென்று ஞ்சொல்லுகிறரத்தினமண்டபத்தினடுவில் "நன்னறுஞ்சந்தனச்சேறுபு லர்த்த,,என்று சந்தனகளபகஸ்தூரியினால் வாசனைபொருந்தியும் தலை காணிமுதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற-பன்னுவிசித்திர மாய்ப்படுத்த பள்ளிமேலென்கிறபடியே சர்வோத்தமமான படுக்கைக ளால் குபேரன்போற் சுந்தரமாய்ச்சயனித்துக்கொண்டும்'திருமடந்தை மண்மடந்தையிருபாலுந்திகழத் தீவினைகள்போயகலவடியவர்கட் கெ ன்றுமருள்கடிந் திவ்வேழுலகத்தவர்பணிய வானோர்மகிழ்ந்தேத்த விரு ந்த இடமென்கிறபடியே வலதுபக்கத்திற்சுவர்ணம்போலேதேகமுடை ய வாணெடுங்கட்கன்னியராலிட்ட கவரிப் பொதியவிழந்தென்று ருக்கு மணிதேவியினால் சாமரம் வீசப்பட்டும் நீலமேகம்போலேகறுத்தும் ம ழைத்தடங்கண்மின்னிடையாரோடும் விளையாடியென்றும் சுகுமாராங் கியான சத்தியபாமையினாலே செய்யப்பட்ட சகல உபசாரத்துடன்

கையில்தாம்பூலங்கொடுத்தும் "தடங்கண்ணாரன்னவர்தமானேக்கமுண்டாங்-கணிமுறுவலின்னமுதமாந்தியிருப்ப,வென்கிறபடியே அடிகூடியவர்களுடையகடைக்கண்களாலேபார்க்கப்பட்டும் விமலமானபோர்வையுடன்கோபாலநாயகனாகியும் முகுந்தனாகியும்தயாநிதியாகியும் "சின்னநறுந்தாதுசூழ்போர்மந்தாரம்-துன்னுநறுமலராற்றுள்கொட்டி,, யென்னும் பாரிஜாத மந்தாரசெண்பகப்பூக்களாலலங்கரிக்கப்பட்டும்" அன்னநடையவரம்பையர்தங்கைவளர்த்த-இன்னிசையாழ்ப்பாடல்கேட் டின்புற்று,,என்கிறபடியே வேணு வீணை மிருதங்கமுதலான வாத்தியங்களால் சந்தோஷித்துக்கொண்டும்"ஆயிரங்கண்வானவர்கோன் பொன்னகரம்புக் கென்கிறபடியே சுவர்க்கலோகம்போலிருக்கிற கோயிலிலே மற்றொருவருக்கு மெட்டாத அற்புதமாய் விளங்குகிற சர்வோத்தமமான சேவையைச்சேவித்தார்கள்.

இருபத்தொன்பதாவது: பிறந்தவாறும் வளர்ந்தவாறும்பெரியபாரதங்கைசெய்ததவர்க்குத் திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோனமாயங்களும் என்றும் அவனேபின்னோர் தூதாகி - மன்னர்க்காகியென்றும் பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்தென்றும்-சொல்லுகிறபடியே பாண்டவர்களுக்குச் சகாயநிமித்தியமாய் தூத்தியஞ்செய்ய குருபுரிக்கிப் போகும் சமயத்தில் காயாமலர் நிறவாவென்று காசாம்பூநிறம்போலச் சாமளவர்ணனாயும் தாமரைக்கண்ணனுமென்கிறபடியே அம்புஜம்போல் கண்களுடன் கூடியும் பீதகவாடைப்பிரானாெமன்றுதிவ்வியபீதாம்பரதாரியாயும் பூந்தண்மாலைத்தண்டுழாயும் பொன்முடியும் வடிவும் பாங்குதோன்றும் பட்டுநாணும் என்கிறபடியே திவ்விய அலங்காரத்துடன் திவ்வியசந்தனம் பூசிக்கொண்டும் திவ்வியபுட்பங்களைச் சூட்டிக்கொண்டும் வேங்கடக்கோன் தானுமிழும்பொன் வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேனென்றும் அடைக்காய்திருத்தி நான்வைத்தேனென்றும் தாம்பூலங்கொடுத்துப் பின்செல்லும்பரிசாரர்களுடன்கூடியும்அநேகம்பேர்களால்பக்கத்தில் சாமரைகள் வீசப்பட்டும்கரும்போரோறேநீயுக்கும் குடையுமென்கிறபடியேகுடைபிடிக்கப்பட்டும்தாளம் வெண்டையங்களுடன் வந்திகளால் ஸ்துதிக்கப்பட்டும் சயின்னியங்கள் சேனபதிகளுடைய அஞ்சலிகளைப்பிரியத்துடன் குபேரனைப்பார்க்கிலும் சுந்தரமுள்ளவனையும் பார்த்துக்கொண்டும் பத்தருதவியை யென்கிறபடியே பாண்டவர்களுக்குப்பிராணனையும்ஆதியந்தமில்லாதவனென்று அனுதிய

யும் எங்கு முளன்கண்ணனென்று எங்கும் நிறைந்தவனாயும் பார்மி குத்த பாரமுன்னொழித்தவ னென்கிறபடியே பூபாரத்தைத்தீர்க்கவந் தவனாயுமிருக்கிற சேவையையும் சேவித்தார்கள்.

முப்பதாவது. பார்த்தற்குத் தேரொன்றை யூர்ந்தார்க்கென்றும் பார்த்தன் செல்வத்தேரேறுசாரதியாயென்றுஞ் சொல்லுகிறபடியேஅ ர்ச்சுனனுக்குச் சார்த்தியஞ்செய்யும் அருமாகடலமுதே யென்று தயா நிதியாயும் மயிலிறகினால் முடிசூட்டப்பட்டும் நீண்டபுருவங்களும் தக் கதாமரைக்கண்ணுமென்றுவிசாலங்களானகண்களுடன்கூடியும் மார்பி ல்திருமறுவுமென்று ஸ்ரீ வத்சத்தினால் அலங்கரிக்கப்பட்டதிருமார்புட ன் கூடியும் மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்றுளரெ ன்று நீலமேகம்போல்காந்தியுடன் கூடியும் சாந்தமூர்த்தியாயும்காமனு ர்தாதையென்று மன்மதனுக்கு மன்மதனாயும் பற்றலர்வியக்கோல் கை யிற்கொண்டு என்று இடதுகையில்கடிவாளத்தையும் வலதுகையில்கு திரைக்கொரடாவையும் தரித்து அனுமத்துவஜனுகி வணங்கின அர்ச்சு னனுக்கு ஆரெனக்குண்டுநிகர்சொல்லின் மாயனன்றைவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப்பொருள்தெரிய வென்கிறப டியே பிரமவித்தையை உபதேசித்துக்கொண்டும் தேர்க்குதிரையின்கு ளம்புகளால் துள்ளும் தூளிகள்படிந்த முகத்துடன்கூடியும் சாரத்திய சிரமத்தினாலுண்டான முத்துப்போல்விளங்கும் வேர்வைபிந்துக்களா ல் நிறைந்தநெற்றியுடன் கூடியும் தானேஉலகெல்லாம் தானேபடைத் திடந்து தானேயுண்டுமிழ்ந்து தானேயாள்வானேயென்கிறபடியே சக லலோகங்களுக்கும் சிருஷ்ட்டி ஸ்திதி சம்ஹாரங்களுக்குக் காரணனு யும்சேகத்பதியாயுமிருக்கிறபார்த்தசாரதிசேவையையும்சேவித்தார்கள

முப்பத்தோராவது.—இந்தப்படிபகவான் தன்னுடைய முப்பது அவசரங்களை ரிஷிக்குக் காண்பிக்கும்போது அவர்பகவானுடையஅந்த ந்தரூபங்களையுந் திவ்யாத்மசுவரூபத்தையுநினைத்து உயர்வறவுயர்நலமு டையவனென்றும் அயர்வறுமமரர்களதிபதியென்றும், கரந்தெங்கும் பரந்துளனென்றும்"நீராய்நிலனாய்த்தியாய்க்காலாய்நெடுவானாய்ச்-சீரா ர் சுடர்களிரண்டாய்ச்சிவனாயயனானு,,யென்றும்"தாளதாமரை யானுன துந்தியான்-வாள்கொணீண்மழுவாளியுன்னாகத்தான்-ஆளராய்த்தொழு வாருமமரர்க,, ளென்றும்"பூநிலாயவைந்துமாய்ப்புனற்கணின்றநான்கு மாய்த்-தீநிலாயமூன்றுமாய்ச்சிறந்தகாலிரண்டுமாய்-மீநிலாய தொன்று

மாகிவேறுவேறுதன்மையாய் - நீநிலாயவண்ணநின்னையார்நினைக்கவல்ல வென்றும் அன்றுநான்முகற்பயந்தவாதிதேவாவென்றும்,ஒன்றிரண்டு கண்ணினுனு முன்னையேத்த வல்லனே யென்றும், சாமவேத கீதனாய சக்கரபாணி யல்லையே யென்றும் வேங்கடமடைந்த மாலைபாதமே யடைந்து நாளுமுய்மினோ வென்றும் கேசவா புருடோத்தமா கிளர்சோதியா குறளாவென்றும் போயபிழையும் புகுதருவானின் றனவும் தீயினில் தூசாகும்படி மனத்தினால் சிந்தித்து வாயாரப்பாடி ஸ்துதித்து ஈஸ்வரனைப் பார்த்து உம்முடைய அதிக அபீஷ்டமான ரூபத்தைத்தர வேணுமென்று யாசித்தார் அப்போது பகவான் வலதுகையில் மூன்று வளைவுடன் கூடியபிரம்பைத் தரித்து மற்றொரு கையை "ஆயனாகியாயர் மங்கை வேயதோள்விரும்பினாய் ,, என்கிறபடியே விருப்பந்தோற்ற சத்தியபாமையின் தோளில் வைத்துக்கொண்டு திருவடிகளை வித்தியாசமாய் வைத்துக்கொண்டு முறுவலுடன் ருக்குமணியினால் பார்க்கப்பட்டும்வடிவிணையில்லா மலர்மகள் மற்ற நிலமகளிருபாலுந்திகழும்படி சம்பகவனத்தி ன்டுவில் ஸுவர்ண விமானத்தில் ராஜகோபால ரூபியா யேழுநின்றார் அப்படிப் பட்டசவுரியின் விலாசரூபத்தைப் பார்த்த ரிஷிபூர்ணகாமராய் பரமாத்மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே யென்கிறபடியே சர்வதிக்கிலும் தெண்டம் சமர்ப்பித்துமங்களாசாசனம்செய்து லோகரக்ஷணத்தின் நிமித்தியமாய்வானிளவரசு வைகுந்தக் குட்டன் வாசுதேவன் என்கிறபடியே அப்பிரா கிருதமான பரமபதத்தில் நித்தியசூரிகளோ லக்கத்தில் செங்கோல் நடத்துகையைவிட்டு தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே தமருகந்த தெப்பேர் மற்றப்பேர் என்கிறபடியே பக்தர்களுக்கு வசியமாக அவர்களுகந்தவடிவேவடிவாகவும் அவர்களிட்ட பேரேபேராகவும் வந்து வணங்கினவர்கள் தாபத்தைத்தீர்க்கும் பரந்தாமா வானசுவாமியே இப்படிப்பட்ட ராஜகோபால வேஷத்தைத் தரித்து சம்பகவனத்தில் வசிக்கும் உமக்கு தெண்டன் சமர்ப்பிக்கிறேன் வான்வர்தம்மை யாளுமவனும்நான் முகனும் சடைமுடி யண்ணலும் சிந்தித்தேத்தித் திரிவரோயென்றும் "தாதுலாவுகொன்றைமாலை துன்னுசெஞ்சடைச்சிவன்,நீதியால்வணங்குபாதநின்மலாநிலாயசீர் ,, என்றுஞ் சொல்லுகிறபடியே பிரமன்-சிவ னிந்திரன் விண்ணவர்களால் அறியப்படாதவனாயும், பூசிக்கப்படு மவனாயும், " சந்தோகன்பவுழியனைந் தழலோம்புதைத்திரியன் சாமவேதி ,,யென்றும் " நாவிருமூர்த்திதன்னை நால்வேதக்கடலமுதை

மேலிருங்கற்பகத்தை வேதாந்தவிழுப்பொருளின், மேலிருந்தவிளக்கை யென்றும் "அங்கமாறுவேதநான்கு மாகிநின்றவற்றுளே,த ங்குகின்றதன்மையா யென்றுஞ் சொல்லுகிறபடியேஸமஸ்தவேதங்களாலும், சாஸ்திரங்கள் முதலான சகலவாக்குகளாலும், அறியக்கூடாத மூர்த்தியும், செய்யையும் உடையவனுமாயும் "பலபலவேயாபரணம் பேரும்பலபலவே, பலபலவேசோதிவடிவுபண்பெண்ணில், பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தின்பம், பலபலவேஞானமும்பாம்பணைமேலாற்கேயோ ,, வென்கிறபடியே ஒரு பாசுரமிட்டுச்சொல்லக்கூடாமல் பலபலவென்னும்படியான ஆபரணம், திருநாமம், வடிவழகு,இன்பமறிவு முதலானவைகளை யுடையவரான தேவரீர் என்கண்ணுக்கு விஷயமான விந்த ராஜகோபாலரூபத்துடன் எப்போதும் ரம்மியமான விந்த சம்பகாரணியத்தில் நித்தியவாசஞ் செய்யவேணுமென்று பிரார்த்திக்க பக்தவத்சலராகையாலே அப்படியே ஆகட்டுமென்று அந்த சம்பகவனத்தில் அந்தரிஷிகளால் பூசிக்கப்பட்டும், வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பாய்க்கொண்டு அதிகவிருப்பத்துடன் நித்தியசேவை கொடுத்தருளுகிறார்.

முப்பத்திரண்டாவது.—அப்போது அந்தரிஷிகள் பகவானைப்பார்த்து, ஓய்பக்தவத்சலரோ துவாரகையில் கோமுகைநதியில் பதினாறுமாயிரவர் தேவிமா ரென்கிறபடியே பதினாறுயிரங் கோபஸ்திரீகளுடன் ஜலக்கிரீடைசெய்த அவசரத்தையெமக்குக் கடாக்ஷிக்கவேணுமென்று பிரார்த்தித்தார்கள்- பக்தவத்சலரானதினாலே கிருபைகூர்ந்து விஸ்வகர்மாவை வரவழைத்து மதுராபுரிக்கதிகமாய் இந்த வாசுதேவபுரியையும தில்விரசையென்று பெயராயுடைய நதியையும் தம்முடைய ஜலக்கிரீடைக்காகசிருஷ்டிக்கவேணுமென் றாக்கியாபிக்க விஸ்வகர்மா "மன்னுதண்பொழிலும் வாவியுமதிளும் மாடமாளிகையும் மண்டபமுமென்றும்,, மாளிகைகோபுரங்கள்துன்னும்மணிமண்டபங்கள்-சாலைகள்சப்தவீதிகளுடன்மண்டபம்-கோபுரம்-உப்பரிகை- அநேகதடாகங்கள் கூபங்கள்முதலானவைகளும்,மயில்கள்முதலானபக்ஷிகளால்சப்திக்கப்பட்டஉத்தியானவனத்துடன்கூடியும், நகரத்தையும்சிருஷ்டித்து விரசாநதியையும்தடாகம்போல்செய்துநாலுதிக்கிலும்திவ்வியமானபச்சைகளால் நிறைந்த படிகளுடன் தெளிந்து நிறைந்த ஜெலத்துடன் மானசசரசைப்போல சமீபத்தில் நெய்தலோடு "மையணோந்தகுவளைகள் தன்கண்களென்று மலர்குமுதம்வாயென்றும் ,, "திருமுகமாய்ச்செங்

கமலந் திருநிறமாய்க்கருங்குவளை-பொருமுகமாய்நின்றலரு ,, மென்று ஞ்சொல்லுகிறபடியே ஸ்திரீகளினுடையமைபார்கருங்கண்கள்போலே குவளைப்பூக்களையும், தொண்டைவாய்போலே ஆம்பல்புஷ்பங்களையும் அதினடுத்த கிருஷ்ணதிருமுகமண்டலம்போலே ஆயிரந்தளமுள்ளசெந்தாமரை மலர்களையும் அதினடுத்த திருமேனிநிறம்போலே கருநெய்தல்பூக்களையும், இப்படி மாறிமாறி விசித்திரமாக சிருஷ்டித்த அரித்திராநதியில், " நீராடப்போதுவீர் போதுமினோநேரிழையீ ,, ரென்று நீராடுகிற நிமித்தியமாய் சகலாபரண பூஷிதைகளாய் " மின்னுமாவல்லியும் வஞ்சியும்வென்ற- நுண்ணிடைநுடங்கும் அன்னமென்னடையினு ,, ரென்கிறபடியே மின்னற்கொடியையும் வஞ்சிக்கொடியையுஞ் செயிக்கும்படியான ஒசிந்த நுண்ணிய இடையும், அம்ஸ நடையைச் செயிக்கும்படியான நடையும், அனேக விசித்திராபரண வஸ்திரங்களுடன்கூடிய கோபகன்னிகைகளுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானும் "மாதிரங்கள்மின்னுருவில் விண்டேர்திரிந்துவெளிப்பட்டு ,, என்கிறபடியே நவரத்தினங்களால் திக்குகள்தோறும் பிரகாசிக்கப்பட்ட திவ்வியரதத்தின் மேலே " கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தா னென்று கறுத்துச் சிரமஹரமானவடிவும், செவந்து காதளவுநீண்ட வப்பெரிய கண்களும், பூரணசந்திரன்போன்ற முகமும், " குண்டலந்தாழக் குழல்தாழநாண்தாழ ,, வென்று தாழவிட்ட திருக்குண்டலங்களும்,திருநாணும், சுருண்டிருண்டு நிறைந்தசுருட்டைமயிர்களும், " மங்கலநல்வனமாலைமார்பிலங்கமயிற்றழைப்பீலிசூடி- பொங்கினவாடையரையிற்சாத்திப் பூங்கொத்துகாதில்புணரப்பெய்து,,என்கிறபடியேதிவ்விய ஸ்ரீவனமாலையும், பீதாம்பரமும்,சேயூரகடகநூபுரதிவ்வியபூஷணங்களுடன் ஜலக்கிரீடாநிமித்தம் அரித்திராநதிக்கரையிலெழுந்தருளினார். அப்போது " காறைபூண்கண்ணாடி வளைதுகில்பட்டுக்-கூறைபீதாம்பர ,. முதலான ஆபரணம் பரியட்டம் இதுகளைக் கரையில்வைத்து ஜலக்கிரீடைசெய்து பின்பு கரையேறி யெவர்களுக்கு எந்தவஸ்திரம் ஆபரணங் கிடைக்குமோ அதை அவரவர்கள் தரித்துக்கொள்ளுகிறதென்றுநிபந்தனைசெய்துகொண்டு " அன்னமாய்மானை யணிமயிலாயாங்கிடையே - மின்னையிளவேயிரண்டாயிணைச்செப்பாய், முன்னாயதொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டா, யன்னதிருவுருவம் ,, என்கிறபடியே அன்னநடையும் மானோக்கமும், மயிற்றோகைபோன்ற கூந்தலும், மின்னிடையும் பணைத்தோளும், செப்பன்ன மென்கொங்கையும்,தொண்டைக்கனிவா

யுமான வாயர்மடமக்களி னடுவில், "பொன்னிவர்மேனி மரகதத்தின் பொங்கிளஞ்சோதியகலத்தார்" என்று மன்னன்திருமார்பும் வாயுமடியிணையும், கண்களும்பங்கயத்தின், பொன்னியல்காடோர் மணிவரை மேல்பூத்ததுபோல", வென்றுஞ் சொல்லுகிறபடியே பொன்மேனியும், தோள்மலையும், செங்கமலம்போன்ற கண் பாத மளகமுதலான அவயவங்களுடன் காமனார்தாதை யென்கிறபடியே மன்மதனுக்கு மன்மதனாய்க்கொண்டு நீரிலேநின்றயர்கின்றோம் நீதி யல்லாதன செய்தாயென்கிறபடியே ஜலப்பை-பீச்சாங்குழல் முதலான சாதனங்களாலே அந்த ஸ்திரீகளைக் காதிலு மூக்கிலும் வாயிலுங் கண்ணிலும் ஜலங்களை யடித்தும் கிரமமல்லாதவைகளைச் செய்தும், அவ்வவ்விடம்புக்கவ்வாயர் பெண்டீர்க்கணுங்கனுப் "கொவ்வைக்கனிவாய்கொடுத்து," என்கிறபடியே ஒருவருக்கொருவர் திருவதரதானமுதலான லீலைகளைச் செய்து சிக்கனக் கரையேறி வஸ்திரபூஷணங்களையெடுக்கும்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் சிக்கனவந்து எடுத்ததில் ஒருதாடங்கமும் ஒருகுண்டலமும் ஒருசேலையும் அகப்பட்டவைகளைத்தரித்து ஒருகாதில் தாடங்கமும்- மற்றொருகாதில் குண்டலமும் அரையில் ஏகவஸ்திரமும் ஒருகையில் மூன்றுவளைவுள்ள பிரம்பும் சத்தியபாமை தோளில் ஒருகையும் புன்சிரிப்புடன் ருக்மணிபிராட்டியால் பார்க்கப்படுகிற இப்படிப்பட்டசேவையை சர்வருக்குங் கடாக்ஷித்தருளினார் அப்போது கன்னியரோடெங்கள் நம்பிகரியபிரான் விளையாட்டையென்று இப்படிப்பட்ட ஜலக்கிரீடா அவசரத்தைச்சேவிக்கவந்த "சிவனயனிந்திரனிவர்முதலனைத்தோர் தெய்வக்குழாங்கள்கைதொழக்கிடந் தென்கிறபடியே பிரமருத்திரேந்திர சித்த சாரண கின்னர் கெருட காந்தர்வர் முதலானசகல தேவகணங்களும் புஷபவருஷம் வருஷித்து சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டென்கிறபடியே கோபிரளயர் முதலானரிஷிகளும் ஸ்வாமியைப் பார்த்து"திருமால் நான்முகன்செஞ்சடையானென்றிவர்கள்-எம்பெருமான்றன்மையையா ரறிகிற்பார்பேசு," என்கிறபடியேபிரமருத்திராதிகளும் அறியக்கூடாத மகத்துவமுள்ளவனே அயர்வறுமமரர்களதிபதியே ஞாலம்படைத்த முகில்வண்ணனே பக்தவச்சலனே-தேவாதிதேவனே-தேவரீர் இப்படியே சகல சராசரங்களையும் வைகுந்தத்தேற்றிப்பரமமான விலக்ஷணமோக்ஷத்தைக் கொடுப்பீராக இந்த சம்பகாரண்ணியத்தில் இப்படிப்பட்ட சேவையுடன் நித்தியவாசஞ்செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க அப்படியே அந்தராஜகோபாலனும் கிரு

பைகூர்ந்துநித்தியவாசஞ்செய்தருளுகிறார்சுவேதத்திபம்ஸ்ரீவைகுண்டம்திருப்பாற்கடல்சத்தியலோகம் இதுகளிலும் இச்சம்பாரண்யம்கிருஷ்ணனுக்குஅதிகபிரீதிகரமாச்சுது சகலதீர்த்தங்களிலும்கங்கையானது பூரணபுருஷ சரணாரவிந்த சம்பந்தத்தால் சிரேஷ்டம்மச்சியநதியானது பகவானுடைய வேர்வையிலுண்டானபடியால் பரிசுத்தமாய்ஹரியின் தேகசம்பந்தத்தால் கல்லியாணதீர்த்தம் உத்தமநாராயணனுடைய திருவடிவைப்பினால் சேதுபாபநாசமாயாச்சுது கங்கையில்புனிதமாய்க் காவிரி நடுவுப்பாட்டு பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள் எங்கண்மாலிறைவனீசன்கிடந்த தோர்கிடக்கைகண்டெனென்கிறபடியே மடியில் சர்வாங்கமும் சம்பந்திக்கும்படி சயனம் பண்ணிக்கொண்டமையால் காவேரி கங்கையில. புனிதமாச்சுது இவையெல்லாத்திலும்வைத்துக்கொண்டு அரித்திராநதியானது காவேரிசம்பந்தமுள்ளதாயும் கோபஸ்திரீகளின் கேசதீர்த்தம் முகதீர்த்தம்சருவாங்க சம்பந்தமும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய சகல அவையசம்பந்தத்தாலும் வாய்கொப்புளிப்பு முதலானதீர்த்தங்களாலும் பாததூளிசங்கத்தாலும் சகலபாவனமாய் கோபிகைகளினது கொவ்வைவாய்களிற் கொங்கைக் குங்குமம் கழுவிப்போந்த தெய்வநீர் கமழுமென்கிறபடியே சந்தன கஸ்தூரி வாசமஞ்சள் குழம்புகளால் தெளிவிலாக் கலங்கல் நீராய்அந்தமஞ்சள் கலந்தமையினாலேயே அரித்திராநதி யென்றும் பேர் பெற்றது.

---

## மன்னார்கோவில் திருவாய்மொழி.

---

கலித்துறை- பண்ணட்டபாஷை- தாளம்- ஏழொத்து..

மாசறுசோதியென் செய்யவாய்மணிக்குன்றத்தை
ஆசறுசீலனை யாதிமூர்த்தியை நாடியே
பாசறவெய்தி யறிவிழந் தெனைநாளையம்
ஏசறுமூரவர் கவ்வைதோழி யென்செய்யுமே. (௧)

என்செய்யுமூரவர் கவ்வைதோழி யினிநம்மை
என்செய்யதாமரைக் கண்ணனென்னை நிறைகொண்டான்
முன்செய்யமாமை யிழந்துமேனி மெலிவெய்தி
என்செய்யவாயுங் கருங்கண்ணும்பயப் பூர்ந்தவே. (௨)

ஊர்ந்தசகடமுதைத்த பாதத்தன்பேய்முலை
சார்ந்துசுவைத்த செவ்வாயனென்னை நிறைகொண்டான்

பேர்ந்தும் பெயர்ந்துமவனோ டன்றியோர்சொலிலேன்
தீர்ந்தவென்றோழி யென்செய்யுமூரவர் கவ்வையே. (௩)

ஊரவர் கவ்வைஎருவிட் டன்னைசொல்நீர்படுத்
தீரநெல் வித்தி முளைத்த நெஞ்சப்பெருஞ்செய்யுட்
பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த
காரமர்மேனிநங் கண்ணன்றோழி கடியனே. (௪)

கடியன்கொடிய னெடியமாலுலகங்கொண்ட
அடியனறிவருமேனி மாயத்தனாகிலுங்
கொடியவென்னெஞ்ச மவனென்றே கிடக்குமெல்லே
துடிகொளிடைமடத்தோழி யன்னையென்செய்யுமே. (௫)

அன்னையென்செய்யி லெனூரென்சொல்லிலென்றோழிமீர்
என்னையினியுமக்காசை யில்லையகப்பட்டேன்
முன்னையமரர் முதல்வன் வண்டுவாரபதி
மன்னன்மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே. (௬)

வலையுளகப்படுத்தென்னை நன்னெஞ்சங் கூவிக்கொண்
டலைகடற்பள்ளி யம்மானை யாழிப்பிரான்றன்னைக்
கலைகொளகலல்குற்றோழி நங்கண்களாற்கண்டு
தலையில்வணங்கவுமாங்கொலோ தையலார்முன்பே. (௭)

பேய்முலையுண்டு சகடம்பாய்ந்து மருதிடை
போய்முதல்சாய்த்துப் புள்வாய்பிளந்து களிறட்ட
தூய்முறுவற்றொண்டைவாய்ப் பிரானையெந்நாள்கொலோ
யாமுறுகின்றதுதோழி யன்னையர்நாணவே. (௮)

நாணுநிறையுங் கவர்ந்தென்னை நன்னெஞ்சங்கூய்க்கொண்டு
சேணுயர் வானத்திருக்குந் தேவபிரான்றன்னை
யாணையென்றோழி யுலகுதோறலர்தூற்றியாங்
கோணைகள் செய்து குதிரியாய்மடலூர்துமே. (௯)

யாமடலூர்ந்துமெம் மாழியங்கைப் பிரானுடைத்
தூமடற்றண்ணந் துழாய்மலர்கொண்டு சூடுவோம்
யாமடமின்றித் தெருவுதோறயற்றையலார்
நாமடங்காப்பழி தூற்றிநாடுமிரைக்கவே. (௰)

இளைக்குங்கருங்கடல் வண்ணன்கண்ணபிரான்றன்னை
விளைக்கொள்பொழிற் குருகூரவர் சடகோபன்சொன்ன
கிளைக்கொளந்தாதியோ ராயிரத்துள் ளிப்பத்தும்
உளைக்கவல்லார்க்குவை குந்தமாகுந்தம் மூரெல்லாம். (யக)

ரத்நகிரீடநூபுராதி திவ்யாபரணங்களோ
டெழுந்தருளி யிருக்கிற
ஸ்ரீராஜகோபாலனுடைய
திவ்யமங்கள விக்ரஹ திவ்யஸௌந்தர்யங்களை அநுபவிக்கும்
திருவாய்மொழி,

முடிச்சோதியாயுனது முகச்சோதிமலர்ந்ததுவோ
அடிச்சோதிநீநின்ற தாமரையா யலர்ந்ததுவோ
படிச்சோதியாடையொடும் பலகலனாய்நின்பைம்பொற்
கடிச்சோதி கலந்ததுவோ திருமாலேகட்டுரையே. (க)

கட்டுரைக்கிற் றாமரைநின்கண்பாதங் கையொவ்வா
சுட்டுரைத்தநன்பொன் றிருமேனியொளியொவ்வா
தொட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம்பெரும்பாலும்
பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமாற்பரஞ்சோதி. (உ)

பரஞ்சோதிநீபரமாய் நின்னிகந்தபின்மற்றோர்
பரஞ்சோதியின்மையிற் படியோவிநிகழ்கின்ற
பரஞ்சோதிநின்னுள்ளே படருலகம்படைத்தவெம்
பரஞ்சோதிகோவிந்தா பண்புரைக்கமாட்டேனே (௩)

மாட்டாதேயாகிலுமிம் மலர்தலைமாஞாலநின்
மாட்டாய்மலர்புரையுந் திருவுருவமனம்வைக்க
மாட்டாதபலசமைய மதிகொடுத்தாய்மலர்த்துழாய்
மாட்டேநீமனம்வைத்தாய் மாஞாலம்வருந்தாதே (௪)

வருந்தாதவருந்தவத்தின் மலர்கதிரின்சுடருடம்பாய்
வருந்தாதஞானமாய் வரம்பின்றிமுழுதியன்றாய்
வருங்காலநிகழ்காலங் கழிகாலமாயுலகை
ஒருங்காகவளிப்பாய்சீ ரெங்குலக்கவோதுவனே. (௫)

ஓதுவாரோத்தெல்லா மெவ்வுலகத்தெவ்வெவையுஞ்
சாதுவாய்நின்புகழின் றகையல்லாற்பிறிதில்லைப்

போதுவாழ்புனந்துழாய் முடியினாய்பூவின்மேல்
மாதுவாழ்மார்பினா யென்சொலியான்வாழ்த்துவனே. (சு)

வாழ்த்துவார்பலராக நின்னுள்ளேநான்முகனை
மூழ்த்தநீருலகெல்லாம் படையென்றுமுதற்படைத்தாய்
கேழ்த்தசீரரன்முதலாக் கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து
சூழ்த்தமரர் துதித்தாலுன் றொல்புகழ்மாசூணாதே. (எ)

மாசூணாச்சுடருடம்பாய் மலராதுகுவியாது
மாசூணாஞானமாய் முழுதுமாய்முழுதியன்றாய்
மாசூணாவான்கோலத் தமரர்கோன்வழிப்பட்டால்
மாசூணாவுன்பாத மலர்ச்சோதி மழுங்காதே. (அ)

மழுங்காதவைநுதிய சக்கரநல்வலத்தையாய்த்
தொழுங்காதற்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே
மழுங்காதஞானமே படையாகமலருலகிற்
றொழும்பாயார்க்களித்தாலுன் சுடர்ச்சோதிமறையாதே. (கூ)

மறையாயநால்வேதத் துண்ணின்றமலர்ச்சுடரோ
முறையாலிவ் வுலகெல்லாம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய்
பிறையேறுசடையானு நான்முகனுமிந்திரனும்
இறையாதலறிந்தேத்த வீற்றிருத்தலிதுவியப்பே. (ய)

வியப்பாயவியப்பில்லா மெய்ஞ்ஞானவேதியனைச்
சயப்புகழார்பலர்வாழுந் தடங்குருகூர்ச்சடகோபன்
துயக்கின்றித்தொழுதுரைத்த வாயிரத்துளிப்பத்தும்
உயக்கொண்டுபிறப்பறுக்கு மொலிமுந்நீர்ஞாலத்தே. (யக)

முந்நீர்ஞாலம்படைத்த வெம்முகில்வண்ணனே
அந்நாணீதந்த வாக்கையின்வழியுழல்வேன்
வெந்நாணோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்
தெந்நாள்யானுன்னை யினிவந்துகூடுவனே. (யஉ)

என்று - புராணசங்கிரக முதலிவ்வளவும் - திருநாகை - ஸ்ரீமது வேங்கடராயலுதாசரவர்கள்- ஸ்ரீமதனந்தாசாரிய சுவாமிகளனுமதிகொண்டெழுதினது.

முகவுரை- ஸ்ரீமது. மே- முனிசாமிதாசரவர்கள் எழுதினது.

---

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

| பிழை. | திருத்தம். |
|---|---|
| திறைதோ | திசைதோ |
| என்கிறபதிலே | என்கிறதிலே |

மற்று மிவ்வாறுளவேற் கண்டுகொள்க.

ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# சாத்துகவிகள்.

சென்னைக்கவரன்மெண்டு நார்மல் கல்விச்சாலைத்
தமிழ்த்தலைமைப்புலவர்.
ம-ள-ள-ஸ்ரீ-கோமளபுரம்.

## இராசகோபால பிள்ளையவர்கள்

இயற்றிய.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மேலேறுதாமரைப்பூங் காலேறுநீர்ச்சடையோன் விரிஞ்சனின்னோர்*
நூலேறுமரபுளிநிச்சலுந்தொழு சண்பகவனத்தினுவலுமேன்மை ...*
சேலேறுவயனகை வேங்கடராயப்பெருமான் றெரிக்கவென்னத் ...*
தாலேறுசீர்க் கோவிந்தப்புலவர்கோன் றமிழிற்சாற்றினனல் ......*

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

முத்தமிழத்திரை முந்துமுது நீர்வைப்பின் ... ... *
முத்தமிழத்துறையின்முறை போயயாங்கும் ... ...*
மொய்த்தமிழற்றுயர்சீர்க் கோவிந்தப்பேர்கொண் ... *
மூதறிஞர் பிரானுயிர்கண் மூதிர் மெய்ஞ்ஞான... ...*
வித்தமிழக்குரு வகைத்தென்று வாரகைக்கு ... ... *
விறுபுராண மதுரைத்தல் வியந்துரைக்கின் ... ...*
எத்தமிழப்பெருநூல்கள் பலவும்வல்லே ... ... ... *
யியற்றுமன்னேனுறு புகழ்க்கும் வரம்பீதாமே... ...*

---

ம-ள-ள-ஸ்ரீ காஞ்சீபுரம். பச்சையப்பமுதலியாரது
சென்னைக்கல்விச்சாலைத் தமிழ்ப்புலவர்
ம-ள-ள-ஸ்ரீ

## திரு- கேசவசுப்பராய முதலியாரவர்கள்

இயற்றிய.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மணிமேவு சண்பகாட்வியின் மேன்மை ... ... ... *
வடமொழியிலுரைத்தாங்குத் திராவிடத்தும் ... ...*

அணிமேவு புராணமென வமைத்தியென்றே ... ... *
அமர்நாகை வேங்கடராயக்கோன் கேட்கத் ... ...*
திணிமேவு சிரபுரத்தன் சம்ப்ரதாயச் ... ... ... *
செல்வன் மகாவித்வஜன சேகரன்பொற் ... ... ...*
பணிமேவு சௌரிதொண்டன் சுகுணன்றீரன்... ... *
பண்புறுகோவிந்த வள்ளல்பகர்வுற்றுனே... ... ...*

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நம்பொருளானவாசு தேவமா புரத்தினன்மை... .........*
யம்பொருளெவருங்கேட்க வறைகென நாகைவாழ்வோன்*
ஐம்பொருளறிஞன் வேங்கடராயலு மகிபன்கூறச் ... ...*
செம்பொருளுணர் கோவிந்ததாசன் மற்றிதனைச்செய்தான்.

---

பிரபந்கவித்வான் - காஞ்சீபுரம்

ம-ா-ா-ஸ்ரீ

## இராமசாமி நாயகரவர்கள்

இயற்றிய.

பதினன்குசீர்க் கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூங்கடல் வண்ணன் சம்பகாடவியின் ... ... ...*
பொற்பினைத் தென்மொழி யதனிற் ... ... *
புகன்றுநீ தருகவெனப் புவிக்கணியாப்... ... ...*
புகழிருநாகை வாழ்குரிசில் ... ... ... ... *
வேங்கடராயன் மொழிந்தனனாக... ... ... ...*
விழைவொடிப் புவியினுவலர்கள்... ... ... *
வியப்பவுஞ் சேடனுசனனுதியராம் ... ... ...*
விபுதர்கொண்டாடவும் புனைந்தான் ... ... *
வாங்கடற்றிரைசேர் மணிக்கடலாடை ... ... ...*
மருங்குடுத்தொளிர் நிலமாதின் ... ... ... *
மங்கலநாணென் றுலகரோத்தெடுக்கும்... ... ...*
வளநிறை திரிசிரபுரக்கோன்... ... ... ... *

தாங்கட்ற் கவிஞர்தலைவனி டெடுப்புத் ... ... ...*
தவிருபுபிறங்கு நாரணனே ... ... ... ... *
தனதுவைப்பாகமுன்னு கோவிந்தத் ... ... ...*
தனிப்பெயர்ச்சால்பிறு னுவந்தே. ... ... *

சாத்துகவிகள் முற்றின.

---

இந்நூலாசிரியர் குமாரர்

## நாராயணசாமிபிள்ளை யியற்றிய.

பன்னிருசீர்க் கழிநெடி லாசிரியவிருத்தம்.

இந்நூல் செய்வித்தவர் சிறப்பு.

சீர்கொண்ட குடகாவிரிக்கயல் வளங்குலவு ... ... *
செண்பகாரண்யமென்னும் ... ... ... ... ...*
திவ்யதேசப்பெருமைதனை வடமொழிப்படிச் ... ... *
செந்தமிழின் மொழிபெயர்ப்பித் ... ... ... ...*
தேர்கொண்ட காப்பியப்பண்புறுப்புற நன்கியற்று ... *
வித்தகனை யெழுதா ... ... ... ... ... ...*
வெழுத்திற் பதிப்பித்தியாவர்க்கு முணர்தர ... ... *
விசைத்திசை யிசைந்தனன்சீர்க் ... ... ... ...*
கார்கொண்ட திருமேனி ராஜகோபாலன் ... ... ... *
கழற்கடிமை பூண்டநெஞ்சன் ... ... ... ... ...*
கமலைவளா் திண்டோளனமலனற் சம்பிரம ... ... *
காருண்ய கெம்பீரனெண் ... ... ... ... ...*
டார்கொண்ட மார்பக்குபேரனைகைத் ... ... ... *
தலன்றரியலனா யோட்டுதிரன் ... ... ... ...*
றருமநெறி வழுவாத தாசிலதிகாரவபி ... ... ... *
தானவேங்கடராயனே.... ... ... ... ... ... *











ஸ்ரீமதே ராமாநுசாய நம:

# மன்னார்கோயிற்புராணம்.

நான்முகம்

பூம்பாவை மேவிப் பொலி மார்பனைப் போற்று சீலம்
தாம்பாட வல்லார் தமைப்பாடுத றன்னின் முந்து
மேம்பா டிராமா னுஜனைச்சொல லென்னவேண்டி
யாம்பாடற்கானே னடியேசிர மாகவைப்பாம். (க)

வேறு.

பதின்மர் செந்தமிழைப்படிப் பதேபரம பதவனு பவமெனப்பகர்ந்தார்
அதின்மதுநுகர்ந்தோராதலா லவர்சே வடிகளே சரணமென்றடைவேன்
மதின்மலி புதுவை வல்லிசீர் புகழ்வேன் மதுரக விகளடி மறவேன்
இதின்மன விசைவே தென்னிற் கோபால னிசையென்றுல் யாவர்க்கு
மிசைவே. (உ)

வேறு.—வான்கோழி மஞ்ஞை நிகராதென வல்லநல்லோர்
ஏன்கோடு சிந்தையிலதாச் செயவில்லை யென்று
நான்கோபமூளி னலமாங்கொலிந் நானிலத்தில்
ஊன்கோ ளுடற்குப் பயன்பாடலொண் ணுததன்றே. (ங)

வேறு.

தென்றுவாரகை யென்றகோயில் சிறந்த மேன்மை தெரிக்கவே
நின்றுளான் மணவாள மாமுனி நெடுநிலத்தெனு நேயமே
இன்று கொண்டு ப்ரபந்தரத்தினமென்றபே ரிதுவெய்தவே
நன்றுசாலு மெனத்தொடுப்பது நாவலர்க்கு நகைக்கவே. (ச)

## புராண வரலாறு.

சகலமுமுணர்ந்து மதிதரவல புராணத்
தகவளவெலா மினிதறிந்து மமைகின்ற
சுகமுதவி நின்றுவளர் சூதபகவானே
புகனயிமி சாரணிய புங்கவர்த முன்பே. (க)

பலரகசியங்களொடு பன்னுமிதி காசஞ்
சொலவுயர் புராணமிவ்வ சோர்வற வநேக
நலமுற வியாசனரு ணண்ணியவுனலே
யிலகவுணர் வுற்றனனிதன்றி முதலெய்தும். (உ)

வேறு.—பிரமகற்பத்தி லதிசயச் செய்கைகள் பெற்ற
முரவரித்தல நாவலந்தீ விடைமொய்த்துத்
திரமிகுத்தன வவைகளிற் புண்ணியஞ் சிறந்து
வரமுறுத்துவ சிலதன திச்சையின்வழியே. (ந)

சித்தராற் சில பதிட்டையிற் சேர்வனசிலமா
முத்தரா முனிவரிற் சில பதிட்டையின் மொய்ப்ப
அத்தனுளும்வை குண்டத்தை யொப்பன வாக
நித்தநீடு நூற்றெட்டென நீயுணாத் தவற்றில். (ச)

சிறந்ததெட்டென வவற்றின்வை பவமெலாஞ் சேரப்
பிறந்ததுன்றிரு வாக்கின்முன் னல்லவோ பின்னு
மறந்ததில்லென வந்தது செம்பகாரணிய
நிறந்திகழ்ந்திடப் பிரமனுங் கமலையு நினைக்க. (ரு)

பிருகு வக்கினிசாபநிவாரணம் பெறுதற்
குருகுமன் பொடுபூசிக்கலான வுத்தமனை
மருவுமப்பதிதனிற்பின்பு கோபிலமௌனி
நிருமலத்தொடு பூசித்தா னெனநிகழத் தினைநீ. (சு)

ஆதலாலந்தத் தலமகத் துவமெலா மமைய
வோதல் வேண்டுமென் றுள்ளன்பு பெருகநின் றுருகி
மாதவர்க்கரசாகியும் வைணவஞ் சிறந்தும்
பூதலத்துயர் சௌனக முனிபுகன் றனனே. (எ)

என்றபோதிலச் சூதமா முனிவரனிசைந்து
நன்று கேட்டது நானுஞ்சொல் வதற்குள நயந்தேன்

வென்றி சேர்திகிரிக்கர விண்ணவன் விபவம்
துன்று நன்கதையாவர்க்கும் பரிசுத்தஞ் சூழ்த்தும். (அ)

என்பதுள்ளது கேட்பவர் சொல்பவ ரெமதாய்க்
கன்பனல் லுருவடைவதற் குளகொலோ வையம்
இன்பவைபவ னென்பவ னிவனென வியைந்த
முன்பனென்னு ளத்துளனெனவழுத்துபு மொழிவான். (கூ)

திருவுடைக்குலச் சிறப்பினிற் சிறந்தசெஞ் செயலோய்
அருள் பெறுத்து தற்கமைந்தவ னரியன்றியாரோ
வெருவறப்புரி விண்ணவ ரெண்ணி நீவினவத்
தெருளுறச் சொலத்தகுவதன் னவன்பெருஞ் சீரோ. (ய)

அன்றிவேறுமற் றென்னைநீ வினவுவதறைதி
என்றபோதவனிசைக்கிசைந்திலகுநல்லிதயம்
துன்றுசீர்ச் சவுனகமுனி சூழ்ந்துதான்சொல்லும்
நன்றுகேட்பதற்கமைந்தது கேசவனுமம். (யக)

என்னநீசொலத் தெளிந்ததியானெழிலெழிலி
அன்னமேனியவ் வண்ணல் சீரருள்சிறந்தமைந்தால்
உன்னையல்லது சரண்புகற் குறுதிவேறுண்டோ
சொன்னநீயவன்று ளக்கமில்சீர்க்கதை சொல்ல. (யஉ)

இன்னநீதயை யமைவதற் கென்செய்கே னென்று
உன்னுகின்றன னுகலாலினித் தவவோங்கல்
அன்னநின் னருளென்னைகொ லென்னநல் லறிஞன்
பன்னுகின்றனன் கேளெனச் சவுனகன் புணிய. (யரு)

ஆக - திருவிருத்தம் - யஎ.

நூல்.

## நாட்டுச் சிறப்பு.

சிறியவனே பெரியவனுய்ச் செனித்துமிகு புகழேந்து தெய்வம்போல
வெறிகமழும்புன்னைபுலால் விலக்குகடன் மேவிநனி மேய்ந்து மேனுள்
வறிதுதுயி லடையநெடு வனந்தொடர்ந்து பணிதொழிற்கு மகிழ்ந்தன்
பார்ந்த, நறியவிருந் தாவனஞ்சூழ் நந்தனிளஞ் சேய்போன்ற நன்
னீர் மேகம். (க)

நிலவுவண்ணந் தோன்றாது நீல வண்ணப்படாம் போர்த்து நிலமும் வானும், குலவுநிழல் செறிந்துபரந் துளதென குறிகாட்டுங் கொள்கை போல, இலகவிளர்த் துக்கறுத்துத் தண்ணெனப் துந்தோன்ற விருண்டுகோடைக், கலகவுலகத்து விடாய் தணியமுந்நூன் மின்னுபொருள் காட்டலாகி. (உ)

தனஞ்சயனுக் கிடித்ததண்ணந் தாரைநிகர்த் திடித்துவிடு தாரைப் பம்மல், புனைந்த சடைச் சிவன்றுங்கப் புகுந்திழிந்த புனல்போலப் பொருப்பாஞ்சையம், நனைந்து சுயந்துற விழிந்த நன்னீராற் பொலிந்து வளநாடுபோல, வனைந்த மணிமுடிபோன்று வயங்கியது வருணனுக்கு வையகத்தே. (௩)

வேறு.

பலதருக்களும் பலபயன் பல்குறப்பல் கால்
உலவு குன்றவர்க் குயர்துறக்கத்தை யொத்தோங்கி
இலகு வல்லிலங் கிளைஞ்செழித் தெங்கணு மிமைத்துக்
குலவ நிற்பது குறைவிலா வளஞ்செறி குறிஞ்சி. (ச)

பொரலமைந்த வில்வேட ரொண்ணிலர் தொழப்புனைந்த
குரலணங் குறைகோயிலுங் கொண்டது கூர்ங்கால்
விரனகஞ் செறிபறவை கண்மேய்வது சீறூர்ப்
பரன் முரம்பெனப் படுவது வன்புலப்பாலை. (ரு)

நித்தந்தோயும் வெண்டயிர்கடை யோதை கணிரம்ப
வைத்த மூவின மேய்வதற் குற்றபல் வளங்கள்
எத்தரா தலத்துளவென நாணவெங் கெங்கும்
முத்தம் போலும் வெண்முறுவல் காட்டுவ வனமுல்லை. (சு)

உண்டு நோக்குவ பொருளிமை யவர்க்கு மென் றுறுஞ்சீர்
கண்டு நோக்குவ நீலங்கள் காவலர்க் கயத்து
நண்டு நோக்குவ நாரைகணோக்குவ நளினம்
வண்டு நோக்குவ வானநெல் விளைவயன் மருதம். (எ)

தழல் கண்டன்ன நன்மணியினும் பொன்னினுஞ் சான்ற
தெழல் கண்டோதிம நிர்மிதந் தெய்துவ தென்ன
உழல் கண்டுள்ள மாலுமிசிரத் தோங்கு பூங்கைதை
நிழல் கண்டஞ்சுவ கொக்கென மீன்புலா னெய்தல். (அ)

இன்னவைவகை நிலத்தினும் பொறிவழி யெய்தி
மன்னலானநன் மனமென வளைநின்று வார்ந்த
தன்னீரிறை யனைபுனேந் தவிழ்ந்த வெள்ளாடை
நன்னர் நீண்டகன் றுலன்ன பொன்னி நன்னதியே. (கூ)

தெள்ளம் போல்வது சிவனுக்கங் கருள்புகழ் செப்பித்
துள்ளம் போல்வது துதிக்க நன்னலம் விஞ்சிச் சோர்கண்
வெள்ளம் போல்வது வினையற நோற்றவம் மேலோர்
உள்ளம் போல்வது நீர்தெளி வுறிற்குட முருட்டி. (௰)

கொங்கு நீடிய கொன்றையுந்தும் பையுங் குலவ
நங்கையோடு நின்றாடினேன் சடைநின்று நழுவித்
திங்களோடுதல் போல்வது தோணிதேர்ச் செலவிற்
கங்கையோடுதல் போல்வது வினைவினிற் கடுங்கால். (௰க)

பமரநேயர்சொல் பாட்டுக்கு நீட்டுகட் பார்வைச்
சமரர் தோய்களிச் சலதியிற் றருக்கிய தண்டார்க்
குமரர் தோயவுங் கொம்பனார் தோயவுங் குழுமி
அமரர் தோயவு மடுத்தது வடிவில்விண் ணாறு. (௰உ)

நீறுபூசிய நெற்றியிற் கண்ணனு நினைக்க
வீறுசேர் திருத்தஞ்சைமா மணியினே விழைந்தோர்
சேறுசால்பிர தாபத்தை யொத்தது செவந்த
ஆறுபோல்வது வைகலுஞ் சேர்வட வாறு. (௰ங)

வேறு.

ஐயாறுபாயவளமா வனவமைத்துச்
செய்யாறுசெய்குநர்திறம் புதலிலாது
பொய்யாறு தீர்நிலே புகுந்திடநல் வேள்வி
நெய்யாறு மண்டிமிக நீடுவதுநாடு. (௰ச)

இமிழ்திரைமுகட்டினிலெழுந்து லகமெங்கும்
உமிழ்கதிர்மதிக்கு நிகரொண்மைவளர்கல்விக்
கமிழ்தென வினித்துமறை யந்தணருமாராய்
தமிழ்மணம் விராவுவது தங்குபுனனாடு. (௰ரு)

மேயவாகங்குளிரவிண்ணவர் விளங்குங்
கோயில்கள் சிறந்தது கொடுங்கலிகுறைந்து

போயறநிரம்புவது புண்ணியமளக்கும்
தூயவர்நெருங்குவது சோழவளநாடு. (யசா)

வேறு.

சந்தனப்பொதி யத்தட வரைமுனிதரவும்
வந்தகாவிரி வளந்தருநாட்டி டைவதிவோர்க்
கெந்தநாளினுமிடரிலை யயற்புறத்திருந்து
நிந்தை தீர்வரித் தீர்த்தத்தை நேயத்தினினைத்தே. (யஎ)

எனச்சிறந்தகா விரிநதிதீரத்தி லிமையோர்
மனக்கிசைந்த சுந்தரச்சுயஞ் சோதிதான்வசிக்கப்
புனத்துழாய்மணம் பொங்கிய தலங்களிற்புகழ்மிக்
கினித்ததல்ல வோதிருவரங் கத்தல மிலங்கி. (யஅ)

அத்தலத்தினை நினைக்குமு ளைந்துபாதகமுஞ்
செத்தறத்திகழ்த் துறுமது வன்றியுஞ்சீர்சான்
முத்தருக்குகப் புளதலமிருகரை முகட்டும்
மெத்தவுண்டதிற் சுயம்பிரகாசமாய் விளங்கி. (யகூ)

விட்டணன்றரலாகியவிமான சேகரத்தின்
ஆட்கச்செழுஞ்சாயையாலமருமவிர
நாடகங்கிளர் நாகவொண்படமிசைநவில்வோன்
தேடருஞ்சயனங் கொடுதென் றிசைதிருந்த. (உய)

வளருங் கோலத்தை வைகலுந் தொழுதன்பு வாய்த்துக்
கிளருஞ் செய்கையிற் கெழுமியசவுனகசேட்டி
உளரும் பூஞ்சுரும் பொலிகிளர் சோலையினெல்கித்
தளருங் கொம்பருந்தாழ் திருவரங்கத்தைத் தகவே. (உக)

அஞ்சியோசனை தூரத்துளாக்கினேயத்தில்
விஞ்சுசக்கரதீர்த்தமென் பொய்கையும்விளங்க
நெஞ்சுநல்லவர்சூழ்வுறநிகழ் கும்பகோணம்
தஞ்ச மென்பவர் தமக்கருள பொருத்துமத் தகவால். (உஉ)

பொலம்பொற்று மரைப்புட்கரணிக்கரை பொருந்தி
நலம்பற்றுபுறுநாரணனரவணைநண்ணிச்
சலம்பற்றுவயன்றனக்கருள் புரிந்திட்டதானே
வலம்பற்றுநின்றசார்ங்கவிற் கைக்கொண்டு வளர்வான். (உங)

கங்கையா றிரண்டாண்டினுக் கொருதரங்கவின
மங்கையாகியகாவிரிவந்துமா மகத்தில்
தங்குதென்கரைத்தடத்தினிற்சகலருஞ்சாரப்
பொங்குறுஞ் செயல் புவனமெல்லாந் தொழும்புனிதம். (உச)

மொழிந்துதீர்வறு குடந்தைக்கு முளரியந் திசைச்சீர்
பொழிந்தியோசனை யிரண்டெனுந்தூரத்திற்பொங்கி
எழுந்துபேருலகெங்கணும் விளங்குறுஞ்சுடர்ச்செங்
கொழுந்து போன்ருெளிர் கோபுர மன்னனூர்கோயில். (உரு)

வேறு.

பூம்பிணை பாமணியென மரீயது
தேம்பிழி செம்பகச் செழுமென்காவிரி
தூம்பிடைச் செம்பகநாடு சூழ்வதே
ஆம்பிணர்ச் செம்பக நகரமாயதே. (உசா)

வேறு.

காவிரிக்கொரு காலென வருவது கண்ணன்
பாவிரிப்பவர் புகழெனப் பாமணிபரந்து
திவிரிப்பவன் செவிவழி யொழுகு தீர்த்திகைபோன்
றேவிரித்துறு வதுமத கெனுஞ் செவியிடையே. (உஎ)

பாமணிப்பெரும் புனல்பரந் தொழுகுதல் பார்த்துத்
தாமணித்துறை நீர்குடை வாரொலாஞ் சூழ்தல்
நாமணித்துறு நாளென வைகலி னண்ணிக்
கோமணித்தட வாயிலைக் குறுகுறு குடியே. (உஅ)

ஆடல் செய்பவராலலர் மணங்கட லடைந்து
கூடல் செய்வது புதுமண நலமுறக்கொண்டு
வாடல் செய்வது தீர்ந்துறு மகளிர் தம்மனம் போல்
நீடல் செய்வது மகிழ்புனற் கரசனு னீத்தம். (உகூ)

வஞ்சி போலியர் மருங்கெனக் குறைவுறு வளங்கள்
விஞ்சமாரியின் வெள்ளநீர்த் திரைபொர வெகுளா
தஞ்ச லஞ்சலென் றுறுபா யரவம தார்த்துத்
தஞ்சை நீயெனத் தழைப்பதுபோ லெல்லாந் தழைப்ப. (௩0)

மதகின் வார்ந்தகால் வயலெலா நிரம்புற மன்னன்
சிதகு தீர்வுறச் செய்யகோ லுலகெலாஞ் செலுத்தி
உதவுநீர்மையி னெருபுடை யிருந்தென வுறல்கொண்
டதலமூடுற வர்த்திரமடு வமைந்ததுவே. (ருக)

இதமுலாவிய கமலநன் முகமுட னெல்லா
விதமு மீன்று தண்ணெனு நலந்தழுவியே வேண்டல்
உதவுகான் மடுவர்கிய தந்தைதா யுவப்பக்
குதலையின் சொலினூறுவ வூறுநீர்க்கூவல். (ருஉ)

அடங்கல் செல்கிலாக் கோடையா மிடுக்கண் விட்டகல
மட்ங்கலேறன மகிழ்நன்றன் வளந்தெரி மகளிர்
தடங்க ளீவன தாங்கொடு தகவறந் தாங்குங்
குடங்கள் போல்வன வயினெலா முறவு றுகுண்டு (ருரு)

நெறிதிறம்புரு நீதியோன் வழியென நெடிது
வறிதுருது நல்வளந்தரு மாதமும் மாரி
செறிவு சால்வுறு செவ்வியோர் நூனயந் தேர்ந்த
அறிவு தேறுதலாமென வூறுநீர்கழி. (ருச)

இளைஞ ருட்டல் கண்டிதஞ் செயச்செய மனமிளகித்
திளைஞராகுறு செயலெனச் சுரந்து நீர் சிறந்து
களைஞ ரொன்பது காட்டுதற் கொத்தன்பு கலந்த
கிளைஞர் போல்வன வேட்டவர் குடைதரக் கிடங்கு. (ருரு)

தேடல் செய்வது பொருளெனத் தேடுவோர் செயலின்
நாட்டல் செய்வது காரென நாடுபைங் கூழ்க்கு
வாட்டல் செய்வது கூட்டல் செய்யா துற்றோர் வரக்கண்
ணோட்டல் செய்பவர் போன்றுறு நாளுநீ ரோடை. (ருகூ)

நீலநோக் கொடுமலர்முக முகிழ்முலை நிரம்பா
தேலரத்த வாயாம்பல் பைங்கொடி யிடையிமைப்பக்
காலகைய வொண்கமலமே யெனமணங் கவினிக்
கோலமா மலர்ப்பாவை வீற்றிருப்பன குளங்கள். (ருஎ)

கெண்டையாம் விழிபிறழ்தரக் கெளிறெனும் விரலால்
தண்டுமிங்கிதங்காட்டி ஞெண்டெனுமுழந்தாளோ

டண்டுமென்கணைக் காலெனுஞ்சினைவராலடியால்
புண்டரீகமென் பாவைமுன்னுடுவைபொய்கை (௩அ)

வாளைமீதுக ளிளவரால்வாளின்மேலாடு
தாள்கள்போல்வன தாமரை மலரின்மேற் றதைந்து
கேள்கொள்வண்டுகள் கிளத்திசை நடந்தகக்கிளர்பண்
நீளநேர்வனநெடுங்கொடிமடநலார்நிகர்வ (௩௯)

மேட்டு மேதிபாய் கிடங்குறுவாளை மீன் விசிறித்
தீட்டுவாளெனக் கிழித்தலும் வார்ந்துறுசெந்நீர்
ஆட்டுகுங்குமக்குழம்புற மடநலாராடல்
காட்டும் வாள்விழிகாட்டும் வன்மீன்றடங்கயமே (௪௰)

ஆமையூர்வதுசலசரவகையெலாமமைத்தோர்
நேமிமாலுறுசெயலென வொன்றெனி னிகர்க்கும்
நாமநாணுறுங் கமலங்க ளலர்தடநளினி
காமராயிரங்கண்ணனேயென்னவுங்கவினும் (௪௧)

திங்களென்றுவெண் கமலங்க ளலர்தலுந்திகழ்ந்த
கொங்குவீசரக்காம்பல்கள் விளக்கெனக்கொட்டி
அங்கலர்ந்தனவுடுக்குலமெனச் சில வலர்வ
கங்குலின்றியுங்கங்குல்வானெப்பவுங்கவினும் (௪௨)

குரண்டமாய்வது காலமோர்குநரொனக்கொழுமீன்
கரண்டமோர்புடை மூழ்கியோர் புடையெழல்கண்டு
திரண்டவாயிடைச்செருகிமேலெழுசிறைச்சிரலால்
புரண்டதேந்துறுங்கொய்யடி கூருகிர்பொருத்தி (௪௩)

உள்ளல்கொள்வது தகுவதே யாயினுமுறுது
கொள்ளல் கொள்ளலென்பாரொனவலர்ந்த பூங்குமுதம்
ஞெள்ளல்கொள்வது நீலநோக்கியுமெனநினைத்துத்
தள்ளல்கொள்வது தகுவதேயாமெனத்தரங்கம் (௪௪)

நன்னலப்பசுஞ்சுருண்முடி பவளவாய் நகுபூண்
சொன்னமென்கலைசெய்யதாளிவை துலங்குதலால்
பன்னலங்களு முதவுறு ராஜகோபாலன்
என்னவீற்றிருப்பதுகமலத்தரசெகினம் (௪௫)

பசிய சூட்டொடு பவளவாய்பைம் பொன் மென்றூவி
ஒசிவில் செய்யகா லோதி மத்துட னுறும்பேடு
கசியு மன்பொடு கமலமென்மகள் மகிழ்சண்ணன்
சுசியுறப்புடை யமர்தல்போற் சுடர்சுட ரோனே. (௬௬)

வேறு.—இருவரு மாகிய விணைவு காண்டுறும்
ஒருபதின் மருந்தொடர் வுடையவை வரும்
வருமெழு பதிற்று நால்வருங் குழாங்கொடு
சுருதிசெய் வயினெனத் தொரு மன்னங்களே. (௬௭)

பதுமமென்ற விசவர் பயிலுவோ ரொனல்
புதுமைகொல்பதுமத்திற் பொருந்தல்புட்களே
வதுவையி னெனிலது மணக்கத்தக்கதே
இதுவதுபோன்மெனவியம் பத்தக்கதே. (௬௮)

சிலம்பன குரல்விடு செயனன்னுடக
நலம்பயி னடையளி நவிற்று நல்லிசைக்
குலம்பயி லிடமரங் காதல் கூடுமே
புலம்பயில்வோர் தமிழ்ப்பொதுவும் போலுமே. (௬௯)

கூடுறு குறிப்புணா தெரிந்து கூடுரு
நாடுறு பெடைக்கு நன்குஞற்றத் தேர்கிலா
தாடுறு மயற்பெடை யமைவு நோக்கியே
வாடுறுஞ் சைவல வளங்கொள் சேவலே. (௭௰)

புணர்வது கருதிய புதுவை வல்லியும்
உணர்மது ரகவியு மொத்த தல்லவோ
வணருரு வேறுறு பெடையு மற்றொரு
துணர்செறி சேவலுந் தொழுதி கொள்வதே. (௭௧)

நிலைதெரிந் தயலுற நிரம்பல் சொல்லுவோர்
கலைதெரி யாதவர்க் கிரங்கல் கண்டதே
அலைபுனற் கமலமே லமர்ந்த சேவலோர்
தலையுறு பெடைமகிழ் தழுவக்கூவலே. (௭௨)

ஒருபுடை பயில்வுற வுணர்ந்த வோதிமம்
மருவிய பெடைதன்வாய் வாங்கு பார்ப்புறத்

தருவது மலர்மகிழ் மாறன் றந்திடக்
கருதின படிபெறல் காணுங்கண்ணனே. (௫௩)

பகையய னட்பெனப் பகுத்தல் சாலுமே
வகைதரு பாலகு மாரயௌவனம்
மிகையிரண் டகல்வுற விளங்கலாயின
தகைதரு பருவங்க டழைத்த புட்களே. (௫௪)

விருத்தமு மரணமும் வேண்டல் செய்வது
பொருத்த மிங்கிலை யெனல் பொருந்தல் செல்லுமே
அருத்தியு மடைவது மாகலாவது
கருத்தென விருத்தர் கட்டுரைக்கக் கண்டதே. (௫௫)

சிலதலை குனிவன சில கொண்டாடுவ
சிலகளி பெறுவன சில நின்றேங்குவ
பலபல வகைகொளிர்ப் பறவை வாழ்வெலாம்
பலபல தெரிகிலேன் பகர்தல் செய்கிலேன். (௫௬)

ஆயினு நாளைவான ளவல் செய்வது
சேயுயர் புள்ளெலாந் திகைத்தல் சால்வது
மேயவர் பிரிவினல் விழுமந் தோய்வுற
நேயரும் பொருள்வயி னெடிது செல்வரோ. (௫௭)

வெண்ணிறக் குருகுவான் விளங்கல் பூமகள்
கண்ணினுக் குயர்புகழ் வடிவுகாணவே
பண்ணி விண்ணுலவுற விடுத்த பண்பையே
ஒண்ணும் வெண்மலர்கள் வானுறலு மொக்குமே. (௫௮)

பகம் விசும்பிடைநனி பறத்தல் பார்த்துளோர்
அகமுடன் செலவமை வாகல் சால்வது
சுகமுற வொடுங்குதல் சோரக்குத்துதல்
இகலினுக் கமைவுகொண் டியல்வ தென்னவே. (௫௯)

கரண்டம் விண்பறப்பது கண்ணன் வண்ணமே
தெருண்டவர் கொடுநெடுஞ் சேணிற் செல்கையில்
வெருண்டு வல்வினை கெடவிரசை மூழ்கியே
அரண்டரு பதமடை வதனையொக்குமே. (௬௰)

சக்கர வாகம் விண்சார லன்னதேல்
மிக்கதுண் டிருவினை விட்டு நம்பிரான்
கைக்கொள வமரரைக்காக்கப் பின்வர
ஒக்கலின் வலக்கையி லுறுவதொக்குமே. (௬௧)

இன்னரம் பெழுகுர லியங்க வின்பினீர்க்
கின்னரம் வானிடைக் கிளர்தல் முத்தமிழ்
நன்னரங் குணர்பெரு நாவலோர்கள் வான்
துன்னரங்கின ரெனச்சுலவல் போலுமே. (௬௨)

கம்புணீர் மேய்வது பாலுண் கல்வியை
நம்புவீ ரொமக்கது நவிற்றுவீ ரெனுச்
சிம்புளா னேன்புகழ் தெய்வம் போற்றுவார்க்
கன்பு சான்றவர் சொனீரமைதல் போலுமே. (௬௩)

நீரள குடலெலா முதறி நின்றுசீர்.
வார்மயிர் கோதிநேர் வரம்பு கொண்டுளோர்*
ஏர்தரு துகளுடம்பெய்த வேண்டுவோர்
ஓர்வுற வுறுபொறை யுயிர்த்தல் செய்யுமே. (௬௪)

அளவறு நீரிடை யாய்ந்து வாழ்தரு
தளர்வறு புள்ளெலாங் களிதழைத்து நீள்
புளகுடல் புதைப்பநீர் பொருந்து சேனமங்
குளது சொல்வோரென வுறுதல் செய்யுமே. (௬௫)

சிரல்சிறை யசைந்துமீன் றின்ன நோக்குதல்
பொரலுறு மலகினுற் பொதுத்தல் செய்வது
வரலுணர்ந்தொரு சிறைவாய்ந்து வேல்கொடு
நிரலுறக் குத்துவோர் நிமிர்ச்சி போலுமே (௬௬)

வேறு.—இன்னபுட் களிராவிடை வைகுறத்
துன்னுசோலை துளாவுதல் வானிடை
என்னை யப்புறத்தில்லை யிடமெனப்
பன்னிமேகம் படியத்தழைக்குமே. (௬௭)

தெங்கு நீண்டு செழித்தது தேவரும்
அங்கு வேண்டப் பழுத்த தளவிலா

றுங்குகொண்டது நோக்குறப்போற்றுவோர்
பங்குவீறும் பரிணித ரொன்னவே. (௬௮)

கமுகு நீள்வது கன்னலிற் காய்கவர்ந்
தமுது செய்தவ ரார்தர வெள்ளிலே
திமிர்தல்கொண்டு செறிந்தது செவ்வியோர்
உமிழ் தரும்புக ழொக்க வுயர்ந்தரோ. (௬௯)

செவ்விதிந்து சிறந்து வளர்ந்ததென்
றவ்வியங்கொண் டடர்ந்து திரண்டநூல்
எவ்விதஞ் செறிவோ தெனவின்சுவை
கவ்விமுந்துகணிற் செறிகன்னலே. (எ௰)

வாழை யெங்கும் வதிந்தன வானுலாம்
தாழை தங்கு கனிகடகர்ந்துற
ஏழைபங்க னெழில்விரி வேணிபோற்
கூழையம்பனை நின்று குலுங்கவே. (எக)

வேறு.—தேங்கனி யிதழெனச் சுவையிற் செய்யது
பூங்கனி பசலையிற் பொருந்தலாவது
நாங்கனி வுறத்தளிர் நகுபொன் மேனிய
தாங்கனி மகளிரோ யலது சூதமே. (எ௨)

புளகுறு முலையெனப் பொருந்து முட்கனி
குளகுதிர் வேரினு மினிது கொள்கையால்
இளகுறு மகிழ்நருக் கெழில்செய் கன்னியே
உளகுறி தெரிந்தில மொப்ப தென்னவே. (எ௩)

சுவைதெரி கவிஞரி லூட்டு தூநறு
நவையறப் பொதிதரு நலத்தைச் சொல்கெனோ
அவைதெரிந் துளைப்பவ ரழகைச் சொல்கெனோ
குவைதரு தருவினன் குணத்தைக் கொள்கிலேன். (எச)

வேறு.—பந்தரிற் கொடிப்பைங்கனி பம்புதேன்
முந்துறற்கு வழிக்கொண்டு முந்தின
மைந்தருக்கு வளர்ந்தரு தந்தைபோல்
ஐந்தருக் கனிக்கன்பு கொளுத்தவே. (எரு)

தேனொழுக்கிய தீங்கரும் பிறகனி
வானொழுக்கிய வண்மை யொழுக்கின
ஊனொழுக்கிய வாளினொழுக்கிய
மீனொழுக்கிய யாறு விராவவே. (எசு)

நீர்பிறந்து செந்தேனெக நீந்துமீன்
தார்பிறந்து தாள்பட் டுடையவே
கார்பிறந்து கடற் பிறவாத சூழ்
சீர்பிறந்த செந்தேனும் விளக்கவே. (எஎ)

வேளைநீவி விழித்து விடுத்தல்போல்
பாளைசீவிப் புகுத்தப் படுவதில்
நாளை நண்ணி நிரம்பு நறுநிறை
வாளையுண்ண வழிவன வாயெலாம். (எஅ)

கட்டுவார்தளை காலுறக்கைகொடு
கிட்டுவார் குலை கீழ்தொகு கின்றதில்
நெட்டுவார்தலை நீணில வேந்தன்முன்
வெட்டுவார்சிறைப் பேணலர் போலவே. (எகூ)

உதிர்குலைப்பழ மொன்னலர் செந்தலை
முதிர்க ளத்தின் முடித்தெனமுற்றுவார்
அதிர்வுறத்தழை யார்வது கீழுற
எதிர்தரக்குவை யென்ன விழிச்சுவார். (அ௦)

கொட்டுவார்முகை கொண்டுறு பாளையை
நெட்டுவார்மது நேர்வுற நிச்சலும்
கட்டுவார்கழல் காலுறக்கண்டென
முட்டுவார் சுனைப்பொந்தர் முகக்கவே. (அக)

நானநாண் மலர் தண்டலை நாறுவ
தானநாறிய வண்டு சலித்துற
மானவேலின ரோச்ச மருங்குறு
மீனநீள்விழி யார்குழல் மேவவே. (அஉ)

உண்டமாமது வூடுகு வாயெலாம்
வண்டுபாட மயங்கிய மள்ளரோர்

சொண்டொடு தொழுப்புகு கூனெலா
மண்டு நீமணி கண்டு மயங்கினர். (அ௩)

சென்றுசென்று செருக்குறத்தேநுா
நன்றுநன்று நமக்கிதினன்னலம்
ஒன்று மொன்று மெனப்பெரி துண்பவர்
மன்று கொள்வது மன்னவர் கொள்வதே. (அ௪)

வேறு.—உண்டவர்களிப்பையென்னே யுணர்த்துவ துலகமேழும்
கண்டவரொனினு முண்ணக் கருதுதல் காண்பதம்மா
மண்டலவேந்தர் வாழ்வும் வரம்பன்று மடுத்தபோது
கொண்டது விடாதுபற்றுங் கொடிறெனுங் கொள்கைத்தேகாண் ()

நரகங் கூணவிவு செய்யா நலந்தருநன் மைத்தாக
உரகங்கள் பூண்டமுக்க ணொருவனுக் குவமைசால
விரகங்கள் பலித்து நன்னூல் வேதியரோவல்வேண்டிக்
கரகங்களமைத்துக்காளி காப்புநாண் கர்த்திற்பூண்டு. (அ௫)

வானுறுகமுகும்பச்சை மடல்புனைகிழலுமாட்டு
தேனுறு துவர்க்காய்ப்பாளைச் சிவிறியின சைந்துதூங்கத்
தானுறுதலத்திற் றெய்வந் தனைப்பராய்ப் புகையும்பூவுங்
கானுறக்கொடுத்து மேவுங் கவினொடு கருதல் காட்டி. (அ௭)

மஞ்சணீராட்டி நேர்ந்து மறிப்பலி வழங்கிக்காரி
விஞ்சுறு குழுக்கொள் பாழிமேவு பாற்பொங்க லாக்கிக்
கொஞ்சுறு மடவார் பண்ணைக் குரவையின் மகிழ்ந்துமாறு
மஞ்சுறவேண்டித் தெய்வமருதமுந் தருதல்கொள்வார் (அஅ)

கூவுறு குரலுஞ்சூட்டுக் கொழுந்தலைகுனிவும்பேடு
மேவுறவிரித்துநாலவிடுசிறைப்பொலிவுங்கொண்டு
தாவுறுபோதுமாறுதறைப்படத்தாக்குமுள்வாள்
வாவுறுவீரந்தோலாவாரணம் பொருத்தல்செய்வார். (அகூ)

முனையுறு செம்பிற்கம்பிமுளைத்தெனச் செறிந்துநுண்மாண்
புனைமயிருடலம் போர்த்துப் பொருவலித்தலைவன் கோட்டுக்
கனைதகர் தாக்கத்தாக்கிக் கதித்தெழுவீரரார்ப்புக்
கினைவதுமழைமின்னார்ப்பே யிடியெனவிடித்தலாலே. (கூ௰)

முழுக்கரு முகிலினுகமுழங்கலேமோதலென்பாம்
வழுக்கறுகோடில்லா துவானிடைத்தவழ்ந்துபெண்ணுண்
ஒழுக்கமின்றினியதிம் பாலூற்றுதலுழுதல் செய்யா
இழுக்கது கருவிபார்க்கென்றிடல் கடலுறலினேலா. (சுக)

உளிப்புனைபடப்பை நல்லாருறுதினந் தோறுமூற்றி
வெளிப்படவிடுத்துவார்ந்து மிருகமூநீரினேரி
துளிப்புறுமாரிவந்து தோய்கடற் கிடங்கதாகக்
குளிப்பனசெவப்பமேதிக் குலம்பலகுடிஞைதோய. (சுஉ)

வைகலுமுணவுக்கேற்கமாதமோ ராறுக்கீட்டிப்
பெய்கலமனைகளெல்லாம் பெருங்கடிமனைகளென்றால்
செய்கடிமனைகளெந்தத் தேவர்வாழ் மனைகளென்பாம்
பொய்கடிந்தவர்க்குப் போகம்புகுநகர்ப் பொலிவுபோலாம். (சுஙு)

தோரணத் தெருவுமன்னர் தொழுதளித்தெருவும்வெவ்வே
ருரணத்தெருவென்றேதுமகரமுமமைதிக்கேற்க
வாரணித்தடத்துமாதர் மணியிழையணிதல்போலாம்
ஊரணித்துறலுங்கொண்ட துறுநருக்குறவுகூர. (சுச)

தனித்தனியொன்பான்கோளுந்தாரகைக்கணமும்வாழ்தற்
கினிப்பனவசதிவெவ்வேறெனிற்செறுவேய்ந்தமூதூர்
நுனிப்பதுதெரிவார் யாண்டுநூல் வலோர்க்காகவேயோ
பணிப்புற விழிகள் கண்டுபயில்வன பலபண்பாட. (சுரு)

அட்டிலின மைந்ததூமமகினறுந்தூமமானல்
மூட்டிலாத்தேவர்க்கேன்று முயலுபசாரத்தூமம்
நெட்டிலுக்கெல்லாம்வாசநிரப்புறுமறை யோராற்று
மட்டிலாவேள்வித்தூமம் வருவதுமழையுநாறும். (சுசா)

கார்காலம்.

இரணியனுகங்கீண்டோனேந்தியதிகிரிபோலத்
தாணியங்கரிமானேறுசார்பொழுதாகவானம்
அரணியல்காடும்வாழவார்த்ததுபசியசோதி
முரணியவில்லிற்கோடை முரிந்தது கிழிந்ததம்மா. (சுஎ)

பச்சனக்கொழுந்து விட்டுப்பசைந்தது தழைத்த தேய்ந்து
நச்சிலைமரமுமென்ன நளிர்சினைமரங்களெல்லாம்

இச்சையின்படியேயெல்லாமிசைந்துள குடிகள்போல
அச்சுதனருட்கணோக்குக் கடங்கலொவர்வான்கண்டு. (௧௮)

நல்லதோர்சார்வுண்டான நரனெக்கொடிகளாகிப்
பல்லவும்விசும்புபார்த்துப்பசைந்தது முந்நீர்ப்பானஞ்
செல்லுறக்கொண்டுமீண்டு செறிவதுதிசைகளெல்லாம்
வில்லெழச்சிகிகடோகைவிரித்தினிதாடல்செய்ய. (௧௯)

மின்னுதல்கண்டு நாகம்வெரீஇயன விடர்கள் சேர
நன்னுதன் மடவாரின்ப நாணல நயந்து போத
மன்மதன்புகழ் கண்டஞ்சி மணிமுடி துளக்கல் செய்து
துன்னுறு சுமுகர் வீரத்துழனி யினிடிப் புந்தோன்ற. (௨௰)

ஒடுங்கின குயில்கள் பேசாவூமையர் போலக்கோடை
நடுங்கின வினைகண்டெங்கு நகைத்தன முல்லைமாரி
கடுங்கணை மாரிபெய்தல் கருதலர்க் கடுக்குஞ்சான்றோர்
நெடுங்கொடை மாரியென்னி னிகர்வது நிலங்கொண்டாடும். ()

பணிமுடிக் கிடந்தபார்க்குப் பசும்புயல் பதுமராக
மணிசிதர்ந்தென்னக் கோபமலிந்தன வானமெல்லாம்
அணிபெறக் குயிற்றி முத்தினார் நிரைகோவை தூங்கப்
பிணிமுனைசெழிய தொங்கல் பிறழ்தலும் பெரிது பெய்தல். (௨௰௨)

பொன்மழை நிகர்க்குமெல்லாப் பொருள்களும் பொருந்தலாலே
கன்மழைகாத்த கண்ணன் கவினுக்கே யிரங்கல்காட்ட
முன்மழையாம்பி பூத்து முகிழ்த்தன முளைத்த பார்மேல்
நன்மழைக் கானகோள்க ணணிபலமதியு நாண. (௨௰௩)

கருமகனாழி வேந்தன் கனிவுறுங் காட்டுத்தெய்வத்
திருமகளிளைய நங்கை சிங்கமென் றுலகமேத்து
மொருமக னேவல்கேட்க வுயர்புகழ்ச் சனகிநோக்க
மருமகன் மிதிலைக்கோமான் றனக்கென மகிழுங்கோயில். (௨௰௪)

பெருகினவேரி செந்தேன் பெருங்கட னிரம்பிற்றென்ன
அருகின கிரணமீன்க ளாயினவட்தலான்
செருகின கதிரின்சோதி தெரிகில சிறிதுதேர்ந்து
குருகின மெழுவமீள்வ கலவியின் மகிழ்வுகோப்ப. (௨௰௫)

மதகொலி வழங்கவேரி வரம்பிரு தியாப்புச்செய்வார்
பதலேயி னொலியும்வேணுப் பைங்குழலொலியுங் கேட்டுத்
திதலே வெம்முலேகொள் சீதைசெவிக்கிதந் தெரித்தல்செய்வான்
உதவியினுறுவர் வாழ்வை யொத்தது மாரியோங்கல். (௯௬)

ஒழிகிலபொழிவ கூட்டிலுறங்குவ விகங்கம் வீரம்
பொழிதடந்தோளன் வெந்நிற் பொருந்திய தூணிதூங்கும்
கழிபெரு வேகஞ்சான்ற கணைகளினுல வைமோதக்
கெழுதகு மூசலாட்டுக் கிடைத்தெனச் சிதகநால்வ. (௯௭)

தண்டகவனமே யென்னத்தகுவது தடக்கைச்சார்ங்கக்
கொண்டலங் குறைதலாலக் குளிர்வன மறையோரெல்லாம்
வண்டபோதனரோ யென்னமருவினர் மழையீன்வீக்கங்
கண்டவர் மனமுங்கண்ணுங் களித்தெனக் காடுவாழ்ந்த. (௯௮)

புலிபுத லொடுங்கலேயன் புகழ்க்கடங்கினைப் போன்ற
கலியுமெண்கினங்க ளெல்லா நயந்தசாம்பனேயே போன்ற
பொலிதருபுற்றுஞ் சோறுபுகழென வுரிஞ்சலாலே
கலியுருவன்று ரோமக்கரடி யென்றியம்பச்சார்வ. (௯௯)

பன்றிகண் முள்ளம்பேந்தப் படுநரின்முண் மாவோடு
நன்றியி னிருதரொன்ன நலிவுசெய்யாது காப்போர்
வன்றிறற் கடங்கல்போன்ற வதிந்தன தொறுவர்பாடி
வென்றியினுயர்ந்த விண்ணோர் வியனுலக தன்றிதென்ன. (௱)

துள்ளுமான் கணமும் வண்ணந் தொகுநிரைக் கணமுமேதிக்
கொள்ளேவன் கணமுமேடக் குழுவுஞ்செம்மறிக் குழாமும்
உள்ளன கிடைகள்காத்தங் குறுசுவா வொடுங்கல் செய்யா
நள்ளிரு ளகத்துமோரி சிப்பகைக்கேறுபோல. (௱௧)

கறந்தபாலடுப்பிற்காயக் கடைதயிர் தோயவில்வேள்
புறந்தரு தவத்தர்க்கீட்டும் பொதுவர் தம்மகளிர்கொங்கை
நிறந்தரு பொலன்செய் கும்பநிகர்வன நீலக்கண்கள்
பிறந்தன நோக்குங் கண்கள் பிடுங்குறு தழுந்துபெட்ப. (௱௨)

குருந்தமுங் கொடியன்னார்தங் குமுதவாய் திகழ்மென் மூரன், முருந் தமு நோக்கற்கேற்க முகிழ்தரும் வனமென்றுலும், அருந்தமுத னைய

மென் சொல்லாலுளங்களி கொண்டண்டர், பொருந்தமுன் னெகிழ்த லென்னப் புயற்கணம் நெகிழ்ந்து போர்த்த. (௱௰௩)

தன்னிலை திரிந்தகாதி தனையனைப்போல மேவு
கன்னியிலருக்கன் றூக்கிற்கலந்தெனக் கலந்தவாடை
நன்னிலை பிறழாவேந்தர் நலமென நிழல்செய்வானச்
சென்னிலைக் கேற்கவீசு சிவிறியின் வீசல்செய்ய. (௱௰௪)

## கூதிர்காலம்.

கார்காலவரசாட்சிகண்டுகரங் காட்டியசெங் காந்தள்வாங்க, நேர்காலவ ரசனரு ணிரம்பமய னிரம்பியணி நிறைபொன்பூண்டு, சார்கால மென வடைந்த சரக்கொன்றை மடந்தைபணி தாங்கவேறு, மோர்காலம் வருகவெனவுரைத்து வந்தாலெனவிருந்த துறைபெய்காலம். (௱௰௫)

வடமீனுக்கொருதுணைவன் மகிழ்ந்துபுனை நாமிதிரு வடிவுநோக்கித், தி டனுகை விமைக்களவு தெரிந்துரைப்ப தெனவுறைகள் சிதர்தலாக, விட நாக முயிர்ப்பதென நெடுவாடை வீசுதற்கு விழைவுகூர்தல், கடனுகி லிலக்குவனைக் கருதல் செய்த தணந்தவர்க்குக் காமக்காலம். (௱௰௬)

விடிபொழுது தெரியாது மணந்தவர்க்கு வனமுலையின் வெதுப்பம் பூட்டிக், கடிதடத்தின் வழிகாட்டிக் காமனரண்டனைக் கடக்கக் கரிய கங்குல், நொடியளவு பகற்பொழுது நோக்குதற்கு விழிகூசி நாழிலா ட்டுக், குடிமறவர்மகிழ் வினுக்குத் தகுங்கூதிர் காலம் வெயில் குறுகு ங்காலம். (௱௰௭)

கோவலர் தங்குழலிசைக்கு நிரைகூட மறத்தியர்க்குக் குறிப்புக்கூட
மேவலுறுந் துளிசிதற விழைவின் மிகுங்களி பதற விரைதலான
தூவலுறு மழையானை யனங்களிருட் களியானை துதைதல் போல
ஆவலுடன் புணர்மறவ ரகங்குளிர முகங்குளிர வணையுங் காலம். ()

கோழியும் வைகறை மருளுங் குறவருமங் குறமருளுங் குன்றென் பாரில், ஊழிபெயர் கடன் முகட்டி லுறுதலென்ன மழைமுகில்க ளூரற்றிச் சாலத், தாழிபடு தயிரொலியுந் தகைவின் முழைப்புலி யொலியுந் தனி க்கலாமோ, வாழிபெரிதுல கொழுக்கம் வழுவாமை பொழுதுணர மரு ளுண்டாயில். (௱௰௯)

துளித்தலின்றிச் சூன்மேகஞ் சுமந்துதிசை தெரியாது சூழ்ந்து தாழ்
ந்து, களித்தலுற விடவிபுறு கவிவேறு பாதவத்தைக் கருதித்தாவ,
விளித்த சில கவிகள் சில வெருத்தநகை மிளிர் வாயின் விளங்கலான,
நெளித்த தடித்துற நீண்டுநிகரின் மவுனியிற் கிளைகணிரம்பி வாழ்வ. ()

முசுக்கள் பல சினைதூங்க முழக்குகரு முகிலோங்க முதுமென்சான,
வசுக்களெனக் குளிர்தாங்கமாட்டுகரு மயிர்ப் போர்வை மாக்கள் வீங்
கப், பசுக்கள் கவரிகள் பயில வெளுத்தமுகி லனையகவி பார்த்தன் நீர்
த்தன், சிசுக்களொடு முசலிபெறு சிறுவர்பல ருமுளனெனச்செறியுங்
கீழ்மேல். (௱௨௰௧)

கரிய மயிர்ப்போர் வையின்றி வரிற்பொழிவ வுடல்குளிரக் காய்வ மே
ய்வ, பெரிய கடல்யானை யினம்பெயர்வ வெனப்பயந்து நனிபிளிற
வோங்கி, அரிய தழல் கொளுந்தலெனப் பலாசலரக் காயாவங்கதனு
ற்றாமம், விரியநிற நெய்த்ததெனப் பூத்த செருந்திபு மணிபெய்மேகம்
போல. (௱௨௰௨)

மலரினத் துணர்வேங்கை மதநாறக் கூதாளம் வாயங்காக்க
அலர்தூறு தருதளவுக் கிகலாது செயலை விரையவிழ மென்பூ
நலர்காண வுதவிசெய நறுங்கோங்கு முகிழ்காட்ட நாவன்மேவு
குலர்சூழக் கனிவீழ்க்க வொருசேர்வைதகவீறு கொழுமைவாய்த்த. ()

பிடிப்பதுவுங் கிடப்பதுவும் பெருங்கிறல் புரிவதுவும் பிறங்கிநீண்டு
கடிப்பதுவுங் கழுத்திலுறக்காண்பதுவும் பூண்பதுவுங் கருதிவாய்மெய்
துடிப்பதுவுங்கொடுபகட்டிற் பயன்றருதற்கேதுகுறைதுழனி போக்கி
வடிப்பதுவு நிரப்புவது மாகமுளை விசியபின்வளரு நாறு. (௱௨௰௪)

களையகல நாறுகொடு நடுதல்புரிந்தூற வளர்ந்து கதிர்கொண்டோங்கி
விளைவுபெறப்பழுத்துநிமிர் தலைகுனிதல் மகளிரொழில்விளங்கநோக்கித்
திளைமதனம்வணங்கு விக்குஞ் செயலுழுநர் தெரிந்தரிதல் செயும் பை
ங்காரின், முளைகெழுமு வயல்வினைக்கு முடிவுதரவருதிறலர் முகப்ப
தேய்க்கும். (௱௨௰௫)

கார்வாய்ந்து கொடையிளி கருதாம லுதவலெனக்கவின்றுகான்ற, நீர்சா
ய்ந்த தலைதூக்கி நிமிர்த்தரியப் புகும்பொழுது நிரப்புநீரின், ஏர்வாய்
ந்த வுழவர்பனித் திர்ந்தாளோ டரிகுலைநெல் லியைந்தசும்மை, தார்சா
ய்ந்த தலைக்குமழை தனைக்காக்கச் சொடுபடர்ந்துதாங்கி வீழ்த்தி. ()

தாள்பிடித்துத் தாக்குஞுலை சிதறியனகுவைமலியத் தகவுநோக்கி, வாள்பிடித்தற் குதவிமுகில்வரையாமை தெரிந்த வர்தம் மனத்திஞேர்ந்து, கோள்பிடித்த கதிர்களெனத் தாள்பரப்பிப் போர்த்தி யவைகுலைத்துச் சீர்த்த, வேள்பிடித்த குடைவிளக்கினளந்து மணிமிகை செலுத்திவேள்விகாண்பார். (௱உஎ)

அருக்கனுக்கு நாளோலை யமைந்தெழுந்து நிழன் மடந்தையணையத் தூக்கு, தருக்குநிறைமகள் காட்டத்தவிராது பெருங்காமச் சலதிதோய்ந்து, நெருக்கியுறி னிலமடந்தை திருக்கிளரவணைந்துதவு நெடியமாலின், வருக்கமுறு புணர்வுரைக்க வகையுண்டோ மிகைகண்டே வளங்கொண்டாட. (௱உஅ)

சாயைபுணர்ந் துறக்கதிரைமறைத்து முகிலொழுகு தலைச்சார்ந்து நோக்கு, நேயைநிகர்நிலத்து விளைவுறு போகம்பலவெனினு நிரம்பல்சாலா மாயைதருந் தகைதெளிய வயங்கு தடித்தாலுணர்ந்து வழிக்கொள்வாரிற், சேயைவிரும்புதலும் வழிதெரிதற் கேயெனப் பொழுது தெரிந்து செல்ல. (௱உகூ)

பலபோகங்களு மிதப்பப் பெறுநாளு முறுநாளும் பார்த்துப்பார்த்துப் புலஞரப் பொருந்திமிகை பொருந்தாது கருந்தாதும் பொடிப்பப்பொம்மி, நிலஞரப் பொழிபுயலின் வயின்களெலாங் கிடப்பவற்றை நீத்தம்வாரித், தலஞரத்திடர்வீச விளைந்து கடற்கல நிரம்பத்தந்து சார்வார்.()

வேறொரு தீவினுக்கென்றுற் றிணைமயங்கப் பொருண்மயங்கி வெறிதுறுது, நாறுதலு மிணையவெனத் தேறுதலு மொருபடித்தோ நலத்திஞன்றோர், கூறுதற்கு வரம்புடைத்துக் கொளுமவர்க்குத் தரமுடைத்துக் குறித்த நீதி, மாறுதற்கு மனமுடைத் தேலுணர்ந்தவர்க்கும் புணர்ந்தவர்க்கு மகிமைத்தாமே. (௱௩க)

மாறுத கருங்கொண்முக் கெடுப்பதிலை யெடுப்பதுவே மனமென்றோர்ந்து, சேறுளுங் கடவுள்வழி வானிரண்டி ருதுவாகச் சிறந்து சான்றோர், பேறுகப் புகழ்நிலைக்கப் பிறங்குவது மொழிந்தபடி பேசக்கூசாச், சீறுளி செயலின் வெண்மை செறிந்தமைந்த பலர்க்குமதி சயஞ்சிந்தாமல். (௱௩உ)

## முன் பனிக் காலம்.

கொண்டல் வந்தது கருநிறக்கோள் கொளக்கொதிக்குஞ்
சண்ட பானுவை விரிச்சிசத்துறுவது தகவோ

மண்டலாதிபர் மகிழ்கொடு மாத்தை மண்டூகங்
கண்டு கொள்கெனக் கழறினபடி பல கடுத்த. (௬௩)

நின்று நின்றுரைப்பன சிவசிவவென நிகழ்த்தித்
துன்றல் செய்வதுஞ் சுருதியின்றுணி வெனத்தொன்னூல்
வன்றபோதனர் முன்வழக் கிடுமெதிர் வாதி
நன்று நன்றெனத் தெரிதரல் பயில்வன நண்ணும். (௬௪)

கற்றறிந்தவரொன் வளையடங்கு கற்கடகம்
வற்றலோலையிற் கலகல பொரவியு மண்டூகம்
செற்றலா லுணர்கதிரவன் றிங்களே யென்று
நற்ற வாழியி னணுகினன் கார்முக நயக்க. (௬௫)

இடந்தயங்குத லியல்வென வில்லினுக்கிருக்கத்
தடந்தயங்கிய திகிரியங் கியல்வதுந் தகவே
படங்கிளர்ந்த பாம்பணைப்பரன் பசப்புறப்படும்பார்
மடந்தைமே லொருகரமுற வஞ்சலி வழங்க. (௬௬)

ஆயதாயின ழுழியின் வரதனிலலரி
பாயகார் முகிற் படலங்கள் பையப்பை யப்படரத்
தூயதாகிய வானெனத் தெளிந்துநீர் சுரந்த
போய தெண்புயல் பனியென வேறுருப் பொலிந்த. (௬௭)

இனிது நன்றென வியைவன கடலை வேர்க்கடலை
நனிதிருந்தின வதனிலு நன்றென முதிரை
முனிவருங்கொள முளைத்தன கிளைத்தன மொச்சை
பனியினுவன மணியுமூங்தொடு பசும் பயறு. (௬௮)

சாமை சேழ்வர குவரகு தினைகம்பு தாவாக்
காமநல்குறு கதிரரி சிக்கடி சோளம்
சேமஞ் செய்வது புல்லுரு நல்லுருச்சிரிக்க
நாம முள்வது கிளிமுதலிய நலியாமல். (௬௯)

பரணில்வைகிய பைந்தொடிமார்குரல் பயப்ப
தரணிலப்புனத்தினைக்குயிலாய்ந்து கொண்டமர
முரணில் வீசிய கவண்கல் போந்துட் லிடைமூழ்கித்
தரணிவீழ்வது தாக்குவில்லுண் டையைத் தகவே. (௭0)

புடல்வளர்ந்தன குதிரையூ ணெனவளம் பொங்கித்
திடல்கிடந்தன யானையின்றலைகளிற் செறிந்து
படல்படர்ந்தன வவரையும் பீர்க்கும் வாய்பருகக்
கெடல்கடந்தன சுரைதுதிக் கையெனக்கெழுமி. (௱௪௧)

காரவல்லி கத்தரிகந்தங் காய்ப்பனகதிப்ப
சேரவுள்ளன திரள்வன வுருள்வனசெறிவ
பேரவெள்ளிடையிலை யெனக்கோதுமைபெரிது
தாரமுள்ளன விவைசொலவலநலசுகமே. (௱௪௨)

புகலிலோரறிவினிலிலை காய்கனிபூவாய்
நகுதலாவதையறிவினுக் கெனமுகினாரம்
பகல்விளங்கிய திரவுறமாயையாற் பகவான்
சுகமிடும் பையிற்றூயது தெரிந்தவர் சொலவே. (௱௪௩

வருணனேறிய வாகனமனையதுமகரம்
அருணனேறிய தேருறுகதிரவனாழி
தருணமால் விடுத்தானெனச்சார்ந்தனன்றரணி
மருண்மைநீங்கின வளம்புதிதுறமனைமாண. (௱௪௪)

செம்மைவெண்மையிற் செறிவணம் வீடுகள் சிறக்க
எம்மையுங்கலி யிலையெனநாணலமியம்பித
தம்மையெண்ணிலர் தாபதொண்ணுறச் சமைந்தார்
கொம்மைவெம்முலை மருவுறுகொழுநர் தங்குடிக்கு. (௱௪௫)

துலைமதிக்கு விஞ்சியதெனப்போகி யைத்துதித்துத்
தலைமுழுக்கினிற் பெருக்கெடுத்தோடு நீர்த்தயிலம்
கலைமதிக் கிளங்காந்தியைத் தருவதுகடலில்
நிலைமதிக்கொணாத்தூய நீர்புகுந்ததி னிமிர்ந்து. (௱௪௬)

இரவினீங்கியகதிரினுக் கேற்றபாற்பொங்கல்
கரவிலின் குளப்பொங்கல் பைம்பயறு நேர்கலந்து
விரவுபொங்கல் செங்கனி பசுங்காய் கறிமிதப்ப
வரவினெய் செழுந்தேன்றயிர் கன்னலின்வடிபால். (௱௪௭)

கன்னிநன்மதிப் பங்குவின்வாரத்திற்கதிப்ப
முன்னிமன்னிய பலவகைப்பருப்பினு முடித்து

மன்னுபண்ணி காரச்சுவை வருக்கங்கண்மலியத்
துன்னுமன்ன மிவ்வகையெனச் சொற்றிடத்தொகுமோ. (ாசஅ)

அரியமாதவத் தன்பினராது சொலற்கமைந்த
பெரியயோகிகண் ஞானிகள் பெட்பறப்பின்னுந்
தெரியவாதுலர் செவிக்குறச் சாற்றிச்சேவித்துக்
கரியநாழிகை பகலென வொளிர்மனைகளிப்ப. (ாசகூ)

அயின்றுசந்தன கந்தமெங்கும் பெறவமைந்து
குயின்றவெள்ளிலைபாகு வாசனைக்கொழுஞ்சுண்ணம்
பயின்றுவாய் செழும்பவளத்திற் செம்மணிபாயத்
துயின்றுமெல்லணை மேலருநலனெலாந்துய்த்தார். (ாருய)

பின் பனிக் காலம்.

அறிவினஞ்சனை மஞ்சறுய் வுற
நெறிவிளங்கு நன்னா ணிகழ்த்தலால்
குறிவிலங்கலில் கும்ப சம்பவன்
செறிவுகொண்டும கரதிவாகரன். (ாருக)

கவினல் பின்பனிக்கால மாகவம்
புவிநிரம்ப மாபுகை நிரம்புநல்
லவிநிரம்புவோ னளவு காலின்மா
தவிநிரம்புவா சஞ்செறிந்ததே. (ாருஉ)

கோலமங்கையர் கொங்கையம் பட்டாம்
போலமைந்தரும் போர்வை பொங்குவார்
சீலநன்கினர் செறியுங் காமனர்
காலநேர்வது கண்டு துண்ணென. (ாருங)

உருவுதேர்கிலா ருயுட்ற்றுபூ
மருவுதேனு மொய்ம்மாரி போலவே
கருதலா வகைகடுகு மென்பனிப்
பருவமன்மதன் பருவமென்னவே. (ாருச)

புல்லினுண் பனிப்புன னிரம்பலால்
சொல்லன் மெல்லிதிற் றூவலாலென
வெல்லவல்லுநன் மதனவே ளெனல்
தொல்லை யோருளந்துணிவு கண்டரோ. (ாருரு)

கமலமாமலர் கருகிவேதலால்
அமலருள்ளமு மனையதாயது
நிமலவேள் கொடுநீரினென்ன
விமலர் கூறநீள் விபுலைமேவினான். (௱௫௬)

கதிருழக் கெனக்காண நேர்குலை
முதிரவிட்டு நீண்முனை கொள்வாளினால்
எதிர்மதற்கு நேரிகலி னோர்தலை
உதிர்வுறக் குறைவுறுத லொக்கவே. (௱௫௭)

கொய்வ ராழ்கடற் குளநெல் கொள்கலம்
பெய்வர் தீவுறப்பெயர்வர் பொன்னெனும்
தெய்வமால் வரைபோலச் செம்மியோ
ரைவர் தூதனுக்கமைவு செய்வரோ. (௱௫௮)

பேரவிசினும் பெரிது பேர்கலா
நாரநாண்மலர் நளினமாகலால்
மாரன் வாளியின் வளருமீதெனத்
தீரநீணெலுஞ் செறிவு செய்வரோ. (௱௫௯)

கரிமறைத்துநீள் கதிருலாயதாள்
அரிவுறுத்தி மாறுடு சும்மைகள்
விரிதலைக் கிடைமேவு வோர்தலை
தெரிவு நீள்வரைத் திரள்வு செல்வதே. (௱௬௰)

அன்னசும்மை நெல்லரி யினுக்கன
சொன்ன முத்தெனச் சொரிவ சொல்லொணா
மன்ன வைத்தபோர் மலைகளே யென
முன்ன மொய்த்தன முகில்கள் சார்வன. (௱௬௧)

போர்குலைத்து நேர்பொழிதல் செய்தன
வார்குலைத்த பொன்மலைகள் போல்வன
பார்குலைத்து மேற்பகடு சேர்ப்பன
கார்குலைத்து மேய்கவினை யொப்பன. (௱௬௨)

மீனமால் கையி னேமிபோல் வெயோன்
தானுலாவு நாளாகத் தாரணி
நானவார் குழனங்கை கொங்கைதோய்
வேனிலான் மகிழ்விழவு கூடவே. (௱௬௩)

அருவமாயணு வாயமைந்தனன்
உருவ மோவிலா விரதி நீயுலாம்
தெருவு தோறும் வெவ்வே றெனச் செலீஇ
மருவியாடுவார் மைந்தரீட்டமே. (௱௬௪)

குங்குமக் குழம் பொடுகு லாவியூ
ரெங்கு மொய்த்தபோ தெரிநுதற் கணன்
அங்கு மெய்த்த வத்தமைவு தீரவாய்
பொங்குபொற் சுரும்புறு பொழிற்கெலாம் (௱௬௫)

இலையுதிர்ந்து வீழ்விறுதி யாகமோ
தலையுதிர்ந்த முத்தன்ன மாதர்வெம்
முலையுதிர்ந்த நீர்முளரி யங்கணைக்
கொலையுதிர்ந்த தெக்குவல யத்துமே. (௱௬௬)

குனிமதிக்கு நேர்கொடு மரத்தினல்
நனிமதிக்குமா நவில் சமர்க்கு மோர்
பனிமதிக்கு மோய்வறு பதத்தினர்
நுனிமதிக்கு நேர்நூ னுணங்கினர். (௱௬௭)

நுணுகு நூலவர் நுகருமின்பமே
நணுக வெண்ணிவா ஞட்டும்புகுந்
தணுகி நின்று கொண்டற் கமைந்தபைங்
கணுகுமென் பனிக்கால நீந்தினர். (௱௬௮)

## இளவேனிற்காலம்.

சேயவனுடு சிறந்திட மேவி
நாயிறுகாய நலந்தரு தென்றல்
ஆயது நின்னதுதா னெனவாழித்
தூய்கதிர் மேனிது வன்றிய தன்றே. (௱௬௯)

தினகரனல தொருதீயிலை யெனமே
டனையுறி னுச்சனெனப் புனைதருவார்
இனையதுவேனி லிளந்தகை மாரன்
வினைதெரி தோழன் விளங்குறு காலம். (௱௭௰)

அழல் விரிசிகை யெனவவிர்வனதேமா
நிழலுறு தளிர்கணெருங்கின சோலைக்
கெழலுறு வண்டுகளெங்கு மியம்புங்
குழலினும் வீணைகுலுங் கிசைகொண்டு. (௱௭௧)

ஆடினதோகை யமைந்துற மாரன்
பாடியில் வீறுபல்லாண்டிசை போல
நீடினநீல நிறக்குயில் கூவிப்
பேடுகளோடு பிணைந்து பிறழ்ந்த. (௱எஉ)

நாரிகழற்றிய நற்சிலை யென்ன
வேரிகொழுத்த மிகுந்துறு கன்னல்
மூரிநிமிர்ந்தது மொய்சம ரின்றித்
தேரின தாயதுதென்றல் சுலாவ (௱எ௩)

ஒன்றினை யொன்று தொடர்ந்துறவூதித்
தென்றருவண்டு சிலைக்குறு நாரி
யென்றதுரோம வெழிற்கொடி மானத்
துன்றிய தென்று சொலற்கும மைந்த. (௱எ௪)

சம்பக மாமலர் தம்பல வட்டில்
என்பது செய்ய விரத்தமலர்க்கே
நம்புதிரீச னயத்தகுவே னென்
றன்பில் பரத்தையை வைவதை யன்ன. (௱எ௫)

அம்பென லாயவ சோகநிறத்தாற்
செம்பொன்மிலைந்து திருக்கிளர் பச்சைப்
பைம்புய னின்றன பச்சிலை யாலே
வெம்புறு காலவிடாய் தெறுதற்கே. (௱எ௬)

பாலொளி வீசுபளிக் குயர் மாடத்
தாலொளிர் திங்களின் மண்டலமான
வாலொளி வெண்குடை வைகின தந்தி
போலொளிர் காசு குயின்று பொருந்த. (௱எஎ)

நிலவொளி கொண்ட நெடுந்தரு நீழற்
குலகரி நின்று கொடுங்கை சுழற்றச்
சிலதெரி கொம்பொளி போலிடை செம்மூந்
தலனெடு சாகை தழைப்பன சால. (௱எஅ)

பண்டைய வேளுற மாதொரு பாகன்
குண்டை யிலேறிய கொள்கை தெரிப்பச்
சண்டதி வாகரன் வெம்மை தணித்துங்
கொண்டுறு பாளைகுலுங் கினவீசி (௱எ௯)

காகள மென்பது கண்டன் வன்றில்
ஆகுலநீரி னறிந்துறு பூவைப்
பாகனவின் சொல்பயின்றன கிள்ளை
வாகுறு கொய்யுளேமானகை மான. (௱அய)

தாழை மடற்றகை வாளுடை தங்கக்
கேழ்கிளர் ராது கிடைத்துறு செல்வம்
வாழ்கொடி மார்தர் வகுத்துரை செய்யத்
தாழ்தட மண்டு தடந்திரை மோத. (௱அக

மல்லிகை முல்லை மணந்தன சூழ
மெல்லிய சாதி விரும்பின தாகப்
புல்லு செவந்தி பொருந்து கொழுந்து
நல்ல மருப்புகு நன்கதிர் நாற. (௱அ௨)

மயிலென மாலென வந்து நிரம்பிப்
பயில்வன செய்து பசுந்துணர் கொய்து
வெயில் விடநீர் விளையாடல் விழைந்து
துயிலி னமர்ந்து சுகம்பல துய்த்து (௱அ௩)

மள்ளர் புரிந்த வளங்க ளளந்து
கொள்ள நிரம்பு குவால் பெறு செல்வம்
கள்ளநிரம்பு கருங்க ணிரம்ப
உள்ள நிரம்பு முவப்பின் மகிழ்ந்து (௱அ௪

கலவியின் விஞ்சு களிப்பு நிரம்பப்
புலவியின் வாடல் புரிந்து பொருந்தத்
தலைவரை நன்று தனித்து மகிழ்ந்து
குலவுவரன்பு கொடுத்துடனுக. (௱அ௫)

புதைபொருள் கோடல் புரிந்திலர் செல்வந்
ததைதர வின்பு தழைந்து விளங்குங்
குதைவிலி றுஞெலி கொண்டதி னேதுஞ்
சிதைவறு வென்றி திளைத்தலி னம்ம. (௱அ௬)

## முதுவேனிற் காலம்.

ஆழியங் கதிரொன்றகாக வாதரமூலாய்
விழியங் கனியின்வாய் விண்டுதாழ் மிதுனமே
ஊழிநாளினும் விடாவுறுதி கூடுறவுறுஞ்
சூழியாணையினதிற் றுன்றினு னிரவியே. (௱அ௭)

கடிதடம்புதி துறக்கண்டு தாழ்மிதுனிமே
பிடியெனப் புகல்செயப் பிறழும் வீடது நெடுங்
தடியெனக் கழனியிற் சாறுதோய் வுறவரும்
பொடிதரச் செம்மல் செம்பொழு தெனத்தெரியவே. (௱அஅ)

உதைய மென்கிரியி னின்றுறு செழுங்கதிரையே
இதைய மென்கமலமோ டெழுசெழுங் கமலமே
எதையும் விண்டலர்வதற் கெழுவதே யளவதே
கதைவழங் குருளிருட் கடிவெயிற் காலமே. (௱அகூ)

முதிர்வுறப் பொழுதெலா முற்றுவா னரசரால்
எதிர்முடங் கற்சுருட் கெய்தலே செய்தலே
அதிர்பொலன் கழலர்தா ழாரணங் கடியின்வி
ழுதிர் சுணங்கன முலைக்கூடலே கூடலே. (௱கூ௰)

ஆரணங்காக மன்மதனையுந் தருசெவ்வாய்
நாரணன் றுன்றுதா ணளினமே யொன்றுசீர்
கூரணங்கறு குலங் கூடுயர்ந்தவர் சொலே
ஏரணங்காக நன்கெண்ணமே திண்ணமே. (௱கூக)

எண்ணமே திண்ணமென் றெய்துவார் பண்ணையோ
டுண்ண வெங்கெங்கும் வாழுழவரா மழவரோ
நண்ணவங் கல்லர்செய் நல்லவே பல்லவுங்
கண்ண நின்றுள செழுங்கழனியேய் துழனியே. (௱கூஉ)

பள்வணங் குறவரும் பறைவணஞ் சொல்லொணா
துள்வணங் குறநலோருன்னல் செய்துறுவதே
கொள்வணங் கொள்கெனக் குழுறுநான் மறையுருப்
புள்வணங் காரினார் புருடனார் கருடனே. (௱கூங)

வேலனார் சாலநீள் வெறிதரக் கண்டுசெங்
கோலனாராறிலோர் கூறுசேர் வுறவரும்
பாலனொழுத வெண்படு விலங்குணர் நெடுங்
காலனார் தெரிய வாழ்கருமை சாலெருமையே. (௱கூச)

கார்வளம் புகலினீள் கரைவளம் பெரிதுவார்
நீர்வளம் புகலினன் னிலவளம்பெரிது செஞ்
சீர்வளம் புகலினுஞ் செயல்வளம் பெரிதுவாழ்
ஊர்வளம் புகலினா வுறுவளம் பெரிதரோ. (௱கூரு)

நிலனுறத்தழுவு முந்நீரின் மேலுறுநெடும்
பலமரக் கலனெனப் படிபடப்பைக்குலம்
புலனுறப்பொறி புகப்பொருதலே கருதலே
நலனுறக் கெழுமுநீர் நாடுடைங் காடரோ. (௱௬௫)

கோடுதாழ் பூநறுங் குடுமிதாழ் பூவயற்
காடுதாழ் பூவுறுங் கழனிதாழ் பூவுலா
நாடுதாழ் பூவெலா நலம்விளங் குறநிலந்
தேடுதாழ் வறுமணச் செம்பகம் பம்பவே. (௱௬௭)

பன்னிறந்தரு செழும்பணை நெடுந்தருவெலாம்
பொன்னிறந் தருவதே புதுமணந் தருவதே
நன்னிறந் தழுவுசீர் நங்கைவாழங்கமே
சென்னிறந் தழுவநீள் செம்பகஞ் செறிவதே. (௱௬௮)

வேறு.—செம்பகஞ் செறி தேசு செழிப்புற
உம்பரும் பணி வுற்றது நாகரோ
டெம்பருந் தொழற் கெய்திய கானமே
நம்பருந்தவ நண் ணினர் வாழவே. (௱௬௯)

வாழ்வு சூழ வளந்தரு கின்றது
தாழ்வு தீர்வுதரச் செலு கின்றது
சூழ்வெலா நலஞ் சுற்றப் பொலிந்தது
யாழ்வி னோத ரளக்கவி யன்றதே. (உ௱)

நாட்டுச்சிறப்புமுற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - உ௱௰௭.

## நகரச் சிறப்பு.

இத்தகைத்த நாடுசூழ வெய்நுகோயில் சண்பக
மொய்த்தகான மயனமைக்க முந்துசீர் சிறந்தது
பைத்தமா சுணச்சுமைக்கொர் பண்பமைந்த நாசியாய்
ஓத்தமெய்ச் சிறப்பின்மேய தூர்சுரர்க்கு ளுன்னவே. (௧)

நிலமகட்கு முகமெனற்கு நேருநீல மேகமே
உலகவர்க்கு மனவிருப்ப முதவுதற்கொ ருருவமாய்
இலகுதற்கு மலர்வுபெற்ற வியல்பினைத் தெரிக்குநீள்
பொலனிறத்தின் மணிநிரைத்த புகழ்பரப்பு சால்பினே. (௨)

மணியெனைத் தனைத்துமாசின் மாழையெத் தனைத்தனைத்
தணிபெறக்கு யிற்றியுற்ற தாகவோத லன்றியப்
பணிதனக்கு வகையுரைத்த படிதெரித்த மதிநலோர்
துணிவினுக்கு ளமைதியுற்ற துறையனைத்து நிறையுமே. (௩)

வெள்ளிவெண் பளிங்குமாட மிளிர்நிலா நிரப்பலால்
உள்ளினின்ற சங்குலோதி யோடுதற்கு மாடுறு
தள்ளியுண்ப திரவியின்றி யவிர்மணிக் குலந்திகழ்ந்
தெள்ளிநைந் திடக்குறைப்ப தெய்துபே ரிழுக்கவே. (௪)

நிழல்பரப்ப முகடுவேய் நிதிச்செழுந்த கும்புசால்
அழனிறத்த மணிசிறப்ப தனவிசே கரத்தனுய்
எழல்களிப்ப வரனுருக்கள் பலபெறக்கொ டிசைதலே
உழல்விடச்செய் தவனுகப்ப வுறைதலொக்கு மனைகளே. (௫)

நலிவியற்றி யொளிர்கதிர்க்கு நலனுறுத்து நணுகிருள்
வலியெனச்சொல் பெயரகற்றி யயனகர்க்கு மணிகளே
பொலிவுறுத்து மினனெனச்செல் புகுதியச்சி வன்றொழு
மலிவுபெற்ற நிமிர்வுசாய்வு வகைதெரிப்ப வயினரோ. (௬)

கயிலையோவ நேகம்வாழ்வு கருதுவோர நேகமாய்ப்
பயில்கையோ வநேகம்வெண் புளிங்குமாட பந்தியால்
வெயிலுலாவு செம்மையோரின் வீதிசால்பி னச்சிவன்
குயில்கையால் விளங்குநேமி கோடிகோடி போலுமே. (௭)

இருளுமின்றி வெயிலுமின்றி யிந்துமின்றி யியல்வதாய்
அருணிரம்பு பிரமர்வாழ்வி னமைதிகொண்ட தல்லவோ
பொருள்விரும்பு பதுமராக மணிகுயின்ற பொலிவினல்
தெருள்விளங்கு முளரிவாழ்வு செயலுமென்ன வியல்பினே. (அ)

செம்மைசால்பி னுதையஞேதி மந்திகழ்ந்த திங்களே
ஐமைவாணி யோதிகங்கு லாகவங்கி யன்றதே [ர்ந்
இம்மையோர்கள் பொருள்களென்று நிழல்களென்று மெளிதுண
தம்மைதேரி னிழலிலாமை யனமையுமேகொன் மெய்ம்மையே. ()

மரகதத்தி லங்குமாட வயினெலாமு பேந்திரத்
தரனுரைத்த விந்திரன் சதுர்க்குநேர் சமைந்ததால்
நிரனிரைத்த நீலமா மணிக்குழா நிரப்புசீர்
கிரனமைத்த பவனவோளி செம்மையுங் கறுப்பவே. (௰)

கருசல்கண்டு வயிரநீடு கடிமணைக்க ணொளியால்
அருகிலான கேதிராக டங்கல்போல வோளியே
பருகலாய வழுகின்மூழை பன்னிநின் றிமைத்தலா
லுருகுகாத லுடன்மயன்செய் துறலநேக மொப்பவே. (ὧக)

நித்திலத் தொகுப்பினந்த நிலமகட்கு வெண்ணகைப்
பத்தியொத்த மேதகம் பரப்புசோதி நாசியின்
உய்த்ததுண்டு நீர்செழித்த தொழுகுகின்ற தென்னவே
செய்த்தமெய்த் துகிர்ச்செய்சோதி செய்யவாயை யொப்பவே.()

முப்பதோடு மூவர்சூழ முதல்வனைந்து முகனுடன்
அப்பணிந்த வகைமையோர்க ளமைதிவேறு வேறுசான்
றொப்பமைந்த தன்றுவாழு மூலகமந்த வுலகமே
மைப்பயந்த சோதிகாண வைப்பமைந்த வளமரோ. (ὧங)

வேறு:—பாடத்தெரி யாதவன் பாடலும் பண்புணர்ந்து
கூடத்தெரி யாதவன் கூட்லுங் கொள்கையன்று
தேடத்தெரி யாதவன் றேடுறுந் திக்குமுற்று
நீடத்தெரி யாததி னீண்டது நீடுவீதி. (ὧச)

ஆபால நன்றன்ற தன்செய்கை யென்றுயதன்று
பூபாலர் கடந் தெருவாதலிற் போதல்செய்த
தோபால னத்துக் கெனவோதின தோங்குகீர்த்திக்
கோபால சமுத்திர வீதிகுன்றுது சூழந்து. (ὧரு)

வேதந்தெரி மெய்யுணர் வேதியர் வீதிசொன்ன
போதந்தெரி மாணிகள் சூழ்வுறு பொம்மல்கண்டு
நீதந்தெரி கின்னரர் வெள்குறினின் மலஞ்சால்
நாதந்தெரி கேள்வியின் வேறெருநன்கு முண்டோ. (ὧசு)

வாய்சொல்வது கொண்டு செந்தாமரை மாலைமார்பர்
தாய்சொல்வது கேட்டுறு மைந்தரிற்றண் மைவாய்ந்து
வேய்சொல்வது கேட்டுணர் மன்னரும் வேணட்ல்செய்ய
நோய்சொல்வது செல்வது நன்னெறி நோன்பினம்ம (ὧஎ)

நீர்மூழ்கிய நெஞ்சுறு செவ்வியி னிடுவாய்மை
பார்மூழ்குதல் பண்ணலின் மாரியும் பார்த்துநின்று
சீர்மூழ்குதல் செய்வது வையகத்தே வமொன்று
நார்மூழ்கினர் சொல்லவும் வாய்ந்தசெங் நாவரான்றே (ὧஅ)

ஓதா துறுநா ளுளவேன் முயற் கோடுமுண்டு
மாதாதர மைந்தர்தஞ் செந்நெறி வைகல்செய்கைக்
காதார மற்றன்னவர் செய்கையை யன்றியாதும்
போதாதெனில் வைதிகர் போலெவர் போற்றல் செய்வார். (௰௯)

இவரோ யறம்வல்லவ ரின்னவ ரேவலாலே
தவரோ தரத்தக்கன வொப்பன தந்துநின்ற
அவரோ தவர்போக யோகங் களொன்றார்களன்றி
எவரோவகை செய்தவர் மூவருமீகை கொள்வார் (௨௰)

வேதங்கள் வழங்கொலி வேள்வி செய்வேந்தர்கேட்பக்
கீதங்கள் வழங்கொலி கிஞ்சுகங் கெஞ்சநின்று
போதங்கள் வழங்கொலிமங்கையர் பொம்மல் செம்மி
நாதங்கள் வழங்கொலி வேலைநன்றாவல் செய்வ. (௨௧)

முதல்வேதியர் மேனிபொன் வீசலின்.மோதல்செய்வ
அதின்மங்கையர் மேனியஞ் செம்மணி யார்தல்போல
எதில்வல்லிரொன் றுலதில்வல்லுந ரின்சொலாலே
புதிதுண்குநர் பூசலல்லாதொரு போதுமுண்டோ. (௨௨)

மோகஞ் செறிவார்மதன் போர்பொர முற்றல்செய்வார்
போகஞ் செறிவாரவன் சேனையைப் பொங்கல் செல்லா
யோகஞ்செறிவார் தெறுநோன்பின ரின்பமுற்று
வேகஞ்செறி வார்நிலை நான்கின வீதியெல்லாம். (௨௩)

வேறு.

செய்கையின் வழுவல்செல்லாத் திறத்தினரொழுக்கஞ் செவ்வே
வைகைகண் டறத்தினுறு வரம்புறநிரம்ப லாலே
எய்கையின் வேதந்தேர்ந்தோ ரிழுக்குற வழுக்கல்காணு
துய்கையைநிறுவி யொட்டாரொட்டுற வுணர்வுபூண்டார். (௨௪)

இசைவது தெரிதலீத லியல்வது பிரிதல் சாலா
நசைதெறு ஞானசீல நலனுறநாடி நோக்கி
அசைவறு திறத்திற்சார வறத்திற னவிற்றியாங்கே
திசைதெரி நீகான்போலுந் தேசிகனியல்பு தேர்ந்தார். (௨௫)

காலமோர் மூன்றுந்தேர்ந்து கணிப்புறு கணக்கினீதி
சாலநா ணிரம்பற்கேற்ற தகைதெரிந் துறுதல்சாற்றிப்
பாலவாய் வருவதுண்டேற் பயந்தது நலனென்றுற்றுஞ்
சீலமேபுகுத்து நீரார் செறிவினிற் சிறந்தசீரார். (௨௬)

ஈட்டலே யியற்றலாக விந்தனம் பொதிந்துநல்லார்
காட்டலின் விழிப்படாஞ்சால் களிற்றைக்கண் டாங்குக்காத்துக்
கூட்டலிற்பிரித லேலாக்குறிப்புணர் செறிப்புச் சான்று
நாட்டலி னயந்துளோர்க ணயந்தர நலத்தினன்றூர். (உஎ)

மூவகை விழிகொண்டாங்கு முழுதுணர் மூவர்சார்வி
னேவற வுலகந்தாங்கவு கந்தன ருறுதிசான்ற
நாவலர்புகழ் கண்டாங்கு நணுகினர் குறைக்கு நாணுக்
காவலினமைந்து நீதி கருதினர் விருதுகாண்பார். (உஅ)

அருள்செறி வுறுவதாக வாரணம் பலவுந்தேர்ந்து
தெருள்செறி வுறுதல்போலத் தெரிந்தது சிகரச்செவ்வி
பொருள்செறி புகுதிதோன்றப் பொலிந்தது பொருந்தப்பூண்ட
உருள்செறி வதுவிண்ணேக்கி யோங்கின வோங்கலூர்வார். (உகூ)

கறையடி கவினத்தூங்கு கரம்புணர் முகத்திற்றூழ்ந்த
சிறையடி யருவித்தானஞ் செறிவது சேரார்சேரப்
பிறையடி மறுவிலாது பிறங்கிய மேகம்போல
நிறையடி வயிற்றுக்கோட்டி னெடியது நிமிரச்சார்வார். (௩0)

பொன்னுடன் மணிகண்மின்னப் பூணவி ருளைகொண்டோங்கி
நன்னர்கொள் கரியநாசி நகைவிளங் கிளிசெய்வாய
உன்னுவ தெரிப்பவேகத் தொடுங்கல சதங்கைபூண்ட
மன்னுவ நடனங்காட்டி வாம்பரி வயவர் வாழ்வார். (௩க)

வினைமுத லெழமுன்காணும் வீரர்தம்பதலை யார்ப்ப
நனைவள நவிற்றல்செய்ய நடுவினை பெயர்வினவிப்
புனைவன படைஞரோதம் பொருந்தலர் பொருந்தவேது
நினைவது பயனதாக நிலைபுரி கவசநீரர். (௩உ)

செயப்படு பொருளினறு தெரிந்தவர் திறங்கள்சூழ்ந்து
நயப்பட நோக்கிவார நவில்வது கவர்ந்துநாள்சூழ்
முயற்படு கதிரிற்கல்வி முழுகின வறிவின்யாதும்
இயற்பட வெழுதிக்காட்டி யிதம்புரி நிபுணரோர். (௩௩)

கருவியி னமைதிகாட்டிக் கால்புரி கருத்தர்நாவன்
மருவுட னிசைழத்தாலம் வரிமுடங் கலைக்கொள்வோரின்
வெருவற நிலையினீண்ட வேத்திரத் தடிஞர்சூழ
வருதலை முடியிற்சான்ற வகைபுரி மதிஞர்மானர். (௩௪)

கொள்வது நோக்கிக்கூட்டிக் குவிபொருள் குவையிற்கோட்டி
நள்வது சிறிதுறுது நளிரிலச் சினைக்கோல்கொண்டு
விள்வது விளக்கிமாத மிகைதர வறிஞர்யாருங்
கள்வது நிகழ்வுறுமற் காப்பவர் கனுலக்காண்பார். (௫௫)

நீக்கமென் றேனுநீக்க நீக்கமென் றுறுநன்னீதி
மாக்கணம் விளங்குங்கோல வயின்வினை வியதுதேற்று
வீக்கநன் மதிவல்லோரின் வெருவர வமலைகாட்டிப்
போக்கறப் புரிந்துவீரம் புகழ்நிலை நிறுவுபூணர். (௫௬)

குறையெது வுடையதென்று குறிதெரி குலைவில்பண்பு
பொறையவை யவத்தர்வாய்ந்து போந்தவை திருத்திச்சால
நிறைவது புரிந்துவாழ நெடுங்கணக் காயர்நீதி
முறைவழு வாதுவேய்ந்து முதனுதன் முனைவர்முன்னோர். (௫௭)

இடம்வலி காலந்தேறி யெறுழ்வலி யிவுளியேறி
நடநவில் வழக்குப்போக்கி நலிவுசெய் வினையின்யாரும்
மடம்விட வருத்துவேறு தனதெனல் வழுவுறுமல்
அடர்படைட் முனைவர்வேண்ட வருள்செறி வமைவுவாய்ந்தோர். ()

விளிகுறி பழுதுறுது வினைபுரிவிளைவி னீண்ட
களிமகிழ் பெருமைசால்பு கதுவினர் சலங்கல்கானு
ஒளிசெறி வுறமெய்வாய்ந்த வுறுப்பென விடுக்கண்காத்துத்
துளிசெறி யலங்கன்மாலை துயல்வரு தோளர்வாளர். (௫௯)

எட்டல தெழுத்துவேறே தெனநிறை புகழ்கொண்டாங்கு
வட்டவெண் கவிகைநீழல் வளர்ந்தவை வளரமாண்பு
தொட்டவை பயிலநூறு தொகையென வகைசெய்வேள்வி
நட்டனர் பொலியநாளு நவையற நடத்தல்செய்வார். (௬௰)

உட்பொரு ளுணர்ந்துவேண்ட லுறுவது தெரிந்தியாரும், பெட்
புற வமர்ந்துமன்றம் பிணைதொடை விடையைநோக்கிக், கட்புல
ன் விருந்துகண்டாங் குவகையிற் களிப்பக்கால, நுட்பநூலுணர்
ந்து வாழ்ந்தார் நுணங்குபொன் னணங்குநோற்றார். (௬௧)

தொடைக்கெதிர் விடைக்குச்சாற்றித் துணிவதுண் டாக்கிச்சான்
நடைக்குறத் தோர்ந்தநீதி நயத்தன நாட்டிச்சார்ந்த [று
இடைக்கொரு தீங்குநேரா தியலுநர் பாதுகாத்துக்
கிடைக்கரு நலனுங்காட்டிக் கெழுமுதல் குழுமுகிறார். (௬௨)

மிருதியி ரொன்பானுலும் விளங்கிய லெவர்க்குஞ்சாற்றிக்
கருதியவகைக்கு வேண்டல் கவர்ந்துகண் ணோட்டஞ்சாரு
தொருதிறங் காணவல்ல வுறுதிய ருளாயின்செல்வர்
பருணிதர் நீதிசான்ற பண்டிதர் பலினிபோல்வார். (௪௩)

ஒப்புறு விடைக்குநேரா துறுவிடை தனக்குமாகச்
செப்புறு தொகைக்குக்காட்டுந் திருவுறவலிந்து தீர்த்துத்
தப்புறில் வலிந்தவெல்லாஞ் சாற்றியொப் புவித்துத்தாவா
திப்புவிக் கொழுங்குவாய்ப்ப வியற்றுநர் பயிற்றுசீரார். (௪௪)

பொன்னணங் கனையவேந்தன் புகழுருப் பலகொண்டாங்கு
நன்னர்செய் நிலையினின்று நவிலவை தெருட்டுநல்லோன்
பன்னிய பணிசெய்வீரர் பலருள ரவரோநீதிக்
கின்னலம் புரிவாரெண்ணு மெழுத்துமற் றினையதாக. (௪௫)

நிறுவியங் கவைக்குச்சாலு நிலைக்கள நியமித்தாங்குப்
பெறுவன பயனிற்சாலப் பெரியன பேசலாகா
நெறியன சிறிதுந்தீரா நிலையன கலைகள்வல்ல
அறிவன செறிவதாகி யாசறுந் தேசுசான்று. (௪௬)

மரவினை வருத்தலோக வகைவினை மணிகள்சாலுந்
திரவினை மண்ணினோடுஞ் செழுவினை யமைதிவாய்ந்து
தரவினை நிரம்பல்செய்வோர் சதுக்கமும் பொதுவுஞ்சார்ந்து
வரவினைத் திறம்பல்செல்லா மனவினையறிஞர் மாண்டோர். (௪௭)

வெயிலினைக் கரந்துமாரி மிகையினு மசைதலின்றிப்
பயில்வினை புரிந்துமுந்நீர் படர்வினை செறிந்துநீதின்
றயில்வினைக் கஞ்சவாறு மமைந்துறவூர்தல் வேண்டா
தியல்வினைச் சகடும்யாவு மினிதுற நடத்தல்செய்வார். (௪௮)

மண்ணொடு புனலுந்தீயும் வாயுவு மேவல்கேட்சப்
பண்ணுதல் ககனமேயோ பாரின்றி யொழிந்தமூன்று
மெண்ணிய படிக்குவாய்ப்ப வியற்றவல் லாளாயாது
நண்ணிய தேயோகூடி னலந்தரும் பெரிதுஞாலம். (௪௯)

காண்பது காணலாகாக் கரவது தெரிதலாகப்
பூண்பது பூணின்வாய்த்த புகழது பொருந்தப்பூட்டி
மாண்பது வளத்தின்வாய்த்த வகையது வகுத்தவாறே
ஊண்பது நீளக்கால்வ துளதில துறுவதம்மா. (௫௰)

தத்துவந் தெரிந்தவீரச் சதுரரை நிறுத்துக்காட்டும்
வித்தகர் பொருள்கட்குள்ள விலைவரம் பறிந்தமேலோர்
நித்தநன் னியமந்தேர்ந்து நவநிதி நிலைசெய்நேயர்
பொய்த்திறந் தவிர்ந்துவேண்டும் புண்ணியர் புகழின்செல்வர். ()

குறைவறு தனத்தின்யாவுங் கொடுப்பர்செம் மணியும்பொன்னு
நிறைவுறு பணிகள்பேணி நிறுத்துநன் னிலைசெய்கோள்க
ளிறைவள நோக்குவோரி னியனவ மணிகடேர்ந்து
பொறைவிலை தெரியக்காட்டும் புலவர்பொன் வணிகர்மன்னே. ()

விளைபுலத் தழுஞ்செய்கால் விளைவிக்கவேண்டுஞ் சால்புந்
திளைதரு தொழும்பராகச் செறிவுறு களமர்சேர்வும்
முளைதொழு நிரம்பவேர்க்கு மூரியினினமும் வித்துங்
களைவறத் தொகுத்தங்கார கனைநிகர் வார்காராளர் (ருங)

எருமையும் பசுவுமேடத் தினங்களு மூரூர் கூட்டித்
தருநறு நெய்யும்பாலுந் தயிரும் வெவ்வேறு சாலப்
பெருகுதல் புரிந்து கோயில் பிறங்கொளி விளங்க நாளும்
மருவுறு வணிகர் வாழ்வே வாழ்க்கைக்குச் சிறப்புவாய்ந்த (ருச)

நிழலெழு நிறத்தின்வாய்ப்பு நெய்கையினிவப்பும் வீதிக்
செழலுறு பொலிவுஞ் செய்கைக்கியல் வனபலவு மெய்த
விழல் கிடையாது பேசுமென்மையும் வேண்டல் காட்டி
உழல் செயும்வலனுங் கொண்டோருளர் பலரழகுண்டாக. (ருரு)

வேண்டுதற் குகந்தவாயுள் வேதியர் மருந்து கூட்டி
ஈண்டுறு கடைகள் வாயுக்கினி துறுபுதல்வன் காண
நீண்டுறு வரையிற்சால நிவந்தது பலபண்டத்தால்
ஆண்டுறு கடைகள் யார்க்கு மரும்பெற லமைதிபோலும். (ருசா)

மட்கலம் வகுப்போர் பாண்டவகையெனக்கஞ்சகாரர்
திட்கலங் கரும்பொன்றச்சர் செய்வினை சிறந்தயாவும்
கட்கரு நலத்தைக்காட்டிக் கவினுறு கடைகள் காண
உட்கல ருறுதிபோல வுளநல னுடையதாக. (ருஎ)

நானமும் புழுகும்வாச நறுநெயும் பனிசெய் நீரும்
தேனறும் பூவும் வாசந்திமிர் செழும்பொடியுஞ் சாந்தும்
ஆனவை பலவுங்கொள்வார்க் கரியதென் ருர்வந்தோன்ற
வானவர்பகர்வ ரேனோர் மணந்தம துருவில் வாய்ப்ப. (ருஅ)

பல்வகைக்கிழங்குங் காயும்பழமுநன் கினியபாகும்
நல்வகைச் சுவைகள்யாவு நறிய வெள்ளடையும் பாக்கும்
ஒல்வகை பகர்வர் வாங்கற் குகந்தவருவகை தூண்ட
வெல்வகை பயில்வர் வீதிவிளங்கொளி விழுங்கலாக. (௫௯)

சிறியது பெரியதென்று திகழ்வது நடுமென் கொங்கை
வறியது கருமைதீட்டி வாள்விழி வாயிற்சேந்த
நெறியது தேனும்பாலு நிகர்சுவை தருதலான
குறியது மயலைத்தூக்குங் குழையது பழையதம்மா. (௬௰)

வேறு.

யாதையும் பயிற்று நல்யாழுக் கேழிசை
தாதையன் றமைத்தது தருமத்தாரணி
காதையும் புழைவிழக் காட்டி நீட்டுகட்
பேதையர் மழலையைப் பிதற்று கிற்கவே. (௬௧)

செதும்புறு நவமணியனைய செவ்வியும்
நிதம்பமும் விடர்வழி நிகழ்வு நெஞ்சுறத்
ததும்பு புன்னகை யொடுதைக்கும் வேல்விழிப்
பெதும்பையர் பயில்வது பெரிதுண்டென்பவே. (௬௨)

பங்கயமலர்வது பருதிபன்னிரண்
டென்கையின் முகநிகர்த்திடுதற் கேகொலாம்
கொங்கையு மல்குலுங் கொடுத்துக் கொள்வது
மங்கையரிளநல மதிக்கமைந்தரோ. (௬௩)

கடந்தருகளிறன காளைவீரரைப்
படந்தருமல் குலாம்பகைக்கஞ் சற்கெனத்
திடந்தரு முழுமதி முகங்கொண்டின்பு செய்
மடந்தையர் வள்ளவாய்மது விற்பாரரோ (௬௪)

தெரிதரனூற்றுவர் திறத்தொடை வரால்
விரிவுறு புகழ்க்கதை விளங்குமே கலை
பரிவுற வரம்பையக் தொடைக் குட்டையுள்செய்
தரிவையர் புணர்நல மறிதற் கென்பவே. (௬௫)

வரிபுகழ் வள்ளல்கள் வழங்கல் செய்தது
பெரிதவர் பிணிப்பறப் பேசுகென்னவே
குரிசில்களாவியை வேடர் கொள்கையிற்
றெரிவையர் சிமிழ்ப்பது தெரிந்து கொண்டரோ. (௬௬)

வார்மறைவுடைமறை வுடைமை வைத்தவர்
சேர்வுறவவையவந் திளைக்கச் செய்கையால்
ஓர்வுறவறம்பெரி தோம்பல் செய்வது
பேரிளம் பெண்கள்கொ ணலங்கள் பேசவே. (௬எ)

புருவவில்வளைவுறக் கருங்கண் போர்புரி
தருதலிற் கணையுரந்தாக் குண்டல்லவோ
திருவுதிர்ந்தெனச் சிறுமியருஞ் சேய்களாய்
மருவுமற்றவர் வளமாலுங் கண்டரோ. (௬அ)

சிலம்புறுசிறியமெல் லடியின்செவ் விபோல்
நலம்புகழ் கமலங்க ணவிலகிற்பது
புலம்புறுமனம் புடைபெயரப் பூவையோ
உலம்புனை தோள்வர் வருடற்குற்றதே. (௬௯)

பூவினிற்சிறந்தது கமலம் போர் பொரற்
கேவினிற்சிறந்த தென்றிசைப்ப ரெண்ணிலார்
மாவினிற்சிறந்துறு மடநலார்களைக்
காவினிற்சிறந்தவண் காணக்கொண்டதே. (எ௰)

பால்புரை யொளிசெய் வெண்படங் குலாயமென்
னூல்புரை நுணுகிடை நுடங்க வெம்முலை
மால்புரை மகிழ்நரை மணந்த தேறலாற்
சேல்புரை விழிநனி செவந்த தென்னவே. (எக)

நிழலனவோவிய நிலையை நெஞ்சுறீஇ
உழல்வது கொழுநரை யொழிக்க வெண்ணினார்
குழல்விழ மதிமுகங் குளிரக்கண்டனர்
தழலென நறைமதன் றனைக்கொளுத்தவே. (எஉ)

நறைநிறை வுறநெடு நாணுங்கண்ணற
இறைவளை யெழில்பெற விருத்திப் புல்லினார்
முறைதெரிகாமனு முகந்து முந்தினன்
உறைவிடம் வசதியென்றுளங் களிக்கவே. (எ௩)

அடியொடு முடியள வமைந்த காமநோய்
கடிதடவழிபுகக் கடுகிக்காதலால்
வெடிவளை தெரிகிலர் வெடிந்த தென்னினும்
வடிநறை மாந்தலின் மகிழ்வு மன்னினார். (எ௪)

ஊடலை யுணர்ந்தில ருவகைநெஞ்சுறக்
கூடலை விழைந்தனர் குறிப்பதென்கொலோ
தேடரு நலந்தரச் சிறந்ததிங்களே
கோடலர் தரலெனக் குழைத்த கோதைமார். (எரு)

வேறு.

கூடலெண்ணிக் குறிப்பது மூடலே
வாடலெண்ணி யணிவது மைந்தரோ
சூடலெண்ணித் தொடுப்பது மாலையே
பாடலெண்ணிப் படிப்பது நாளுமே. (எசு)

போகலாவது போதெனப் பொன்னனார்க்
காகலாவ தழகணி கொள்வதே
ஈகலாவதிர வலர்க்கென்னென
நாகலாவது நாளுநவிற்றவே. (எஎ)

போதுகொய்தல் புனல்விளை யாடுதல்
சூதுபன்னுதல் பந்து தொடக்குதல்
மீதுசென்றுற வம்மனை வீசுதல்
யாதுசெய்வது மன்பர் கொண்டாட்டவே. (எஅ)

மாடமாளிகை மன்றுசெய் குன்றுபால்
நீடநீடு நிலாமணி முன்றில்கள்
ஆடல் கூடரங் காவதனைத்தினுங்
கூடல் கூடக்குறிப்பது கொள்கையே. (எகூ)

வாவுமானொலி மாதங்க மானொலி
ஓவில் செம்பொனுருளிரதத் தொலி
ஏவுவீரரிளைப்பொலி பேர்கலா
மேவுவீதி விழவொலி வீதியே. (அ0)

சத்திரஞ் செறிசாலை தந்தாவளப்
பத்தியன்ன பலபல கோடலால்
அத்திநின்றன வாசை நிலையன
சித்திரந் தருந்தேர் நிலைதேரவே. (அக)

வண்ணவாசி வகைபல வாகைவேல்
அண்ணல் வீரரமை நிலைபோலவே
உண்ணலாநிலை யுற்றுறு தூமமே
எண்ணலாக விசைதரு மேகமே. (அஉ)

தூளிசெய்யத் துரகந்துலங்கநீள்
ஒளிகொண்டு தனுவுருவாகவே
ஆளியன்னவ ராடல்செய் வீதிவாய்
நாளின் மின்னு நவமணிப் பத்தியே. (அங)

அகழியோ விருளாழி செழுஞ்சுடர்த்
தகழியே செய்ய தாமரைமாமலர்
பகழியேய் விழிப்பாவையைப் பாடுநீள்
புகழியேய்மனை திங்களிற் பொற்பவே. (அச)

யானையே யென லாகி யியல்சரா
மோனை யேய்முழை முற்றுற முற்றுறு
வானையேயன வண்பளிங் கின்றலஞ்
சோனையேய் மழை தூங்குதல் போலுமே. (அரு)

வாளைசேலுக ளாழிவ ளாகமோ
டாளையார லரண்செறி தஞ்சைவாழ்
வேளையாள விளங்குருக் கொண்டுளான்
கோளையேநிகர் கொண்டது கோயிலே. (அசு)

மாரனாரணம் வல்லவர் யாவருஞ்
சேரமாமயல் செய்திறச் செவ்வியர்
காரனைனடிகண்டுறு காமமே
நீரதானவர் நெஞ்சுறுங் கோயிலே. (அஎ)

ஆட்லாலழ கும்புக ழேழிசை
பாடலாலெழ லுஞ்செறி பல்லணி
நீடலாணிழ லுஞ்சொல நின்றுளோர்
கூடலாலொளி கொண்டுறுங் கோயிலே. (அஅ)

தோனரம்பு துளைகஞ்ச மொண்மிட்
றேனலந்தரு மின்னிசை கன்னியர்
கானடந்தரல் கண்டுறு கண்ணுளர்
கோனயம்பெறக் கொண்டுறுங் கோயிலே. (அகூ)

வாகனஞ்செறி தோளின் மலிந்தவர்
மோகனஞ்செறி தீபமுயங்கினர்
பாகனஞ்செறி பண்பினர் செங்கரக்
கோகனஞ்செறி கொண்டுறுங் கோயிலே. (கூ௰)

வேறு.

கேசவாதி கிளர் கேழ்விளங்க விஞ்சு
வாசமாமணியின் மாலைகொண்டு நன்கு
நேசமார் தமிழின்வேத நின்ற நெஞ்சத்
தாசரானவர் தயங்குகின்ற கோயில். (சுக)

வேதமாமணம் விளங்கவைந்து வேள்வி
நீதமாக நெறிநின்று வந்துசெய்து
மாதயாவொ டடிவந்துகந்து ளோர்கட்
கேதமேதென விலங்குகின்ற கோயில். (சுஉ)

அழல்செய் மாமணியி னலமைந்தவாரல்
எழலின்மேரு விதினெங்கி யன்றதென்னத்
தொழல்செய்மாலைபணி கொண்டுநின்ற தொண்டர்க்
குழல்செய்பானு நிலை யொன்றி நின்றகோயில். (சுங)

பதின்மர்பாடலி னிவந்த கோபுரங்கள்
புதுமைகண்டுமலர் வந்த புங்கவன்றன்
மதியினேதை வமைகின்ற வென்றுவானோர்
துதிகள்சூழவொளி துன்றி நின்றகோயில். (சுச)

பருதிமண்டல நடுப்பொலிந்த பண்பிற்
கருதியன்பர்பணி கண்டிரங்கு கண்ணன்
சுருதிபன்முறை சொலச்சொலத் துலங்கி
மிருதிசொன்னவர் விழிக்குகந்து நின்றான். (சுரு)

நானவார்குழ னலங்கிளர்ந்த செங்கேழ்
மீனலோசனி விளங்கிநின்ற கோயில்
ஆனதாகலின லன்பின் விஞ்சுபூதூர்
ஞானநாயக னலஞ்சிறந்த தன்றே. (சுசு)

கமலவல்லியடி கண்டுதொண்டர் யாரும்
விமலமாகவருண் மேவுகின்ற கோயில்
நிமலர்சூழும்வழி நின்றுகண்ணனேயத்
தமலமன்னவருள் செய்தமைந்து வாழ்வாள். (சுஎ)

பெரியகோயிலென யாருமன்புபேசற்
குரியகோயிலது போலவுள்ளதென்று

விரியநீடுபுகழ் கொண்டுமன்னன்மேவத்
தெரியலாயது செழுந்தலத்தி லன்றே. (௧௮)

நகரச்சிறப்பு - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - ௩௱௰௩.

## முதலாவது - கோப்பிரளயரத்தியாயம்.

ஆயகோயிலோ டமையுஞ் செம்பக
மேயமாவனம் விளங்கு மூன்றதாம்
தூயலோகமுந் துதிக்க வென்றதன்
சேயசீரொலாஞ் செப்பு வானரோ. (௧)

அமிர்தவித்தின லாயபுட்களும்
நிமிர்விலக்கின நிறைவுமுள்ளதாய்
நமர்களுக்கெலா நலம்விளைப்பதாய்ப்
பமரமொய்ப்பில்செம் பகவனத்திலே. (௨)

இகலிலாதமைந் தெவையும்வைகலால்
அகவுமாமயி லாடுமவ்வனத்
தகவுபோலுயர் தாபதக்குழாம்
மிகவும்வைகுசீர் விளம்பலாகுமோ. (௩)

ஐந்தவிப்பதே யன்றியாரழற்
பொந்தவித்திடார் பொருமுவெஞ்சினச்
சிந்தையுட்கொளத் தெரிகிலார்மறைச்
சந்தைசெப்புவாய்ச் சாந்தசீலரோ. (௪)

வேண்டலோடுவேண்டாமை யென்பதைக்
காண்டல்செய்கிலாக் கண்ணர்கண்ணனுக்
கீண்டுமன்புகொண் டியற்றுபூசனைக்
காண்டுவேண்டல்கொண் டாடுமெண்ணரோ. (௫)

அத்தகைச்சிறப் பமைந்துளோரின்மா
முத்தரிற்றனி முத்தராகினோன்
பெய்த்திலாயிரத் தெண்மர்நித்தமும்
தத்துவத்திருத் தவனைமுன்னுவார். (௬)

ஆகியவ்வனத் தமரவந்தணர்
வாகுசேர்நடு வன்னிமாமுக
யோகியென்றபே ரொருவர்நீர்விலா
நாகநீட்டிணை நாதனன்பிலே. (௭)

மிக்குளார்தவ விரதநீள்பயன்
தொக்கபோலிரு சுதரைநல்கினர்
பைக்கொள்பாம்பணைப் பரமனருள்
மொய்க்கவிங்குளார் மொழியவங்குளார். (அ)

தாமரைத்தனி மணிசெய்தாவடம்
தோமறப்புனைந் துறுசுபத்தினல்
ஆமையொத்தடங் கமைவினறிரு
நாமமிட்டுவை ணவநடத்துவார். (கூ)

தந்தபுத்திரர் தாமும்வேதமோ
டெந்தவங்கமு மினிதுணர்ந்துசூழ்
ஐந்தும்வென்றுநல் லறநிரப்புசீர்
உந்துகோப்பிர ளயரொண்கோபிலர். (ய)

என்றநாமநீ டுருவரிற்சிறந்
தொன்றுகோப்பிர ளயருலாவுசீர்
நின்றநற்றவ நினைவினோடது
துன்றவெண்ணினர் சுமுகநண்ணினர். (யக)

ஒருபதத்தினின் றுயர்தலைக்குமேல்
இருகரத்தையு மெடுத்துக்கூப்பியே
பொருபொறிக்கணுட் புலனடைந்திடா
தருமைபெற்றவெட் டக்கரத்தினல் (யஉ)

வேதநுண்பொரு ளாயவிண்ணவன்
பாததாமரைப் பணிகொண்மாமலர்ப்
போதமேதினம் பொதிதலெஞ்சுரு
வாதரஞ்செறிந் தைந்தழற்கணே. (யங)

நடுவிலுக்கிர நல்லமாதவம்
வடுவறச்செய்து வருபகற்குளே
நெடுமுகட்டினின் றெருநிலைக்குநேர்
கொடுமுனிக்குழாத் ததுகுறிக்கவே. (யச)

மாமுனிக்கரசே வகுத்துநீ
நீமுகத்திடைச் செயும் வினைக்கெதோ
ஆமதைச் சொலிலது கொடுப்பனென்
றேமதிக்கவா னியம்பக்கேட்டனர். (யரு)

கேட்டுத்தேகமின் றிக்கிளைத்திய
மோட்டை நோக்கிநான் மோக்கம் வேண்டியே
நாட்டுமித்தவ நடத்துகின்றதென்
றீட்டுமெய்த்தவத்தினர்பி னுஞ்சொல்வார். (யசு)

அளவிலாதசெல் வங்களானவை
கிளருமிந்திரா தியர்தங் கேடிலாத்
தளர்வுதீர்பதந் தரினும்வேண்டலேன்
முளரிநோக்கமா முதல்வனைச் சொல்வேன் (யஎ)

என்றுகோப்பிர ளயரியம்புபோ
தொன்றுகாயமில் லாதவொண்பொருள்
நன்று சொற்றனை நலிவுசெய்புலன்
வென்றமாதவா விளம்பக்கேளெனு. (யஅ)

உடம்பிலாதசீ ருளதுரைக்குநீ
தொடங்குமாதவத் துணைதெரிந்துவாழ்
இடந்தரத்துவா ரகையிலேவையும்
கடந்துசேரும்வை குந்தக்காவலன். (யகூ

வந்துதோற்றி மல்லலாவ ணைத்தசீர்
முந்துவாகுசேர் முளரியங்கணன்
நந்துதேவகி நந்தனாகியும்
பந்தநீங்கவன் பருக்குவேண்டியும். (உய)

பரவுமச்சுத பானுவாகியும்
தரணிமாபொறை தவிர்க்கவேண்டியும்
சுரர்களைப்புரந் தருள்செய் சூட்சியா
தரநிமித்தமா தகவுதோற்றியும். (உக)

வாசுதேவனாய் நந்தர்கோன்மனைத்
தேசுசேரசோ தைக்கினித்தசீர்
மாசின்மாமணி யெனவதிந்துலாய்ப்
பூசுரோசர்செய் புனிதசீலனாய். (உஉ)

அடையலர்ச்செருத் தடிதுதித்துளோர்
நடைவிளக்குபூ நளினைநாயகன்
தடையறக்குலாந் தலத்தைக்காணெனு
விடைகொடுத்துவான் வெளிகரந்ததே. (உங)

வேறு.—ஈயமில் வாணிசொன்னகலக்கமில்பொருளையுட்கொண்
டாயகோப்பிரளயப்பே ரந்தணசீலர்நன்றென்
றேயமாதவத்தை முன்போ லினிதிருந் தியற்றிச் சின்னாள்
போயபின்று வரைமூதூர் பொருந்துதற் கெழுந்துபோந்தார். ()

செல்லுறு வழியிலங்கங் குளமெலாந் தெரிந்து தேர்ந்து
நல்லசீர்ப் பிரயாகத்தை நன்குகண்டாடித் தீர்த்தம்
வல்லைசென் றகன்றுவாயு வளர்தரு மூலைமார்க்கம்
புல்லுபோ தங்குநின்றும் புகுகின்றார் வருகின்றாரை. (உரு)

கண்ணன்வாழ் துவரையாண்டுக் கனிந்தசீர் நந்தகோபன்
நண்ணுமாய்ப்பாடியாண்டு நவின்மினோ வெனவினாவி
அண்ணுபோதிசையாழ்த் தேன்பெய் பவரைநேர்கண்டுகோதில்
வண்ணமாமுனிவரோநல் வழிசொல நனிதக்கீரோ. (உசு)

என்பதுங்கோலமேகா ணெனக்குரைத்தருள்வதென்றா
நன்பொருளுணர்ந்த சீலநாரதர்ப் புகழ்ந்து போகம்
துன்பறு மோக்கந்தந்து துலங்குசீர்க்கண்ணன் வாழும்
பொன்புனை துவரைமூதூர் புகும்வழி யுரைத்திரென்றார். (உஎ)

வேறு.

கண்ணனெவ்விடத் திருக்கின்றா னவனதூர்காணும்
வண்ணநீருரைத் தருளெனும் வார்த்தையைக்கேளா
விண்ணவர்க்கெலாம் விண்ணவன் வினவவிணையிற்பா
டண்ணலாகிய நாரதர்கேளென வருள்வார். (உஅ)

முனிவரோயென்ன காரண நீர்முடுகிப்போய்
இனியதாகு மத்துவரையில் யாதடைவீரோ
அனைய கண்ணனேலவனியின் பொறைதவிர்த்தற்கு
நனிவிரும்பிவந் தவதரித்தன னருணல்க. (உகூ)

பூதனைச்சகடொடு கஞ்சன் பொருசிசுபாலன்
வேதனைப்பகன் முஷ்டிகன் வெய்யசாணூரன்
ஆதிமற்று முண்டாகிய வசுரரையரித்து
நீதிகொண்டுறுந்தனைச் சரண்புகுந்த நின்மலரை. (ௗ௰)

பதுமநேர் பதம்பெற வடைவித்து மப்பதஞ்சேர்
வதுவிரும்பிய வக்குரூரன் முதல் வழுவில்
முதுமையோர்களுக் கருளியும் பாண்டவர் முந்நிச்
சதுரராயுறத் தன்னடித்துணை துணைதந்தும். (ௗக)

பின்பிறப் பிறப்பில்லவன் வைகுந்தப்பெருமான்
என்பதிப்புவி யாதலா லேன்செல்லுகின்றீர்
முன்புமக்குறு தலம்புகு வீரெனமொழிய
அன்பரிப்படி யலமரவமைந்தனராஞர். (௩௨)

சொன்னநாரதர் துணையடிக் கண்டுபெரத்தால்
மன்னுநெஞ்சுதுக் கித்துக்கண்ணிர் வரமாழ்கிப்
பின்னுமண் மிசைவிழுந்தழு தெழுந்துபேதுற்று
நன்னயந்தரு கண்ணனே யென்றுகூஉய் நவில்வார். (௩௩)

வேறு.

சீதளசந்திரனுமென வேயொளி செய்தியாரும்
காதல்கொளும்படியாகுன் முகந்தனிகாணுதே
ஆதரம் விஞ்சிய நானதிசோக மடைந்தே கண்
போதலராது குருட்டுருவாயது பூமீதே. (௩௪)

கொண்டபிறப்பும் வெறும்பய ஞயதுகோதாகா
அண்டமுளைத்தவுடன்றுவ ளைப்பதியண்ணுதே
பண்டுபொறுத்தது மென்செயலோவுறுபாரீரோ
விண்டுதிருப்பத மேவுதலெந்த விதத்தேயோ. (௩௫)

உத்தவரொடுமா லாகாரர்வீ டுமெரொன்னு
மெய்த்தவர் கண்டநல்வேடம் விரும்பியும் வீணையான்
இத்தக வெய்தியிருந்திட விட்டது வென்னேயோ
நித்தர் தொழுந்தவ நேசமுகந்தருணீதானே. (௩௬)

நீலநதிக்கரையிற் புளினத்தட நேராகக்
கோலமணத்தொ டநேகவிதச்செயல் கொண்டாடுஞ்
சீலநினைத்தனி காணுவதென்று தெருட்டாயோ
ஞாலமிசைப் பரமானதுதீர நயந்தோனே. (௩எ)

என்றுசொலிப்பர தேசியெனப்பல வெண்ணுநின்
றென்று தவத்தனை நாரதர்கண்டிட ஞேகோவென்
றன்றவளைக்கையி னென்ற வெடுத்துர மாரக்கொண்
டின்று முனிக்கர சேதுய ரேலெனவின்பாயே. (௩அ)

மெள்ளமெளப்பல வாமுரைசெப்பி வியப்புள்ளம்
கொள்ள வமைத்துணர்நீர் விருதாவினை கொண்டீராய்
உள்ளமிளைப்பதடாது விடுந்துயரோதாவோர்
பிள்ளைமதிச்செயல் பின்றியதன்று பெருஞ்சீரீர். (௩௯)

முந்திடத்து முயற்சிபெரும்பயன் முன்னாகத்
தந்துநிரப்பும தென்பதுநீவிர் தவிர்ந்தீராய்
வெந்துயரத்தில் விழுந்துதவிப்பது வீணேகாண்
இந்தவிதத்துய ரெய்தகிலீரினி யென்பாரோ. (சய)

உள்ள துணர்ந்த வுமக்கொருபாய முரைக்கின்றேன்
பள்ளநெடும்புனல் சூழ்துவராக்கிறை பற்றாகான்
விள்ளிவிதத் திலெனக்கொளுநீ ரரவிந்தம்போற்
கொள்ளும்விழிப்பொறி கொண்க னெதிர்ந்தருள்கூர்தற்கே. (சக)

நல்லமதித்திற நன்குறு நீரினிநன்னீர் தோய்ந்
தொல்லைவரக் கடவீர்மறை வாகவுணர்ந்துள்ள
அல்லல் கெடுக்குநன்மந்திர மிப்பொழு தாமாறே
சொல்ல நினைத்தனனென்றின நாரதர் சொன்னாரே. (சஉ)

மற்றிவருஞ் சொனவாய்மை திறம்பறு மாகொண்டே
நற்றவநீரி னனைந்து சுசிக்கு நணித்தாகப்
பெற்றரு நாரதமாமுனி வீரருள் பின்றாதே
உற்றவு மக்கடிமைக்குறு சீடவுகப்பானேன். (சங)

ஓவலிலாதினிநானென வோதலுமோர்வாசு
தேவநன்மந்திரமானம காமறைசீர்சாலக்
காவல் செய்தைந்து புலன்களை வென்று கனிந்தார்வ
மேவநினைந்து துதிப்பவர்தம்மைவியந்தாரோ. (சச)

நாரதரன்றுது வாதசவக்கர நாமஞ்சால்
சீரதுவாயுறு மங்கமெலாமுறை சிந்தாதே
மாரதமோடுறு மாமுனிநாதர் மகிழ்ந்தேதம்
தீரவுகந்துப தேசநிரம்பருள் செய்தாரோ. (சரு)

நன்குபதேச நயந்துகொளுந்தவ நன்னேயர்
அன்புறுமற்புத நண்ணியுரைத்தருள் வார்பாதம்
துன்பறவுள்ளி வணங்கிமகிழ்ந்திது சொல்கின்றார்
இன்புருவாக விசைந்தவனே யிவனொன்றன்றே. (சசா)

வேறு.

முற்றறியதவயோக முழுதுமுணர் முனிவரரோ முடிவில்கீர்த்தி
உற்றவுமக் குறுசீட னாகலாலினிநா னுளுற்றலாவ [போல்வார்
தெற்றினிநீருரைத்தருள வேண்டுமென வினவுதலு மெம்பார்
பெற்றமுனிவரர்கேட்க வீணைமுனி வரருகந்து பேசலானார். ()

வன்னிமுனிவரீன்ற மதியின்மிகு முனிவரரோ வருக்கக்கேண்மின், மு ன்னிருந்தவுமதிடத்தை விரைந்தடைவ தேநலனீர் முகிலைப்போல, மன் னுவண்ணக் கண்ணனுறை துவரையுஞ்சீர் நந்தனன்குவாழ்ந்துசூழ்ந்த நன்னயங்கொள் கோகுலமு மற்றுமுள்ள புண்ணியநீணகருநோக்கி. ()

விண்டுதலமென்பன வெல்லாஞ்சேவித் துறுபுனிதம் விளங்குதீர்த்தம் கண்டுகுடைந் தினிவினாவிற் சோணுடுபுகுந்தவணிற் கவினும்பொன் னி,மண்டுகும்பகோணமிவற் றினுக்குத்தென் புலத்திலின்பம் வாய்ந்து தோய்ந்த, புண்டரிகைகணவனுறை செம்பகநீள் வனஞ்சூழ்ந்த புவன ம்யாவும். (சக)

இரண்டெனும்யோசனைதூர மின்பநிறைந் துறவிளங்கு மிதனிறைப்ப ண், புரண்டுதிரைபரப்பு பொன்னிச்சாயாகவரித் திரைதான் புவனம் போற்றத், திரண்டுவளர் தருமந்தச் செம்பகநீள்வனத்திலன்பு சேரு நோன்பு, மருண்டதுவில்லாதுசெய்யத் தகுவதன்றோ வவ்விடநீர் மரு வல்வேண்டும். (ரும)

வேண்டுமந்த க்ஷேத்திரமற் புதமாகப்பெரிதாகி விளங்கலாலே ஆண்டயனிந்திரைநெருப்புப் பிருகுவிவர் தவமியற்றி யடைந்தாரெல் லாம்,காண்டல்செயும் பிறதலத்திற் கோடிவருடங்கூடிக் கருதுநோன்பு நீண்டசெம்பகாரணிய மொருவருடத் தினிற்றருநன் னேயம்யாவும். ()

ஆகலினவ்விடம்போய்நீ ரருந்தவஞ்செய் திருந்திடினம் மகிலநாதன் யோகமினிதடைவுறுவி ரெனவினை முனிவரர்தா முரைத்தலோடும் மோசமறுமிவருமவர் திருந்தியசி ரருள்வாய்மை முழுதுங்கேட்டுப் பாகுநிறைகுடம்போல வருணிரம்பு வடிவாகிப் பரிந்துமீண்டார். ()

மற்றவர்சொல்லியபுனித தலமொடுதீர்த் தங்களெல்லா மருவிநோக்கித் துற்றினிதுதோய்ந்துசுபை யானகா விரிநதியைச் சோர்வுதீரப் பெற்றவராயடைந்ததிற்றோய்ந் துயர்செம்ப காரணியம் பேணிப்போ ந்து, நற்றவராயடைந்ததனி லாச்சிரமம் புனைந்துதவ நண்ணினரோ. ()

அரித்திரமாநதிக்கரையி லசையாத கல்லுகட்டை யனையராக விரித்தமலர்க் கைகளைநன் குயர்வாகக்கூப்பிவிழி களையுமூடி முரித்ததிலாதுயர்வடக்கு முகமாகக் கோபிலரு மொழியுங்கீர்த்தி தரித்ததிருக்கோப்பிரள யருமிருந்து மந்திரத்தைச் சபித்துமாதோ. ()

நன்றுகநியமமொடு கண்ணனது சரித்திரத்தி னனிதியானம் பின்றுதாயிரம்வருடந் தவம்புரிந்தார் தவமுதிவிற் பேணுமந்தக் குன்றுததவநெருப்பாய்ச் சகலவுலகங்களையுங் கொளுத்தித் தேவர் முன்றுரணியின்மனித ரனைவரையுந் தபித்தசெயன் மொழியலாமோ.

பின்பகிலதேவர்களும் பாற்கடற்குச் சென்றுபொற்ப் பிரியனுகி
முன்பமருநாரணனை நோக்கிவணக் கத்துடனே மொழிகின்றூர்கள்
உன்பெருமை சொலுமளவோ கமலவிழிக்கமலைபதி யுலகநாதா
மன்பெரிய பெருமானே பகவானேநீடூழி வாழிவாழி. (௫௬)

பூமியிலோர்திருமுனிவ ருக்கிரதவம் புரிகின்றூர் புகலுமந்தக்
காமியந்தீர்தவத்தினது கொடுந்தகவா னுங்களெல்லாங்காய்ந்துதீய்ந்து
நேமிவலத்துனைச்சரண மடைந்தோநீ யவர்மனத்தி னேயங்கூரத்
தீமிகலாதுளங்களிகொண் டவர்காணச் சேவைதரச் சேர்தியென்றூர்.()

தேவரொலாமொழிந்தபடி கேட்டுநெடுஞ் சார்ங்கம்வளர் செங்கையோ
னுந், தாவருஞ்சீர்ப்பகவானுஞ் சாற்றுகின்று னீவிர்சென்மின் றனடயி
லாம, லேவினைந்தங் கவருக்குமுன்புசென்று வேண்டுவன வீகின்றே
னென், றேவறுசீர்வானவரை நோக்கிமொழிந் துடனெழுந்தா னுலக
மேத்த. (௫௮)

கமலமகளுடன்கூடிக் கருடனெடும் பிடரேறிக் கருதுதேவ
விமலருடனரதரோ முதலான பெரியோரும் வேண்டிக்கூட
அமலநெடுங்ககனமிசை யவண்டோன்றி முனிவரன்புக் காசைகூர்ந்து
நிமலமுனிவரைநோக்கித் தனதுகையாற் பரிசித்து நிறத்தினலே.(௫௯)

பசுஞ்சோதி நனிவீசப் பத்தருக்குவாத்சலியப் பண்புகாட்டி
விசும்பமர்ந்துவிளங்கின னவ்வேலை விழிதிறந்து வேதந்தேர்ந்து
கசிந்ததிருமுனிவரரு மெதிர்தோன்றுந் திருமாலைக்கண்டு சார்ங்கம்
இசைந்ததிருச்சக்கரநந் தகங்கதையோ டேபதும மிலங்கச்சாத்தி.(௬௰)

வேதாந்தங்களிலறியும் விதமாயு மிரந்தவர்க்கு வேண்டல்செய்யும்
போதானந்தத்துயர்ந்த தேவாதி தேவனுகியுஞ் சீர்போற்றும்
தாதாமுன்புறுபரிவா ரங்களுடன் கூடியுந்தந் தகவுக்கேற்க
யாதானுங்குறைவறத்தந் தருள்பகவான்றனைநோக்கியிரந்துசொல்வார்.

கண்ணனருட்சேவையினன் மனங்கொண்டு வேதாந்தங் காணலாகும்
வண்ணமுறுதிவ்வியமூர்த்தியைத்தரித்துக் கொண்டுமென்றும் வழுவல்
செய்யாத்,திண்ணமுத வச்சுதனு கியுங்கோகுலங்களுக்குச் சிறந்தானந்
த,நிண்ணயனுகியுஞ்சனகர் முதலான யோகிகளா னேயங்கூர்ந்து.(௬௨)

சேவிக்கலாகியுநின் றுளசீர்த்திக் கோவிந்தா திருமாமங்கை
ஆவிக்குநல்லவனே யெனக்கருள நல்லவரத்தாகிவந்த
பூவிற்குத்தனிமுதலே யுனைக்குறித்து வணங்குகின்றேன் பொருந்தா
னந்த, மேவிச்சென் றகண்டசச்சிதானந்தப் பிரமவுரு விளங்கிமாதோ.

முக்காலங்களிலசப்ப டாதுகா லங்கடந்து முடிவதாகி
மிக்கானபரமான்மா வுக்கினிது வணங்குகின்றேன் மேலோர்க்கெல்லா
ம், தக்காங்கிலுயர்ந்தவருக் குயர்ந்தவனா கியுமெண்ணத் தகானேயாயும்
எக்காலுஞ்சொலக்கூடா தவனாயு மிருக்கிற யோகச்சான்றாயே. (௯௪)

தோன்றியுந் தோன்றாதுநின்ற பகவானைவணங்குகின்றேன் சொலுமெ
ஞ்ஞானத், தேன்றுமயங் கியமூட ராலறியவொண்ணாம லிசைந்தஞா
னத், தான்றவர்க்குமெட்டாத வுருவுடன் கூடியுமிருந்தப் படிக்கேபொ
த்த, மீன்றனைநான் வணங்குகின்றே னாதாரமாகார மேற்கொளாதே. ()

சகலலோகங்களுக்கு மாதாரமாய்ப்பெரிதாஞ் சயிலத்துக்குத்
தொகலானவாதார மாகியகூர் மந்தனக்குத் தொழுகின்றேன்பார்
மிகவேந்தவவதரித்த கோலத்தை வணங்குகின்றேன் வேண்டுமென்பன்
முகமாரவவதரித்த நரவரியைவணங்குகின்றேன் முயன்றநானே. (௯௯)

மாவலிவேள் வியிலடைந்து கபடவாமனவடிவம் வயங்கிப்பின்பு
மூவுலகுமளந்தகா சிபன்மகனை வணங்குகின்றேன் முடிவிலாது
மேவுவலிக்கார்த்த வீரியனையடக்கியகோப விபவனாகித்
தாவிலிகலரசர்களைச் சங்கரித்த மழுவலனைச் சரண்செய்கின்றேன். ()

தசமுகனைக் கொலுநிமித்தஞ் சுரர்வேண்ட ரகுகுலத்திராமனாகி
விசயமிகுசனகிமகிழ் வீரனுக்கு வணங்குகின்றேன் மிகுந்தசீர்மை
இசையுமிரோ வதிகொழுநன் றனைநீலக்கலையானைக்கலப்பையேந்து,முச
லிதனைப்பிரலம்பா சுரன்பகையைவணங்குகின்றேன்முயல்கின்றேனே.

அம்மானாகியகஞ்சன் றனையுலகங் காக்குநிமித் தத்துக்காக, மொய்ம்மா
னும் பழிநடையும் போகவதைத் தருளியதேவகிமூத்தாய, பெம்மானை
வணங்குகின்றேன் பிரளயகாலத்துகத்தின் பேர்விற்றோன்றிப், பொய்ம்
மானுஞ்செயலின்மிலேச்சரைவதைக்குங்கற்கியைச்சீர்புரிகின்றேனே.

கேசவனுக்காதியிடை யந்தமில்லாக் கண்ணனுக்குக் கேடில்பாவ
நாசனுக்குவணங்குகின்றே னெனக்கோப்பி ரளயமுனி நாதர்விஞ்சு
நேசமுடனானந்த பாஷ்பநிறை கண்களுள்ள நெகிழ்ச்சியாலே
மூசவடிக்கடியெழுந்து வணங்கியருட் பகவானை முகில்போல்வானை.

படர்விருந்தா வனத்தின்மத்தி யினிலின்பமாகியகோ பாலவேஷத்
துடனீசஞ்சரித்தருளுமுருவமெல்லாஞ்சேவிக்கவுகப்புக்கொண்டேன்
மடல்சேர்பைந் துளவமணமாலைமுடி நெடுமாலே யென்றுவாழ்த்தும்
திடரானமுனிவரனா நோக்கியவர் தலைமேற்கை சேர்த்துச்சொல்வான்

கேட்டீர்நல்ல தவம்புரிந்து கிளருமுனிவரகாள்சேட்கவேண்டும்
வாட்டமறுவனபொருள்கள் யாவையுநீ ரிப்பொழுதே வாங்கிக்கோட்ற்
கீட்டுமிதுவேசமைய மெனவுரைத்தா னருள்வடிவ னிவ்வாறுகக்
கூட்டுபிரமாண்ட புராணத்தில் விண்டுக்ஷேத்திரகண் டத்திற்கூறும். ()

வேறு.

உத்தர பாகத்தில், வைத்தது செம்பகமா
மொய்த்த வனப்பெருமைக், கொத்தறு பத்தொன்றே. (எங)

வேறு.

அத்தியாயமென் றுய்ந்துகொள்வது
புத்திசேர்மனப் புனிதரானவர்க்
குத்தியென்றுநா னுரைக்கலாவதே
எத்திறலென வியம்புகிற்பெனே. (எச)

ஸ்ரீசெம்பகேசாயநம:

முதலத்தியாயம் - முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௩அ௪.

## உ-வது சேவைசாதித்த வத்தியாயம்

சூதமாமுனிவர் சௌனகர் சுகச்செவிகொள
ஓதுவாரினிது கேண்மெனவுகப்பின் மிகையால்
நீதில் கோப்பிரள யர்க்கருள்செய் செம்பகவனத்
தாதரத்தொடமர் வான்மகிழ்வு கொண்டறைகுவான். (க)

வன்னிமாமுனி மகிழ்ந்தருளவந்து நெடுநாள்
பன்னுநல்ல தவநேய முறவே பயில்வுறுத்
தென்னையன்புசெ யுமக்கெதில் விருப்புளததைச்
சொன்னவும் மிடையுறப் புரிவெனென்று சொலவே (உ)

நல்லநல்ல தெனவே முனிவர் நாதனைமகிழ்ந்
தல்லல்யாவு மறுவிக்குமம லன்கழறெழாப்
புல்லுகின்ற திருநாயக புகன்றவெனுளம்
சொல்லுகின்றன னெனப்புகல்வர் தூயவன்முனே. (௩)

திருவிளங்கிவள்ர் செம்பகவனத்தின் மிகுசீர்
மருவிநின்றுள சுயம்பெனும் விமானமதிலே
பொருவில் சேனைமுதலாதியர் தொழப்புகழ்மிகுந்
தருள்பொருந்தி யழகான வடிவாயனுதினம். (ச)

பிரமகற்பவள வுஞ்சிதைவு றுதபெருமைத்
திரமடைந்தமிரு கண்டுசிறு வன்புளாதரும்
தரமமைந்தம ரியோகிகள் வணங்குதகைமைப்
பரமநீயெம தவாவளவெலா மருள்பவன். (௫)

ஆகியிந்த நலமான தலமே யமரநீ
ஓகைகொண் டருளவேண்டு முலகத்தவரெலாம்
வாகுகொண்டு தொழவன்றியும் விசேட வகையே
யோகுதந்தருளு நீயெம துளங்கனியவே. (௬)

எண்ணுகின்றவது தந்தருளவேண்டு மிதுதான்
கண்ணனான வுனதாகிய வெணான்கு கவினார்
வண்ணவேடமினி தென்விழிகள் காணும் வகைநீ
பண்ணவேண்டுமவை யெப்படி யவாக்கொள்படியே. (௭)

தருணமானது தெரிந்துதயை தந்தருள்செழும்
கருணையங் கடலுனக்கடிமை கட்டுரைதரத்
தெருளுறுமுண்டுகொ லெனத்துதிசெயுஞ் சினமிலாப்
பெருமைகொண்டமுனி நாதர்பல பேசினரரோ. (௮)

இன்னவாறுபல வானபுகழ் யாவுமினிதிற்
சொன்னயோகியர் துதிக்குமகிழ்கொண்டு சுருதி
மன்னுகின்றபர மன்பெரிது தன்வடிவெலாம்
உன்னுகின்றபடிகாண வருளுற்றனனரோ. (௯)

ஆதியோட்டளவி லாதுலகம்யாவு நிறையும்
நீதில் பூரணனெனத் திகழ்வுசெய் துறையினும்
மாதுதேவகி வயிற்றிலமை வாகிவளர்சீர்
போதுதோள்க ளொருநான்கு மொளிபொங்கி மிகவே. (௰)

சங்குசக்கர மிலங்குகதை சார்ங்கநெடுவாள்
பொங்குமித்திறல் கொளாயுத மொரைந்து புனைவில்
தங்குதற் கொளிர்பதங்கர் பதினாயிரர் தனித்
தெங்குமொத் துதையமாயின ரெனத்திகழ்வொடே. (௰௧)

பச்சிளஞ்சிறிய பாலவடி வாகியும் விராய்
மெய்ச்சுசித்தரொடு சாரணர்கள் விஞ்சையர் விணோர்
அச்சிறப் பினரநேகர் ககனத்தினவர் நோக்
கிச்சரித்து நனியேத்துதலுடன் செறியவே. (௰௨)

மணிமயத்து மகரக்குழை வயங்குதல் செய்த்
திணிசிறப்பின் வசுதேவனொடு தேவகிதனல்
அணிதுதித்துறவி லஞ்சுதலில் கஞ்சனயரும்
பிணிபயத்தொடவர்மங்கள முழங்குபெறவே. (மங)

துதிசிறப்பொடு விளங்கிளைய தோன்றலுருவைக்
கதிபெறற்குரிய தம்பியொடு கண்டுதொழுது
மதிபொருத்து மகிழ்கொண்டுபினும் வேறுவடிவம்
பதிவுறுத்துதியெனப் பகவனைப்பகரவே. (மச)

வேறு.

முனிவர்காண விகல்கஞ்சனேவ முந்து
வனிதை பூதனையெனும் பசாசு வந்து
கனிவினொடு வபதெண்ணிரண்டு கண்ட
புனிதமால் வடிவுகொண்டுடன் புகுந்தாள். (மரு)

தண்செறிந்திடையர் தங்குறும் பிருந்தைக்
கொண்செறிந்தவன முற்று நந்தருக்கு
வண்செறிந்தசிசு வைக்கொலற்கு மண்டு
கண்செறிந்த முலையிற் கடுக்கலந்து (மசு)

நந்தகோபரழ கானகிரகத்தினன்கு
வந்தளைக்கு ளுறைபாலனை யெடுத்துமன்ற
முந்துமன் பொடுகுழந்தை நீமுகந்து
சந்தமென்முலை யருந்துகென்றுதந்து. (மஎ)

சொன்னபூதனை தனத்திருந்து சோர்பால்
மன்னலான கடுவைத்தவழ்ந்து வாயால்
அன்னபோதமுது போலவள்பி ராணன்
தன்னையுண்டு சவமாக்கி நின்று தானே. (மஅ)

பெறுமசோதை பெரியோர் சுமங்கலத்தோ
டுறுவர்கண்டு கூசலானபோது வஞ்சச்
சிறுவனாமுது சென்றவண்டவழ்ந்து
மறுகல்கண்டு கோபிகைக்கணங்கண் மல்கி. (மகூ)

போற்றலான புதுமைக்குணங் கொள்பாலன்
ஆற்றல்கண்டு மகிழ்வாகியன் பொடைய
வேற்றுருச்செயென் றிரந்துவேண்டிரண்டு
தோற்றருக்கு முன்பு தோன்றுவானுகந்தே. (உம)

வேறு.

அழகுமிகுகின்ற நந்தகோபர்
விழைவக முறைந்த மாதசோதை
எழின்மடியிருந்து கொங்கையின்பால்
நிழல்பெற வருந்தல்செய்து நேரே. (உக)

நீலமேகமென வேபுசழ்நிறத்துப்
போலுமா கமலநீள் விழிகள் பொற்பக்
கோலமார் கைகொடு மற்றொரு குயத்திற்
பால்வளாவுத றொடைத் தொளிபரப்பி. (உஉ)

அன்னைதன் முகமதைப் பரிவுகொண்டு
நன்னயம்பெற வடிக்கடி நயந்து
துன்னுகின்ற வசுதேவர் சுதனைத்தா
மன்னுமன்பினர் வணங்கினர் மகிழ்ந்தே. (உங)

வேறு.

தாயான வசோதைத்தட மடியிற்றவழ் பாலச்
சேயாமுருவாகப் புனைசீர்சால விருந்து
தோயாதரவோடன்னை சுரந்தார் முலைசோர் பால்
வாயாரவிளங்கும்பல் வயங்குந் திருமுத்தே. (உச)

போலப்பொலிமுகமும் குறுநகையுந் திகழ்பொற்பிற்
சாலத்திகழ் கன்னந்திகழ்தரு குண்டலவழகும்
ஏலப்பெரு கானந்தரசத்தைச் செயுமிளைய
கோலச்சொரூபச் சுந்தரஞானத் தொளிகொளலும். (உரு)

நோக்கிப்பினு நோக்கப்பெரு நோக்கந்தரு செயலோ
டாக்கச்சர வசரத்தொடனைத்தாகியவுலக
மாக்கற்பக வுலகோரயன் வருசங்கரன் மகவான்
நீக்கற்றுயர் சித்தர்நிறை வித்தியாதர ருரகர். (உகூ)

பரவச்சரசுக்கள் செறிபடு காந்திருவர்கின்
னரிப்படி யுரைசெப்பிடு நலர்யாவரும் விரவக்
கரவத்தனுளேயன்னைகண் காணத்தெரிவித்துச்
சுரரத்தனை மகிழ்மோகன சோரக்கபடத்தே. (உஎ)

சாரம் புரிபவனுய் மலர்தங்கும் பிரமாதி
யாருந்தெரியாதேயுற வன்பர்க் கெளிதாகித்
தேரும் புதுமைக்குத்தகு திருமேனியுடன்சூழ்
பாரெங்கு நிறைந்தேயுயர் பரவஸ்து சொரூபம். (உஅ)

தானாகிய ஹரியென்பது தக்ருகண்ணனை நோக்கித்
தேனார்துதி புரிதாபதர் சிந்தைக்குண் மகிழ்ந்தெம்
மானேயினி வேறேயொரு வடிவந்தெரிவுறநீ
யானார்வமுறக் காட்டுதியென்றார் புலன்வென்றார். (உ௬)

வேறு.

நவரத்தின சோபைசெய் நந்தர்திருப்
பவனத்திடை சானுவொடங்கைபடத்
தவழத்தகவோடு விரைந்து தகைச்
சுவணக்கவினார் தருசுந்தரமும் (௩0)

மாதாமகிழ்வார் முகநோக்கு விரைப்
போதார்முக சுந்தரமும் பொலியக்
கோதேதுமிலாத குழந்தை தனக்
கோதாவறியோக்கிய முள்ளவெலாம். (௩௧)

தருமாபரணத்தொடு சந்தனமும்
தொகுபேரணி கண்டுதுதிக்கவரும்
சுகுமார மிடைச்சிகளிற் சுலபம்
மிகுமே பிரமாதிகள் வேண்டிடினும். (௩௨)

கதிர்வீசுறு குண்டல காந்தியுடன்
பொதிவாச நறுங்குழல் பொங்குதலும்
துதிவானவர் வானவர் சூழ்பதியாம்
ததியார் திருவாய்ப் பரதத்துவனை. (௩௩)

கண்டன்பு மிகத்தொழுதுங் கனிவே
மண்டும்படி வாழ்த்திபு மாமுனிவர்
தொண்டின் செயனன்றென வேறுதொழற்
குண்டன்னது காட்டென வோதினரே. (௩௪)

வேறு.

ஒருகையில் வெண்ணெயைத்தரித்து மற்றொருகையாலு தறிக்கொண்டு நிர்த்தம், தருதலுடனலர்ந்த கமலம்போலு முகத்தொடு விஸ்தாரமாகி வருவிழிகொண்டுறு பாலகோபாலன்றனை நோக்கி வணங்கிப்போற்றித் திருமகளுயகன் வேறுவடிவு கொளயாசித்தார் சிறப்பிற் சான்றார் ()

வேறு.—பாலரூபத்தொ டொற்றைக்கலை தரித்துப் பயின்மயிற்றோகை யினலங்கிருத முற்றுச், சாலும்மம்புய முகத்துடனிடையர் கோலைத் தன்கையிற்கொண்டு நிரைதகமேய்த்து நின்று, கோலமார்பாது கையடிக்கமலமேவக் கொண்டவிந்திரை கேள்வனண்டு தனிவேடம், சீலமார் முனிவர்கண் டன்புடன்வணங்கிச் சேவித்து வேறுவடிவத்தை யிச்சித்தார். (௩௬)

வேறு.—நவமணி பலபுனை நந்தனதணிகொள்
பவனமதிடைவிளர் பட்டின் விதானம்
சுவணநனகை மிகுசுடர் விடமலரால்
அவணில குறநலவமைவு செய்துறவும் (௬எ)

மங்களதீபம் வயங்குற வெங்கும்
பொங்குற வெகினது புடைபுனை சிறுமென்
பங்கியின் விஞ்சுறு பஞ்சமை மஞ்சம்
தங்குறு சயனதலந்தக வுறவே. (௬அ)

பாலகோபாலரு பம்புனைபவனாய்
ஏலிடையர்க் கிறையா யெழிலுளனாய்க்
கோலவசோதை குழந்தையெனக்கை
யாலணைசீரி னமைந்து துயின்றே. (௬௯)

தயிர்கடை யோசைதனிற் கண்விழித்து
வெயில்விடு கங்கண மங்கதம்விஞ்சும்
செயல்செய்திடைக்கணி செம்பொனினாகிப்
பயில்வுறு கிங்கிணி பம்பொலிபண்பும். (௭0)

திலகம் விளங்குறு திருநுதலெழிலும்
குலவுறுகுண்டல மிலகுகுலுக்கும்
பொலிவொலியிலது பொதிந்துறு வெண்ணெய்க்
குலவுகளவுசெய வுட்கொடெழுந்து. (௭௧)

அணிநடை செயலிலடிக்கடி நின்று
துணிவது கண்டடிதூக்கொலி யின்றிப்
பணிவுறு கோபிகை பவனநுழைந்து
தணிதயி ரோசையுடன் செலறந்து. (௭௨)

வந்துநணித்துறு வாய்வளியாலே
நுந்துசுடர்க்கொளி நோவவணைத்துக்
கொந்து குழற்செறி கோபிகைகொங்கைப்
பந்துதொடுத்து நலங்கள்பயின்று. (௭௩)

வெண்ணெயையுண்ண மிகுங்களவங்கு
நண்ணுறுதேவகி நந்தனை நோக்கி
எண்ணில் களிப்பொடு சன்மமினித்துத்
தண்ணளியோய் தயைதந்தரு ளென்றார். (௭௪)

வேறு.

செய்தவம் பலித்திடைச் சேரிதன்னில் வாழ்
மைவிழிமகளிர் நீராட வாஞ்சித்து
மொய்வனம் வந்துடை முழுதும்பூணுடன்
எய்கரைவைத்துப் பச்சிலை மரங்களால். (௪௫)

நிழலுறத் தெளிவொடு நெய்த்து நீலித்துத்
தழைவுறு காளிந்தித் தண்புனற்குளே
நுழைவு செய்தவர் விளையாட நோக்கியவ்
வெழிலின ராடைகள் யாவுங்கைக்கொளா. (௪௬)

வார்கரைக் குருக்கத்தி மரத்தின் பைங்கிளை
சார்வுறுத்தினிது சந்தோஷந் தானுற
நீர்குடை குநர்கரையேறி நீள்கலை
யார்கொடு போயின ரெனத்திகைப்பொடே. (௪௭)

நாணுடன் கைகளினாலுஞ் சுந்தரம்
மாணுறு தலைமயிராலு மற்றவர்
பேணுமங்கங்களை மூடிக்கொண்டபின்
காணுமைக் கண்களைக்கருதி மூடியும். (௪அ)

வரைபுருவங்களை நெரித்துந் தம்மனோ
கரமுறு கருத்துடன் கவின்விலாசமும்
தரலொடு கலையிரந்தவர்களாயுழல்
பிரசமென் சொல்லியர் பெரிதுசூழவே. (௪௯)

புணர்விளையாட்டிடைப் புத்திகூடியவ்
வணிகிளர் மகளிரை நோக்கியன்பினீர்
துணரன கைகளைத்தூக்கிக் கூப்புகென்
றுணர்முழு நலவுருவான வுத்தமன் (௫0)

விண்ணவர் விண்ணவனுகி மேம்படு
கண்ணனைக்கண்டிரு கோபங்காய்முனிப்
பண்ணவர் வேறுருப்பார்க்க வேண்டினர்
அண்ணலுமவர் மனத்தமைவுக் கொத்தனன். (௫௧)

வேறு.

செங்கழுநீர் முகையென்கையின் விரல்கள் செறிந்து பொல்லாங்
தங்குறவூதலுடன் பசுவின் புடைசாய்ந்துறவப்பசுநா [குழலைத்
நுங்குறவோரடி கானரஸத்தினுழைந்த திகந்தருபால்
பொங்குற நன்பசுவின் கணமங்கு புகுந்ததளப்பிலவே. (௫௨)

கண்டுறுதேவ கணங்கள் குவித்திருகை கொடுசூழ்வுறவே
அண்டர்களுக்கிறையாகி விளங்கியனுக்கிரகம் புரியும்
விண்டுசுரப்பசுபால சுவாமியைவேண்டல் செயும்படிமைத்
தொண்டர்பணிந்து துதித்துரு வேறுதொழற்கு விரும்பினரோ. ()

வேறு.

கண்ணன் செயுங்களவு கண்டுகொளவோர்கோபி கைப்பவனவுட்புரை யிலே, வெண்ணெய்யுடன் றயிர்முதற் செறியவைத்தவள் வெளிக்கத வினைச் சிறிதுளே, நண்ணும்படிக்கமைவு செய்து மறைவாயுற லங் காது முன்பின்னெலாம், எண்ணங்கொடுத்தடி யிடுந்தொனியிலாது மௌவேகி மனையிடை நுழைந்தே. (ருச)

அவள் கபடுதெரியாதவன்போல வைத்ததயிரனை நுகரவக்காலே யில், துவளிடையுடைக்கோபி கைக்கதவு சங்கிலிதொடுத்து விரைவிற் சென்றுதாய், இவள்சொலுமு னுரைதுணிய விப்போதிலாமென வி ணங்காதசோதை மனையில், தவழுரலிடைப் பிணியுடன் கன்டதே கண் டுதவர் வேறுருக்கிசையவே. (ருரு)

வேறு.—வளர்விருந்தாவனந்தன்னிலே வாகொடநேசம்பசுக்களைப்
பிளிறவோட்டிக்கொண்டுபின்சென்று பேணிடக்காலேக்கொஞ்சம்வளைத்
தொளிர்தர மற்றொரு காலினையூன்றி நின்றுமூங்கிலின்குழல்
கிளரிசையாச்ச ரியங்கொளக் கேடறவூதிக்கிளத்தியே. (ருசா)

மென்னடைதந்தும் விரைந்திட மேவுபக்கத்துறுபூமுடி
தன்னைநோக்கிக்கொண்டு மின்பொடு சார்ந்தும் விசித்திரத்தண்மலர்
மன்னவனை வனமாலையும் வார்மயிற்றோகையு மற்றவும்
துன்னலங்காரமு மின்னவே தோன்றும் வடிவுதுலங்கவே. (ருள)

தேவர்கள் கின்னரர் சித்தர்கள் சேர்தருசாரணர் சேவிக்க
மேவுபு மற்றவர்பூசிக்கவேண்டி விளங்கும் பிரபுவை
நோவறவே பலகாலமும் நோற்றதவத்தினர் நோக்கியே
ஆவல்கொ டேதொழுதையநீ யாகுதி வேறென்றறையவே. ()

வேறு.—வலப்பதாம் புயத்தாற் பின்பக்கமாக வருமிடத்துப்புறங்காலே
நலத்துடன் றெட்டுக்கொண்டிடக்காலே நன்குநேராக வைத்திரண்டு
மலர்க்குநேர்கால்களாலும் வித்தியாசமாய் நின்றுகொண்டு கன்றுகளோ
டுலப்பில் கோக்களுமான்களும் பக்ஷிகளுஞ்சூழ்ந் துறப்பசுவினத்தினை
மேய்க்கும். (ருகூ)

கோலது நுனியிலிரண்டுகைகளையுங் கொண்டதன் மேற்சிபுகத்தை,
ஏலவைத்துக்கொண்டிணங்கு கோபிகைகளிரண்டு தாமரை மொட்டுப்

போலு, நிலவொண்கண்கொள் குடங்களைநோக்கி நேசிக்குந்தேவகிகுமரன், பாலுரோமக் கூச்சொடு சிலகாலம் பார்த்து வேறுருவுக்குப் பரிந்தார். (கூ௰)

வேறு.

குளிர்விருந்தாவனத் திற்பால்கறக்கும் குடமிடக்கைக் கொண்டணைக் குங் கயிற்றைத், தளிர்வலக்கைக்கொண்டு கற்பகவிருக்ஷத்தாழ் நிழலி னிற்கு மிடையர்க்கிறைவனுகி, ஒளிர்பிரபுவான கண்ணன் சேவைகண்டே ஒருதமையனுெடு கோபிலர் தெண்டனன்கு, தெளிவுகொடு செய் தன்பினேடின்பு கொண்டுதேவ வேறெருருவடிவமாகென விரந்தார். ()

வேறு.—ஹரிக்குத்திங்கு செய்தற் கருத்திகொள்
கருத்திற் கஞ்சனேவக் கடைப்பிடித்
துருத்துச்சேரிரு வோரிலே யொரு
தருக்குச்சார் பழந்தான் விளாவரோ. (கூ௨)

எனக்கொண்டானெரு வன்பினேனையோன்
வனக்கன்றுயினன் மன்னுகாலையில்
தினக்கண்டார்வமே சேரிடைச்சிறுர்
புனத்தண்ணந்துழாய்ப் பொன்னின் மார்பனே. (கூ௩)

வேண்டினுர் விளவின் கனிக்குகப்
பாண்டுகொண்ட போதடைய வவ்விடத்
தீண்டுகென்று கொண்டே யெறிந்தவர்
மாண்டுவிழ்வது காணமாட்டினுன். (கூ௪)

கண்டுளோர்களாச் சரியங்கைக்கொளக்
கொண்டகோலம் வன்னிக்கு முன்குலாம்
வண்டபோதனர் மகிழ்ந்து கண்டுசேர்
விண்டுவேறு நீவிளங்கு கென்றனர். (கூ௫)

வேறு.—சர்ப்பங்களுக்கு நெடுமன்னனுகு தலைமைக்கு ரூரவடிவிற் பொற்பங்குகொண்ட படமங்ககற்று பொலிவோடு காளகூட வெப்பங்கொளுத்து விடம்வீசியாவும் விரவாது காளியனெனச் சொற்பொங்கராவினைச்சென்றுகொண்டு துவளப்படத்தின் மிசையே.

இடமென்சரணம் துடனின்றிடக்கை யினில்வால் பிடித்துவலமாம் தடமென்கரத்த பிரயங்கள்விஞ்சு தகவின்புசெய்து தனியே நடனந்திருத்து பகவானைநன்கு நலிகண்டு கோபிலருமுன் புடனின்படைந்து சுகுமாரவேறெருருவங்கொளச் சொலினரோ. ()

வேறு.

சேரித்தலத்திடை மினாைப்புணர்த்துறு சலாபச்சிறப்புடலெலாம், ஆரத்தழைத்து மொளிராதைத்தடத்தன விலாசத்தணைத்ததனிலேய், பாரத்துறைத்து நழுவாகத்திருத்தணிகண் மேவிப்பசப்புறுலார், மாரத்தணைத்து ம்மறைவாகிச்செழித்து மணம்வாய்ச்செச்சை மெய்ச்செறியவும்.

இடம்விட்டுநழுவி யொளிர்மணிமுத்து வடமின்வளையெழின் மிக்குலாவியபுயத், தடமுற்றுமினிய செவ்விமலர்மொய்த்து நிலவவுமொய் தருகைக்கண்மேவியவளைத், திடமெய்ப்பு மதரவொளிவிடுவிப்பு நிறையுமதிதிகழ்விப்பி னுகியமுகத், துடனக்குமணிக ளொளிர்தலைமொய்க்குமயிர்களுடனுறு மெய்ச்சுரதிமிகுதியால். (௬௯)

பீதவம்பரமலைவுசோரவும் பழவடிவுபேரவும் பெரிதழகுலாய், ஆதவங்குலைவுறுப வீதமூங்தொறுமக ளிரானகம்பலுறு குறியால், மேதகுங்கொணைவளைவுமூவிதம் பெறுவதொடு வேள்வணங்காள் வடிவுகாண்,மாதவம்புரியுமுனிநாதரிங்கித வடிவுமால்செயும் படிவினவினர். (௭0)

வேறு.—ராசமண்டலத்தி னடுவிருந்து கொண்டும்
பேசுமண்டருக்குப் பிரபுவாகி நின்றும்
தாசனென்பவர்க்குத் தயாளுவா யிரண்டு
நேசமங்கையர்க்கு ணிணையவங்கை கொண்டே. (௭௧)

நடுவினின்றுநடன நவில்செய்தங் கனேகம்
மடவமங்கையர்கடம் வளைவு கொண்டுநேசம்
தொடரணங்கு பொருவத்தொலைவில் பண்புமேவிப்
படுகலன்களிலகிப் பலசிறந்துலாவி. (௭௨)

எட்டிரண்டுமேவா யிரமடந்தைமாரில்
கிட்டிமின்குலாவு கிளர்கலிங்கமேவி
விட்டிருண்டநீல மிகவிளங்குமேகம்
பெட்டிலங்குபூமின் பிறழ்வுடன்குலாவி. (௭௩)

புலிநகத்தநேக பூஷணங்களாலே
மலிவுறுத்துநேய மாலையங்குகாணும்
பொலிவுமிக்குளோர்தாம் புகுநலன்பினீடி
மெலிவறுத்துமீள விழைவிரந்துளாரோ. (௭௪)

வேறு.—விளையாட்டு நிமித்தமாய்க்கோபாலருடன்கூட் வீதியிற்றன்களைகாட்டி நடந்துவரும் போதுதெகிபாண்டர் மனைக்கண்மறைந்து தளைவிட்டுமவரதுபுண் ணியபாகத்தாற் றன்னவ தாரமெல்லாம் கிளைகூட்டும்படிநோக்கி வேறுருவஞ்சேவிக்கச் சிந்தைசெய்தார். (௭௫)

வேறு.—பாலரூபமொ டங்கபுஷ்டி படைத்திளம் பருவத்தினுக்
கேலவாபர ணங்களாலெழி லெய்தியெய்து சுருட்டையாம்
நீலரோமம் விளங்கிநன்முக நேரநீல நிறப்புயற்
கோலமேனிகொ டணிகொண்மஞ்ஞை கொடுத்ததோகை குலாவவே.

புனைதரும்பொலன் முடிதுலங்கெழில் பொழியநீலநதிக்கணூர்
நனைதரும்பசி யவிலைநன்மர நறியநீழலின் மறைவுசால்
அனையவெண்மண லிடையிடைச்சிய ரவர்மணத்தவ ரலகிலார்
நினையமன்னிப நடுவின்மன்மத னெகிழுமன்மத னிகரவே. (எஎ)

தங்குமங்கள விம்பநீர்மை தரச்சிநேகிதர் சாரநீ
டங்குநுங்கல்செ யாடலிற்குல வமரருக்கமை வானசீர்
பொங்குநன்கின ரும்விரும்புறு பொழிதயிர்ச்செறி போனகம்
பங்குபங்குறவங்கிடங்கை பகுந்துகொம்பு பிரம்பெலாம். (எஅ)

கக்கமொக்க விடுக்கியூறிய காய்கள்கை விரனடுவிலே
ஒக்கவைத்திளை யோர்குதூகல முறமிசைந்திடை யொசிமினார்
பக்கமிச்சிறந்த வர்கண்மிச்சில் பரிந்துகொண்டயில் பண்பினால்
மிக்கவொப்பறு வேடனாகி விரும்புவோர் தவவிமலனாய். (எகூ)

விழைவதந்தும நேகமன்பு செய்விமலர்யாரையும் வினைதபுத்
துழைநலம்பெறு விப்பதாக வொருங்கமைந்தொளி ரொளிகுலாய்த்
தழைவுறும்பிர புவைமகிழ்ந்து தனித்தவன் பிரசாதமுண்
டிழைதவந்தரு பலனடைந்துரு வெய்துவேறினி யென்றனர். (அ௦)

வேறு.

ஆயிரங்கண்ண னுக்கயர்பூசையைச்
செயிருங்குன்றி னுக்குச்செயும்பொழு
தேயவிந்திரன் கோபத்தினாலெழுந்
தோய்விலாத பெருமழையுற்றதே. (அக)

கோகுலத்தொடு கோவலர்யாவரும்
ஆகுலத்தினராக வவர்க்குநோய்
போகுறப்புரி வானருள்பூத்துநீள்
வாகுறப்பெரு மாமலைகொண்டரோ. (அஉ)

ஆட்லசெய்தொரு வர்க்குமொராசுதான்
கூடலின்றிக் குடைபிடித்தேழுநாள்
வீட்லின்றிப் பொழிமழைவெள்குறத்
தேடல்செய்விழி சேர்மழைசிந்தியே. (அங)

ஆயராய்ச்சிகளா வினஞ்சோர்விலா
தேயவானவர் வானவரீசனை
மேயதேவகி வேண்டுகுமாரனைத்
தூயமாதவ ராயதுணைவரும். (அச)

கண்டுகண்கள் களித்தற்புதத்தராய்த்
தெண்டனிட்டுத் திருவருள்போற்றியே
மண்டுமன்பின் வழிச்சென்றுமற்றொரு
விண்டுசேவை செயற்குவிரும்பினர். (அ௫)

வேறு.—சவுனகபகவானே தகைமிகுபிரமாவால்
கவர்பசுவொடு கன்றுகருதிடை மகர்யாரும்
புவனியின் மறைவாகிப் போமளவொருமூலப்
பவமிலதெவனுஞ் சால்பாவன பரனாகி. (அசு)

புங்கவருத்தமனென் றுணரவு றுபுராணன்
மங்களவடிவாக வளர்பகவானேதான்
அங்கணிலாதேபோ கனையவருறுகோலம்
தங்கினபடிகண்டு தவர்நட்டமதுதந்தார். (அஎ)

வேறு.—கோபிகைக் கிணங்குவீடு கொண்டவுத்தி யானமென்
பூபரப்பு மண்டபத்தி னடுவிலே பொழிற்கணார்
தாபரத்து லாமென்மாரு தத்தினு லலர்ந்துவெண்
சோபைகக் குறுங்குடைத் தொகுப்பின்மல்லி கைக்குழாம். ()

வாசம்வீச மூசுபூமணந்து நாறுசந்தனம்
காசிலாவகிற் செழித்த கட்டைவிட்ட தூபமும்
வீசவாசமேவுபஞ்சு மெத்தையம் படுக்கையில்
தேசுமே விலோகமெய்ச்சு சிங்கநன் கிருந்தரோ. (அகூ)

பட்டுவெள்ளை கொண்டுபல் பணிக்குலஞ் சிறக்கவோர்
கொட்டுசங் திரற்குநேர் கொடுத்தசீர் முகத்துடன்
கிட்டுநல்ல புருவநேர் கிளத்துமங்கம் யாவையும்
தெட்டுகுந்தாஞ்செறிந்து சீர்குலாகிதம்பமே. (கூ0)

எண்கருத்தி யம்புபார்வை யெழிலுமேவு கின்றவோர்
பெண்கனிக்கு மகிழ்வுகொண்டு பேணுதன் மடிக்கண்வைத்
தொண்கிடைத்த வவள்சிரத்தி லோதிசந்த னதியால்
அண்கொடுத்து நீவிவாரி யவளதங்கம் யாவையும். (கூக)

கண்ணிமைத் திடாதுகண்டு தொட்டுமென்னு காதல்கூர்
பெண்ணதட்டி யுதறுபோது பெரிதுமஞ்சு பேச்சுடன்
நண்ணயக் களிப்புளானை நன்குகண்டு புதுமைசால்
கண்ணமற்றும் வேறுருச்செய் காணவென் றிரந்தனர். (கூஉ)

வேறு.—சத்தியபாமைசந் தோஷமாகப்பரி
சுத்தர்வாழ் கின்றசுவர்க்கலோகத்திலே
யுத்தம்வானவருடன் செய்துமற்றும்பர்தாம்
வைத்தவோர்பாரிஜா தத்தையேவவ்விஞன். (கூங)

அன்னகற்பகநெடுந் தருவையங்குற்றிவண்
துன்னுறுஞ்சத்திய பாமைசொன்னஞ்சிறந்
தென்னவாழ்மனையிடத் தெய்துபூஞ்சோலையில்
பன்னுருக்குமணிவாழ் பவனநாண்மலரெலாம். (கூச)

உதிரவைத்திட மனத்துறு சினப்பாமையைச்
சதிருனக்கேதருத் தானமைந்துளதெனப்
பதிவுறுத்தியதனிப் பகவனைப்பலநெடும்
துதிகள்செப்பிப்பினோர் சொருபம்வேண்டினரரோ. (கூரு)

வேறு.

சத்தியபாமைசமந்தக மாமணிதன்னல்
உய்த்தனள்கொள்வ மெனத்தெளிகண்ணனுகந்தே
நித்தியநாரத நீயெனையேபெறுநின்னல்
அத்தனிமானனையாள் கெருவந்தெறலாமே. (கூசு)

என்னலுநாரத னின்புளதேயிதுவென்று
மன்னியசத்தியபாமைகண் வந்துவருந்தா
இன்னருடைதநலபுண்ணிய விரதமிசைந்தால்
நன்னலமானசெல்வங்க ளெலாநலநண்ணும். (கூஎ)

அல்லதுசெல்வ நலம்பயனென் றரலாகும்
சொல்வதுகேளுன தன்பனையின்பு தொடர்ந்தே
வல்லையெனக்கு வழங்குதியாயின் மகிழ்ந்தே
நல்லபயன்றரு நீபெறுசெல்வ நல்கென்றான். (கூஅ)

நன்றெனவெண்ணி நலஞ்செறிமென் கொடிநண்ணித்
தன்றனிநாதனை யீவதுவே யுயர்தானம்
என்றவனேபெற வீதலுநாதனிவன்பால்
ஒன்றினனன்றவ ளூற்றனசொற்றிடலாமோ. (கூகூ)

மிக்கதுயர்க்கொடு விட்டிடலாகி விரைந்தே
அக்கணமேபெறு நாரதனைக்கணவன்றான்
ஒக்கநிதிக்குவை பெற்றுதவற்கு ளுறுத்தித்
தக்கதுபேசு தரத்துடனேர் துலைதன்னில். (௱)

கண்ணனைநேர் கனக்குவை பெய்துகடுத்தற்
கொண்ணிதிசால கிலாமலுருக்கு மணிக்குத்
தண்ணளிநாத னுறக்கனகந் தருகென்னைப்
பெண்ணமுதானவ ளெண்ணறுமா துதிபேச. (௱௧)

இட்டநிதிக்குவை யாவுமகற்றி யிரந்தாள்
பெட்டபதிப்பத மெய்துதுழா யதுபெய்து
தட்டநிறைத்தக வாவதுதந்து தனித்தாம்
கட்டதனித்திரு நாதனைநாரதனல்க. (௱௨)

பண்ணவடைந்தனள் சத்தியபாமைபரிந்தே
நண்ணியநாதனை நாரதனுந் திருநாதன்
புண்ணியசேவை பொருந்தடிநாறு துழாய்கொண்
டெண்ணியபேறிது வென்றுதுறக்க மிசைந்தான். (௱௩)

அத்தகைசெய் சவுரித்தனிவேட மதைக்கண்
டித்தகைவன்னி சிறுரிருவோரு மினித்தே
மெய்த்தகுசேவை விரும்புதியான மிகுந்து
வித்தகன்வேடம் விரும்பினர்வேறு வியந்தே. (௱௪)

வேறு.

தேவர்க்குத்தேவனான செகப்பதிதிகழசோதை
ஆவற்குத்தகுதியாய்த்தே வகிசுதனாகிக்கஞ்சன்
ஏவக்குவலயாபீடமெனு மதயானைதன்னைச்
சாவக்கொல்பொழுதுத்தண்டத் தடக்கைகளுடனேகூடி. (௱௫)

மல்லனாமாட்டவிஞ்சு வலந்தனைப்பார்க்கப்பட்டு
நல்லமன்மதனாமென்னு நலந்தனைப்பெண்களாலே
வல்லையிற்பார்க்கப்பட்டு மன்னர்கண் மன்னர்க்கெல்லாஞ்
சொல்லுசேகரனேயாகத் துதியொடுநோக்கப்பட்டும். (௱௬)

வேந்தர்களவைபினாப்பண் விரும்பியந்நகரிலுள்ள
மாந்தர்களிமையாராகி மலர்க்கணானோக்கப்பட்டும்
போந்தவணிருக்குங்கண்ணன் பொலிவுகண்டதியானச்
சாந்தர்வேறொருநன்கோலந் தனைப்பெறவிரந்துநின்றார். (௱௭)

வேறு.—அழகான்மிக்க துவரையிலேச ரற்கால
நிழலார்திங்கள்போ லொளிர்மாடநெடுமுன்றில்
தழல்போலுஞ்சீர் சான்மணிமன்றந்தனில்வாசம்
சுழலாநின்ற சந்தனகந்தந் தொடர்வாக. (ருஅ)

அகிலோடே மங்களகஸ்தூரியதன்வாசம்
புகிலார்மென்றலை யதணைமுதற்செய் பொருளாலே
நெகிலாதேகொள் புனைவொடுநீடுத் தமமான
துகிலார்பள்ளி தனிலரசானோர் தொழநீடி. (ருகூ)

வாழரசன்போ லேசயனித்து வலமாடு
தாழ்சுவணம்போ லேயொளிர்தேகந் தருதேவி
வீழ்வுறுதூவிச் சாமரம்வீசி மிகுநேயம்
சூழ்வுறுசேவைக் கார்மணிமேகந் துனல்போலே. (ருய)

நெய்த்துநிறத்து மெய்ச்சுகுமார நிலைகொண்ட
சத்தியபாமை மெய்ச்சுபசாரந் தருகையில்
வைத்தசுணச்செப் புக்கொடுவெள்வெற் றிலைமாயி
மொய்த்தகடைக்கட் பார்வைகொடன்னூர் முன்முன்னே. (ருயக)

நோக்கப்பட்டு நுண்பரிசுத்த நுவல்போர்வை
போர்க்கப்பட்டும் பொதுவர்தமக்கோர் பூபாலன்
ஆக்கப்பட்டு மார்தயவெல்லா மருள்வானுய்ச்
சேர்க்கப்பட்டுஞ் செண்பகமென்பூச் செறிவாகி. (ருயஉ)

வேணுவீணை மிருதங்கம்முத லாமிக்க
மாணுறுகானஞ் சேரமகிழ்ந்தும் மகலோகத்
தேணுறுபோகம் போலெவருக்கும் மெட்டாத
நீணலவாசு தேவனெடுஞ்சே வையைநேரோ. (ருயங)

அற்புதமாக விளங்கக்கண்ட தவத்தன்னூர்
பொற்புறவே சேவித்துறுதாபப் பொறைபோகிப்
பற்பலவாழ்வின் மிக்கினிவேறே பரனேநீ
இற்புருவாகற் கொப்புறுகென்று ரிசைநின்றூர். (ருயச)

வேறு.—பாண்டவர்க்கு நன்குபார், வேண்டுதற்கு விஞ்சுதூ
தீண்டுறற் கெழுந்தபோ, தாண்டுருக் கமைந்ததே (ருயரு)

பூவையென்ற பூநிறம், மேவவிண்ட சாமளம்
பாவுதண்ண மேபடிந், தாவனண்ண லானதே. (ருயசு)

சமலமன்ன கண்களும், விமலமன்னு மென்பொனின்
அமலமின்னு மாடையும், நிமலமன்னி நீடவே. (ரயஎ)
திவ்வியச் செழுங்கலன், வவ்வுறுத்து மாமணச்
செவ்விசெப்பு சந்தனம், கவ்விவீ கமழ்ந்தவே. (ரயஅ)
தம்பல்வட்டில் சார்வுற, இன்பவெற்றிலைச் சுருள்
பின்புகர்ப் புரப்பெரும், பம்புசெப்பு பல்கவே. (ரயகூ)
சேரவந்து செல்பரி, சாரரோடு தாழ்வில்பல்
வீரர்சூழ வீசுவார், வாரசா மரங்களே. (ரஉய)
பட்டினொளி பாய்குடை, நெட்டுமே னிழற்றவும்
கொட்டுதாள மோடுகூய், மிட்டுவெண் டயங்களும். (ரஉக)
மதியின்மிக்க வந்தியர், துதியினிற் றெருத்துற
அதிசயித்த சயினியம், பதிகளுட் படிக்கவே. (ரஉஉ)
அவர்களுட் கருத்தையாய்ந், தெவர்களுக்கு மின்பமேய்
குவனடுத்தல் கூடுபஞ், சவருயிர்ச் சகாயனே. (ரஉங)
ஆதியின்றி யெங்குமாய், நீதியா னிரம்புவான்
தீதில்பூமி சேர்பொறை, ஏதிலாக வெண்ணினன். (ரஉச)
ஆயகண்ணை னத்தெரிந், தேயவெண்ணி யின்பமே
மேயசீர்கொள் விண்ணவர், மாயவேடம் வவ்வுவார். (ரஉரு)

வேறு.—காண்டீவனுக்குக் கடுந்தேர்த் தொழில் கண்டுகொண்டு
நீண்டீனுதயா நிதியாய்மயி னெய்த்ததோகை
பூண்டீர்மலர்சூழ் முடியுந்தடம் போந்தகண்ணும்
நாண்டீர்வறுநன் மறுவாலெழி னல்குமார்பும். (ரஉகூ)
நீலப்புயலை நிகர்மேனியி னெய்ப்புமன்பு
சாலத்தணிந்த தகைமூர்த்தியென் றன்மையுஞ்சேர்
கோலத்தனிவே டனக்குங்கவின் கொண்டவேளென்
றேலத்திகழ்வுங் கொடுநீளிடமெய் துகையில். (ரஉஎ)
கொள்ளுங்கடி வாளமுஞ் சாட்டையைக் கொண்டகையால்
விள்ளும்விமலப் பிரமப்பெரு வித்தைதன்னைத்
துள்ளும்மனுமத் துவசப்பெருஞ் சூரனுக்குத்
தெள்ளும்படியுந் திருத்தேர்ப்பரித்திண் குளம்பால். (ரஉஅ)
கிளருந்துகளிற் செறிந்தார்முகக் கேழுடன்சீர்
வளரும்பலவச் சிரமத்தினில் வாய்த்தமுத்துக்
கொளிருந்திறத்தேர் தருவேர்வைவி னொள்ளிதாகி
மிளிருந்துளிக ணிறைநெற்றியு மெய்யின்வேய்வும். (ரஉகூ)

சிறக்கத்திகழுஞ் செகநாதனைச் சீர்த்தபார்த்தன்
மறக்கற்கருமா வலவன்றனை நோக்கியுண்ட
துறக்கத்தவருந் தொழற்கேதருந் துய்யகோலம்
பிறக்கற்கினி வேண்டினர்மாதவப் பேறுபெற்றார். (௱௩௰)

இவ்வாறு முப்பதெழில் வேடமெல்லாம் விளங்கச்
செவ்வாய்மலர்க் கட்டிணிதோட்பக வான்சிறந்து
கைவாய்வலத்துக் கவின்மூவளோவாய்க் கதிர்த்து
மெய்வாய்பிரம்பைக் கொடுவேறொரு மென்கைதன்னை. (௱௩௧)

வருஞ்சத்தியபாமை மென்றோளுற வைத்தியாவும்
தருஞ்சேவடி வேறொருவாகது தங்கவைத்து
விரும்புற்றருக்கு மணிநோக்குபுன் மென்னகைக்குப்
பெரும்பொற்பிரபை பிறழ்ந்தோங்கு விமானமேவி. (௱௩௨)

பொலஞ்சம்பகப்பூம் பொழில்ராஜ கோபாலனாக
இலகுஞ்சவு ரித்தன்விலாசரூபத்தை நோக்கித்
துலங்கும்பரிபூரண காமராய்த் தூயதொண்டர்
கலங்கங்கெடத் தெண்டனிட்டே யிருகண்களார. (௱௩௩)

அலங்காரமெல்லாஞ் செறிராஜகோபாலனைத்தாம்
விலங்காதுசேவித்திட வேண்டுமென்றன்புவிஞ்சிக்
கலங்காதுகோப்பிரளையர் நுதி காமராஜர்
நலங்காதலித் தென்றுணைகின்றன னல்லருதன். (௱௩௪)

வேறு.

உலகமெல்லாங் காப்பதற்கன்பர்க் கெளியனாய்த்தொழுதோர்க்குறுதாபத்தை, விலகு விக்கும் பரந்தாமா வானபகவானே கோபிகைமென்றோளில், நலமுறுமோர் கையைவைத்து மற்றொருகையிற் சுவணகற்பிரம்பை, இலகுறக்கொண் டருளரச கோபால வேஷத்தையினிதுகொண்டு.

செம்பகமாவனத்தமரு முமக்குத்தெண்டஞ்சமர்ப்பிக் கின்றேன்றேவர்
பம்புபிரமாதிகளா லறியவொண்ணு வுருவினனாய்ப்பணைத்து மிக்க
நம்புறுவேதங்களாள விடப்படா மூர்த்தியாய் நவிலுஞ் சாஸ்திர
சம்பிரதாயச்சகல வாக்குகளா லெணக்கூடாத் தன்மையோனாய். ()

விளங்கரியே நீயெனது கண்ணுக்கு விஷயமானீராகிலும்
களங்கமில்லா ராஜகோபால வலங்காரமது கவினவென்றும்
துளங்கற ரம்மியமான விந்தச்சம்பக வனத்திற்றொழுதற்காக
வளர்ந்தருள வேண்டுமென ராஜகோபால வடிவத்தைக்கொண்டு. ()

அந்தக்கோப்பிரளயருக் கப்படியேயாகட்டு மென்றன்பிந்து
முந்தக்காவினிலேயே தன்சனார்முதலான முனிவரோடு
சந்தத்தார்பரிவாரத்துடனிருவர்சேவிக்கத்தமைத் தன்பார்ந்து
வந்தப்பூசுரர் பூரித்துத்தாபிக்கத் திகழ்ந்தான் மன்னனென்றான். ()

எனவினவிச் சவுனகமா முனிசூத பகவானே யெல்லாலோக
மனனை விந்தக்கோபால னயனிலக்குமியால் வழங்குமெந்தத்
தினமெந்த யுகந்தனிலே பூசிக்கலானனச் செயல்கள் யாவும்
வினவுமெனக் குரைத்தியெனச் சூதபுராணிசனந்த விஷயந்தன்னை. ()

சொல்லுகின்றான் சத்தியலோகத்தின் முன்னே பிரமனெவற்றினுக்கு
ஞ் சூழ்ந்து வில்லுயர்ந்த தலத்திருந்துலோக முழுமையும் வருந்திவி
தித்து நான்காம், நல்லபிரமக்ஷத்திரியவைசிய சூத்திரரை நல்கிவெவ்
வே, றல்லுமவர் கருமத்துக் குசிதமாகச்சனனம் பிழைப்புச்சாவு. ()

அப்படிக்குப் பகுபக்ஷி மிருகங்கண் முதலான வனைத்து நீரில்
செப்புகரை யிற்சனிக்குஞ் செந்துக்கள் யாவையுஞ் சிருஷ்டித்து நோக்
ஒப்புபதினாலுலகத் திலுந்தனக்குச் சரியொருவ ருமிலையென்றெ [கி
மெய்ப்புகெருவத்தையடைந்தானிருடிகேசனயன்மிகைகயைத்தேர்ந்து.

பிரமாவின் மனத்திருந்து மாயைசெய்தான் பின்பிரமன் முடனகித்
தரமறு பாமரனென் சனகர்முதல் யோகிகளைத் தகுதிநோக்கிப்
பரவுதற்கி யோக்கியனா துலகாக்குகை மறந்து பணியொன்றில்லா
உரவில் பிரமாவிடத்தில் வந்துன்னப்பார் பிரமாவே யுலாக்காமல். ()

வீணேயேனிருக்கின்றாய் செய்யவேண்டுவ தெரிந்தும் சிருதாவாக
நாணமலிருப்பானே லவன்சகலமுக்கெதிர்ந்த கல்லோலாலே
மாணுதுசபிக்க வசமாகுவன் காரியங்தெரியா மனத்தானுக்கும்
கோணகு மெனப்பிரமன் கேட்டவர்களைப்பார்த்துக்கூறினனே. ()

தன்கெருவத்தால் வந்த விருத்தாந்தத் தைப்பின்பு சனகரான
நன்குணர் ஞானிகளிந்த வார்த்தையை நான்முகன் கூறன்று கேட்டு
முன்கருடவாகனத்தார் பகவான்றன் மாயையென முன்னிச்சொல்வார்
மன்கமலமறையவனே யார்க்குமிதை யக்கமல மலரின்மீதே. (௱சுச)

தெரிவுறு மந்தரியாமி யானநாராயணனைச் சிந்தியாமல்
கெருவமடைந்தனை யினிமே லந்தநாராயணனைத்தானேகிட்டிச்
சரணமடை குதியிந்தச் சராசரங்களவனையன்றிச் சரிப்பதில்லை
ஒருவனவன் விழிமூடிற் சகமுடிவுந்திறக்கிலுண்டா முறுதியாலே. ()

அவன்சரணே சரணென்ருன் முன்போல ஞானமுண்டாயவனைத்தா ழ்ந்து, புவனமெல்லாஞ் சிருட்டிக்கலாமென விப்பிரகாரம் புவி யிலோராம், தவருரைத்தல் கேட்டுமலரயனுமவ்வா றேபகவான் சந் தோஷிக்க, இவணீவிருரைத்தபடி யியற்றுவனென் றவனிமிசையிழிந் தான் மன்னே. (௱சசு)

தவம்புரியமினைத்து மகளாகிய காவிரிக்கரையின்றனக்குத் தெற்கில்
நவம்புரியுஞ்செம்பகமாவன மானவுத்தம நற்றலத்தைநண்ணி
உவந்துறுதேனிறைந்தமல ருறைந்திடவண்டினஞ்சேவலுடனேகோழி
திவந்தருவான்மஞ்ஞை யிவையழகொர்விசெய் துறநிரம்பிச் சிறக்கலாகி.

தங்கநிறம் போற்பூத்த சண்பகங்கணிறைந்து மொன்றுதனக்கொன்றே தும்,பொங்குதலில்லாது சிங்கம்யானை புலிபசுமுதல பொம்மல் சேர்ந் தும், கங்கறுமாச்சரிய மகங்காரமற முனிக்கணங்கள் கவின்றுந்தீர்வில் புங்கமிகு மத்தலத்தி னெழினேக்கிய வனேன்பு புரியவெண்ணி. ()

இருகரங்களையுமுயரக்கூப்பிக்கண் பார்வையன்றி யிசைவதாக
ஒருகாலினுனின்று சுசியாய்த்து வாதசாக்ஷரத்தையுன்னி
மருவியமந்திர வாசுதேவனுக்குப் பிரியமிக வரச்செபித்துத்
தருமனத்தி லிருடிகேசனை நினைத்திந்திரியநிக்கி ரகந்தான்செய்து. ()

இப்படிக்கு நூறுவருடந் தவஞ்செய்தான் றவத்தினிறுதிக்காலத்
தப்பதுமைக் குப்பதிதன் பிள்ளையாகிய பிரமாவதற்கு முன்போல்
ஒப்புசிருஷ்டித் தொழிலைப்புரிய வரமுதவ வொருகருடனேறி
மெய்ப்புகழான் பிரமாவை நோக்கியேர்ப் பிரமாவே மிகவுமுன்னல். ()

புரிதவத்தை விளைந்துமகிழ்ந் தேனுனது மனத்திலுள்ள பொருளையி ன்னே, தெரியவின வுதிபெரியோர் புகழவுன்வை பவத்தினுக்குச் சிற க்கமுன்னே, மருவிமறந்துள சிருஷ்டி தனைக் கொடுக்கின்றேனென வி வ்வாறு மாயோன், பிரியமுடனமுத வெள்ளம் போலுரைத்த வார்த் தைதன்னைப் பிரமன்கேட்டு. (௱ருக)

சந்தோஷத்துட னெழுந்து கருட்வாகனனை மிகத்தாழ்ந்து நோக்கி
நந்தாததிருமகட்கு நாயகனே நீயெவர்க்கு நலவாதார
முந்தானுயல்லவோவுயர்ந்த மெய்யனுப் மெய்யுண் முயன்று நின்றும்
பிந்தாத மூவிதகாலங்களிலுஞ் சத்தியனுய்ப் பேசலாகி. (௱ருஉ)

முக்குணத்ததாகிய மூலப்பகுதி யைத்தேகமாகக்கொண்டும்
மிக்கபிரகிருதிக்கு வெளிப்பட்டுங் குணமாறும் விளங்கினாளும்
தொக்குளனுய்க் காமமின்றித் தாழ்வகன்று மூடருக்குந்துதிக்கும்புத்தி
தக்கதில்லாதவர்களுக்கு மாதாரமன்றி மிகுதகைமைத்தாகி (௱ருங)

துட்டர்களாலறிய வொண்ணுத்திருவடித்தாமரையுடனே துலங்கிநீண்ட
விட்டுவிராட்டுப்பபடிவ முஃரகரியே சரணடைந்து வேண்டுமென்னைத்
தொட்டருளி நோக்கவேண்டுந் தெரியாமனயானைத் தொடர்விற்சென்
று, நெட்டுமத வலங்காரத்துடன் கூடிக்குடைக்கெருவ நிழற்றலாகி. ()

பலவபராதப்போர்வை பொறுமை மணமாலை பரிமளிக்கப்பண்பால்
நலசாதுக்களைச்சே வியாதசிறுமைக்குணத்து நாயேன்றன்னை
நிலவாத வளாயிரண்டு நேத்திரமாக் கொளும்பதுமை நேயனேநீ
புலராமலளித்தருள வேண்டுமென வெண்கமலை புருடன் சொன்னான்.

இனைத்தெனச் சொல்லருந்துதிகள் பலபுகன்று புவனமெல்லா மீன்
றோனன்ற, தனைத்துதிக்கப் பங்கயக்கண்ணனுந் தனதுதனையன் முகந்
தன்னை நோக்கி, நினைத்தபடி மலரயனே நான்கு வருணத்தவரா நில
த்திலாக்கற், கெனைத்துள வங்கனைத்து மினிநீனுதி யென்றருள் புரிந்
தானெல்லா மானன். (௱௫௬)

அக்காலந்தனிற் பகவான்றனைச்செம்ப காரணிய மதனிற்போற்றப்
புக்கானுய்த் தேவதச்சன்றனை யழைத்துக்கண்ணனுக்குப் பொருத்த
மாகி, மிக்காருமதி சயிக்கக்கோயிலுந் தன்பெயர் பொருந்தும் விமான
த்தோடு, தக்கானகெர்ப்பகிர கமும்விளங்கச்சமைக்கவவன் றனக்குச்
சாற்றி. (௱௫௭)

ஆகியசுவாயம்ப வவிமானக்கோயிலிலே யணிசேர் கண்ணன்
வாகியலப்பதிட்டை செய்து பங்குனி மாதத்திலுரோ கணிநாள் வாய்
ப்பப், போகிரதமுதலான வுற்சவங்கள் பலபுரிந்து பொருந்தமுன்னு
லேகிளரும் பஞ்சராத்திரப்படி விண்டுவைப் பிரமனேத்திப்போற்றி. ()

பூசைமுதலான வெல்லாம் விதியுடனே பூசித்துப்புகழ்ந்து முன்போல்
ஆசகல் சிர்ட்டியை யடைந்து தன்னியனுனன் பின்னுமமலன்றன்னை
நேசமுடனே துதித்துச் சத்தியலோகஞ்செல்ல நினைவுகொண்டு
மாசகலக் கருட்வாகனனிடத்தி லனுஞைபெற்று மகிழ்ந்துசென்றான். ()

இப்படிக்குப் பிரமாவுக்காகவவ தரித்தவரியின் சிலத்தை
மெய்ப்புறக் கேட்பவனெவனேவவன் சகலபாபமும்போய் விட்த்தீர்ந்
தின்பத், தொப்பறு விட்டுணுலோகத் திலங்குறுவனெனச்சூதனுரைப்
பக்கேட்டுக், கைப்பறு கேள்விச்சவுனகன் சூதபகவா னேகமலையாலே.

எந்தக்காரணத்தாலே தவஞ்செய்ய லானதந்த வேதுவேது
வந்தவஞ்ஞானந்தீர மொழிதியெனச்சூதபகவானுநேரோ
அந்தவமரருக்கு மசுரருக்கு மமர்நனிநடக்கலானபோது
முந்தமரர் தமையசுரர் பெலத்தடித் தாரமரிலெனமொழியலுற்றான். ()

வேறு.—பின்பியக்கர் கின்னரர் குய்யரொடு பெருந்தேவர்
முன்பமர்க்கெழு மசுரரையடிக்க நேர்முயன்று
மின்படைக்கலத் தசுரர்க ளபசயமிக்கு
நன்பரப்பிரு குவினுறையுளைநனி நாடி. (௱௬௨)

வந்தபோதந்தப் பிருகுமாமுனிவ னன்மனையாள்
நொந்தடைந்தவவ் வசுரரைநோக்கி யேதனக்கு
முந்துசீடர்க ளாவர்களென வன்புமுற்றி
நந்துதேவரைக் கப்பினிற்சபிக் கவுண்ணயந்தாள். (௱௬௩)

வேறு.—மற்றவளைநோக்கியுயர் வானவர்களஞ்சி
அற்றமொடுபோற்றட லடைந்தவணமர்ந்த
நற்றமருக்கமரரு யகிலநண்ணப்
பெற்றுலகநாயக மமைந்தபெருமானே. (௱௬௪)

நாங்களனைவோருமுனை நன்சரணமாகத்
தீங்கறவடைந்தனமை சேரசுரராலே
நீங்கறவருந்தியு மெடுந்தவனயந்த
பாங்கினள்சபிப்பது படத்தகுதியானோம். (௱௬௫)

ஆதலின்மிகுந்தகவி வாகியவெம்மைத்
சாதனையளித்தரு டருந்தகவிலோனே
நீதகவளித்திடுதி யென்றுநெடுநேரம்
கோதறவழுத்தினர் குலாவிநெடுவானோர். (௱௬௬)

வேறு.—தேவர்களுரைப்பது கேட்டுத்தீங்கிலான்
நோவறுதேவரை நோன்பினாலையும்
மேவசுரரையுநான் வீக்கின்றேனினி
நீவிரோர்பயமின்றி நிலைக்கலாமெனா. (௱௬௭)

ஆழியைவிடுத்தலு மாயிரங்கதிர்
ஏழினதெனச்செலீஇத் தலையையீர்ந்துடன்
வாழியபிருகுபத்தினியை மாய்த்தல்போல்
சூழியவசுரரைத் தொலைத்துச்சென்றதே. (௱௬௮)

பொன்மலைப்புறத்திலுக் கிரம்பொருந்திய
நன்மனத்தவத்தினை நடத்துமாமுனி
என்னுமப்பிருகுவை நோக்கியேயொரு
சொன்முனருரைத்தது துவக்கிலாததே. (௱௬௯)

ஆண்டஃதென்னெனி லரிதின்மாதவம்
மாண்டவுன்புரையிடை மனைவியைச்சரண்
வேண்டினவவரையு மின்னனளையும்
தாண்டுசெக்கரம்வந்து துணித்ததென்னவே. (௱எ௰)

ஆச்சிரமத்தையு மழற்றிற்றென்றொரு
பேச்சுறுதுயரைப் பிருகுமாமுனி
காய்ச்சுறுஞெகிழியிற் காதிற்றேய்தர
ஏச்சிதுகாரண மிலதென்றெண்ணியே. (௱எக)

சினமிகவிதழ்துடிப் பெய்தச்சிந்தியா
தெனதொருமனைவியை யீர்ந்தவன்பெரு
வனமிசைமனையற மாழ்கித்தீர்கென
இனைவுறச்சபித்துமந் தாகினிக்கணே. (௱எ௨)

முழுகினன்றவஞ்செய் முந்துபோதவன்
பழுதறுசாபம்வெண் பாற்கடற்கணே
முழுதுணர்யோகியை முற்றிநான்மறை
கெழுதவப்பிருகுவின் சாபங்கேசவா. (௱எ௩)

ஆகலாலெனையங்கி கரிக்கலாமென
நாகணைத்துயிலு நாரணனுநன்றுநீ
போகவேறொருபிறப் புற்றபோதுநான்
சேகறப்பெறுவனென் றருளிற்செப்பவே. (௱எ௪)

மீண்டதுபிருகுவை யடைந்துவிண்டுதான்
ஆண்டுரைத்ததுசொல வவலங்கொண்டனே
தேண்டலின்றிச்சபித் தேன்சினத்தினுல்
வேண்டினர்தமக்கருள் விண்ணவன்கணே. (௱எ௫)

ஆய்தலில்லாதப ராதஞ்செய்வதற்
கேய்வதெவ்விதந்தெற லெய்துமென்செய்கேன்
சாய்வதெவ்விடத்தெனத் தனிகலங்கியே
மாய்வறுபிருகுவு மயங்கினனரோ. (௱எ௬)

பின்னருமருள்பக வானைப்பேதறத்
துன்னுபாற்கடலிடை யடைந்துசோர்வுதீர்
நன்னர்செய்சரண்புக நாடிநம்பினோ
மன்னநன்கருடிரு மாலைவாழ்த்தியே. (௱எ௭)

மலரயனிடத்திற்றன் மாழ்செலாஞ்சொலப்
புலமைசெய்தவனுல கத்திற்போய்மன
நலவசிட்டனேமுத லினளைநன்குதேர்ந்
துலவறுபிழைதெற வுற்றுச்சென்றனன். (எஎஅ)

வேறு.—இப்படிப்பிர மாண்டமெனும்புரா
ணப்பொலஞ்சம்ப காரணியப்பெரு
மெய்ப்பில்விறறுபத் திரண்டாவதாய்ச்
செப்புமோரத் தியாயஞ்சிறந்ததே. (எஎகூ)

உ - வது சேவைசாதித்த வத்தியாயம் - முற்றிற்று.

வேறு.—சங்குசக்கரங்கரும்பு தருவில்பாசபாணநீள்
அங்குசந்தரித்துமன் மதன்விலாசவடிவுசால்
கொங்குறும்முகத்தோ டாறுகோணசக்கரத்துளே
தங்குநன்மதனகோபால சாமிகாணமேவினன். (எக)

இது - இந்த அத்தியாயத்தில்விடுபட்டதுகூட - எஅ0.

ஆக - திருவிருத்தம் - ௪கூஎ.

## ௩-வது ப்ார்க்கவிப்பிராட்டியா ரத்தியாயம்.

சூதரோசவு னகளைநோக்கிச்சொல்லுகின்றார்
மேதகுஞ்சிரத்தையொடுகே ளும்மெனவிரும்பி
ஓதுசத்தியலோகத்திற் பிருகுபோயுளைத்தான்
திதறநடந் தனபிரமன்செவிசேர. (க)

உலகத்துக்கொருகருத் தனகியவொருபிரமன்
குலவுமாமுனி வரருடனங்குறுகொள்கை
நிலவக்கேட்டனர்நீதி தேர்வியாசர்மாவசிட்டர்
புலமைசேருஞ்சா பாலிநாரதனொனும்புனிதர். (உ)

பிரமஞானிகளாகிய விவரொலாம்பிருகு
தெரியநோக்கியே பிரமனும்வினவச்செப்புறுவார்
பிருகுமாமுனியேபுத்தி யடிக்கடிபெருக்காத்
தெரிவுறுஞ்சினமிகுதியாற் செய்யலாகியதே. (௩)

பின்னரவ்வபராதத்தைச் சாந்திசெய்பெற்றி
நன்னர்யாமுளைப்பதுதனைக் கேட்பதேநலனும்
அன்னதேலிந்தப் பூமியிற்செம்பகாரணியம்
என்னவேயொரு திவ்வியத்தலமிருக்கிறது. (௪)

அல்லவாவதிற்சென்றிலக் குமியைநன்கடைய
நல்லமாதவஞ்செய்ய யத்தினப்படனலனே
ஒல்லையில்லதன்காரணஞ் சொல்கின்றேமுனக்குச்
செல்வமாமகள்சிறுவியாய்ப் பிறந்தருள்செய்வாள். (ரு)

அவளையந்தவிட்டுனு வுக்குக்கொடுத்துத்தூயவனு
குவதையன்றிச்சாபந் தருமுனக்கபராதம்
தவிர்வேறொருதகவிலை யென்றவர்சாற்ற
நவமுடன்பிருகுவு மன்னதேசெயநண்ணி. (சு)

வேதனோடைந்த விமலனைப்பணிந்துவியாசன்
போதிலிந்திரை மந்திரந்தரவருள்பூண்டு
பூதலத்திலுத்தமமிகு செம்பகப்பொழில்சேர்ந்
தாதரத்தமுதத்திலுண் டாயசம்பகங்கள். (எ)

நிறைந்துமேருசா வரணியிறைப்புகழ்நீடிப்
பிறந்தகாந்தியிற் பெரியதாம்வனந்தனைப்பேணிச்
செறிந்தவவ்விடத்தினிற்றவஞ் செயச்சிந்தைசெய்து
திறந்தவாவியாசன்சொன்ன மந்திரச்செயலே. (அ)

கொண்டிலக்குமி யைக்குறித் தன்புறுகொள்கை
மண்டியாயிரம் வருடமா தவஞ்செய்யவந்து
பெண்டிரிற்பெருந் தகையிரக்கங் கொடுபிரியா
ஒண்டிறற்பிரு கேயென்னைக்குறித் துறுநோன்பு. (கூ)

மிக்கமாதவ மென்னைசெய் கின்றனைவிளம்பு
தக்கவுன்றவந் தனக்குச்சந்தோஷித்துச் சார்ந்தேன்
ஒக்கநீவின வுவதரவென்றன ளுறுவன்
அக்கங்கொண்டுற நோக்கினன் மாணிறத்தவளை. (௰)

நான்குகைகளு மிருகரப் பங்கயநனையின்
பாங்கும்பல்கலன் பொலிவுற விளங்குறுபண்பும்
ஓங்குறும்புவ னிக்கொரு தாயையுள்ளுவந்து
தாங்குமஞ்சலி யொடுபணிந் தொண்புகழ்சாற்றி. (௰க)

தேவியேயுன தம்புயநிகர் திருக்கடைக்கண்
பார்வையிற்சிறி தாலகப்பட்டவன் பலர்க்கும்
தாவிலாவதிபதி யெனப்பிரமத்தைச் சார்ந்து
மேவுசெல்வமெல் லாமடைந் திந்திரன்விண்ணோர். (௰உ)

ஆதியோர்வணங் கவும்பின்புபரமப தத்தைச்
சோதியாயடை குவன்சரச்சுவதி சுந்தரியோ
டேதிலாரதிதேவி யெண்டிக்கினர்க் கிசைந்தோர்
பேதியாதுறு மம்புயத்திருவடி பெற்ரேய். (மிங)

பாற்கடற்றரு திருமகளே சபலத்தால்
பேர்க்கலா வபராதங்கள்பல செய்பேயேனைக்
காக்கவேண்டு முன்னைத்தவிர்ந் தெனக்கொருகாவல்
ஆக்கவேறில்லை யன்னையேயினி யடியேனல். (மிச)

நினைக்குங்காரிய நீயெனக்கொருமகளாக
உனக்குநான்பிதாவாக வேண்டும்மெலோராலும்
மனக்குநேர்மகளெனச் சொலமாலினுக்கொருநின்
தனைக்கொடுத்தபராத நான்றவிர்வதேதருவாய். (மிரு)

என்னக்கேட்டிலக்குமியுமப் பிருகுவுக்கிரங்கி
மன்னிப்பார் முனியேயொரு காரணவகையால்
நின்னைத்தாதையென் றடைந்துனக் காயந்தநெடுமால்
தன்னைச்சேருவன் பதியென நீயவன்றனக்கு. (மிசா)

செய்தபேரபராதந் தீர்வுறக்கன்னிதானம்
பெய்துகாரியஞ்சீர் நிறைவேறுதிபெரிது
நைதல்போகுதியெனச் சொலிச்சென்றணையந்து
மெய்தருஞ்செம்பகாரணி யத்திடைவிளம்பில். (மிஎ)

சிறிதெனச்சொலீ சானியத்திக்கிடைச்சேர்ந்து
நறியதோர்தடாகம் பெரிதுத்தமநண்ணி
வெறியதாமமை முதலியமலர்களால்விமலம்
செறிவதாயழ குறுவதுபேசுமத்தீர்த்தம். (மிஅ)

தீர்த்தமத்தியில் விகஸித்ததாமரைசிறக்கப்
பூத்தபூவின்மத்தியி லிலக்குமியுருப்பொருந்தி
மீத்தனித்திருந்தாள் மகரத்திங்கள்மேவ
வாய்த்தபூசநா ளுதையத்திலாடநீர்வந்தான். (மிகா)

வந்தமாமுனிகுளத் துறுபங்கயமலர்மேல்
அந்தமெல்லிய லாகியசிசுவைக்கண்டன்பு
முந்தவேயெடுத் துயிருறமுடுகுசந்தோஷம்
தந்ததாகவன்பொடு கண்டுசாலையைச்சார்ந்தான். (உமி)

அவ்வனத்துறுபல முனிக்கணமுமப்போது
வவ்விவந்தவச்சிசுவினைக் கண்டன்புவாய்ந்து
தெய்வமாகலிற் பார்க்கவி யெனப்பெயர்செப்பிக்
கொவ்வைவாயிளம் பிள்ளையைவளர்த்தனர்குழுமி. (உக)

வளர்ந்தபெண்ணுந்தன் றந்தையைநோக்கிநல்வார்த்தை
கிளந்துபேரருளைய நீயென்னையார்கேட்க
வளந்தரத்தருவாயென மகளைமாமுனிவன்
அளந்திடற்கருங் களிகொண்டு மகளுக்கீதுறைவான். (உஉ)

அம்மனாய்நெடு மாலையன்பொடுகுறித்தரிது
செம்மைசேர்தவஞ் செய்திடிலவனையேசேர்தி
எம்மனோர்களு மின்புற வெனவவனியம்பக்
கொம்மைவெம்முலை யம்மையுந் தவஞ்செயக்குறித்தாள். (உங)

அந்தநீர்த்தடா கக்கரைவடமுகமாகச்
சந்தமாகொருதாள்கொடு நின்றிடத்தாளைச்
செந்தொடைப்புறஞ் சேர்வுறமடித்தைந்துதீயால்
கொர்ந்துசூழ்வுற வொருவரா யுங்குறியாமல். (உச)

மோனமாயுயரக் கரநான்கையுமுகிழ்த்து
மானதந்தொடர் யோகத்திலீரைம்பான்வருடம்
தானிராப்பகலொழி வறத்தவம்புரிந்தனள்பின்
கோனுணர்ந்தன னளவறுபெருங்களிகொண்டான். (உரு)

வினதைமைந்தன்மீ தேறினன்பாற்கடல்விட்டுத்
தனதுபார்க்கவி தவஞ்செயுஞ் சார்வந்துசார்ந்து
கினரரச்சர சுக்கள்செய் துதிமிகக்கிளர்ந்து
நனர்விளங்குபுன் னகையொடு முகமலர்நளினம். (உசா)

திருமறுக்கிளர் மருமமொள் ளொளிதரச்சீமான்
மருவுபார்க்கவி மதிமுகநோக்கிமா தவன்சீர்
தருமடந்தையுன் றவத்தினாற் றகுந்தியானத்தால்
வருதல்செய்தனன் மகிழ்ந்தன னுனக்கென்வேண்டுவதே. (உஎ)

சொல்லிலிப்பொழு தேதருவேனெனத் துளவால்
மல்குதாரகி லேசனீ துணைத்திட மங்கை
நல்குமாமண வாளனைக் கண்டனனாடி
ஒல்குநேரிடை யொசிதர முலைமுகடோங்க. (உஅ)

கருடன்மீதுறு சுவினொடு கனகவம்பரந்தான்
வருடநீலநன் மணிநிற வண்ணமுமணந்த
புருடவேடமு முடல்புளகித் தெலாம்போர்ப்ப
அருடனெலெளி வந்ததே யதிசயமாக. (உகூ)

அழகுகூடியுஞ் சோபனந்திருந்து மாகார
விழவுசேர்மகிழ் வுடனந்த நாதனைவேண்டிக்
கழிவறுஞ்செருக் கொடுதுதிக்கின்றனள் கன்னி
எழில்செயுஞ் சரணியவுனக் குச்சய மெனவே. (௩0)

ஆதிமூலமா யருள்பர மாத்துமா வாகி
வேதியர்க்குறு வேதங்களால் விளங்கொண்ணுய்
நீதிமெய்புரு யோகியர்சித்தத்தி னிலவும்
போதினன்பணி வுறுந்தவ யோகிகள்புணரா. (௩க)

தேவருக்கொரு பாற்கட லமுதத்தைத் திருந்த
மேவுறத்துமுன் மகிமையை விளம்புதற் கெனக்கு
நாவதில்லைமற் றூர்த்தியை யெவருக்கு நலிந்து
காவல்செய்யரி யேகணிப்பறத் தொழுகின்றேன். (௩உ)

என்னவிப்படிக் கன்னிநின் றேத்தல்கேட் டெம்மான்
மன்னுமின்புகொண் டன்னவ டனைக்கண்டு மயிலே
உன்னுளத்தில்வேண் டுவவெலாஞ் சொல்லுதி யுடனே
நன்னலம்பெற நல்குவனெனச்சொல நங்கை. (௩௩)

பன்னுகின்றன ளின்னருள்செயும் பகவானே
உன்னுநீயெனை மகிழ்வுறி லெனைமண முஞற்றி
நன்னராகுதி யெனதருந் தந்தைநற் றவத்தால்
முன்னுறும்பிரு கெனுமுனி நின்னையெ முன்னி. (௩௪)

நனிமிகுந்தவம் புரிதருகின்றன னெனநா
தனுமருந்தவஞ் செயும்பிர மன்றருதனையன்
மனமுறும்பக வத்தியானத்திலே மன்னி
நினைவுறும்பிரு கெனுமரு முனிவனைநேடி. (௩௫)

கண்டுசொல்லுகின் றனன்முனி பிருகுவேகருதி
மண்டுமுன்றவ யோகத்தை மகிழ்ந்தனன் வரந்தான்
அண்டுறும்படி கேட்பது தருகின்றே னையம்
விண்டுகேளெனப் பிருகுமா முனிவரன் விளம்பும். (௩௬)

வேறு.

தன்னபராதந் தீர்தரச்சகத்துளோர்
மன்னநல்லருள் புரிமாலைநோக்கியே
பன்னருந்துதிபல பயில்கின்றனது
வென்னெனி விலக்குமிக் கெழில்செய் நாதனே. (௩எ)

வினதைதன்மகன் பிடரேறி வேண்டுமென்
றனதிருவிழிமகிழ் தக்கசேவையை
இனிதருள்செயவுள மிரங்கிற்றல்லவோ
தனியிரும்பாற்கட் றன்னைநீங்கியே. (௩அ)

வசுமதிதனிலன்பர் வசியனாயினை
சசிமுகமலர்மக டழுவலாயினேய்
ஒசிதருநுணுகிடை யுடைவெண்பூமகள்
கசிவுறுமகிழ்நனுங் கருதுதேவனே. (௩கூ)

வணங்குகின்றேனப ராதமாசற
இணங்குறுபொறைபுரிந் தெந்தலோகமும்
பிணங்குறவருமிட மானபெற்றியோய்
குணங்கெடவுறுதெரி யாமைக்கோதெலாம். (ச0)

பொறுத்தருள்புரிதர வேண்டுமென்றுசீர்
பெறுத்துறுதவமியல் பிருகுசொல்லலும்
தொறுத்திரிதரத்திரி வோனுஞ்சொல்கின்றான்
வெறுத்ததில்லெனப்பிரு கினுக்குவேண்டியே. (சக)

நின்னுளமகிழ்வுற நினக்கு வேண்டுவ
தென்னுரைதருமுன ரீவனென்னலும்
பின்னருள்பெறுமொரு பிருகுகேட்டவன்
தன்னிணையடிதுதி தந்துசொல்கின்றான். (சஉ)

தகைதெரியாதுரை சாபரூபமாம்
மிகையபராதத்தை விக்கவேண்டியான்
பகைதெறுதவத்தினிற் பயந்தகன்னியை
வகையொடுமணந்துநீ வாழ்வின்வைகவே. (ச௩)

பார்க்கவிகரத்தினைப் பற்றுநன்மணம்
நோக்கிநன்னலத்தினி னேன்மைவிஞ்சியே
மேக்குயர்மேருவி னணித்தின் மெய்த்தவம்
காக்குறச்செலு மொருகருத்தி னேனென்றான். (சச)

இப்படிப்பிருகு நன்கியம்பக் கேட்டருள்
வைப்பெனு மவனுமப்படிக்கு மன்னுதல்
ஒப்பெனவுரைத்த பின்னுவப் பின்மிக்குளார்
பொற்புறுமலரய னரன்புரந்தரன். (சரு)

சனகரேமுதலினர் தமையங்குன்னலும்
நினைவதுதெரிந்துறு நிமலராயுளோர்
கினரர்கந்தருவர்கள் மூவர்கேடிலா
அனகவச்சரசுக ளரியரன்னயன். (சசா)

என்பவர்யாவரு மினிதுவானிடை
முன்புறுகுழுவின ராகிமொய்த்தனர்
அன்பினிலிடைவெளி யரிதுவேதியர்
இன்புறுமால்விவா கத்தையெய்தியே. (சஎ)

நோக்குதல்வேண்டினர் பிருகுநொய்தினில்
தாக்கணங்கினையொரு சவுரிசேர்வுறப்
போக்கறுதிருமணம் புணர்த்தச்செய்தனர்
ஆக்கயன்முதலிய வனையரன்றரோ. (சஅ)

சவுரியும்பார்க்கவி தனைமணந்துநீள்
பவுரியின்மனமகிழ் பண்பனுயினன்
கவுரியும்வணங்குபொற் கமலையப்பிரு
குவுரியதவத்தனென் றுகப்புற்றுளன்றே. (சகூ)

பின்பிருகுவுமிலக் குமிக்குப்பெட்பனை
அன்புறுமகிழ்வொடு வணங்கியையனே
நின்பெருமணத்தினை நேயத்தோடுகண்
டின்புறுசிறப்பினை யெய்தினேனென. (ருய)

பின்னருமுன்னறி யாதுபேசிய
என்னருஞ்சாபத்தைப் பொறுத்தியென்றனன்
அன்னகேட்டருளிறை யவனைநோக்கிநீ
சொன்னவெஞ்சாபத்தின் றொடர்வுசூழ்வுறும். (ருக)

அயன்முதலனைவருங் கேட்கவையநீ
பெயர்வுறவுணர்த்துவன் பெரிதுண்டாயினும்
நயமுட்னீவிழைந் தனநவிற்றிடில்
இயல்புறத்தருவனின் னமுமென்றனரோ. (ருஉ)

கேட்டவப்பிருகுவுங் கிளத்துகின்றனன்
காட்டியதிருமண முடிவிற்கண்ணிய
தோட்டரும்புனல்விளை யாடலுற்சவம்
வேட்டனனதுசெய வேண்டுமையனே. (ருங)

அந்தவுற்சவந்தனைப் பார்த்தியானருண்
முந்துறக்களிகொடு படர்வன்முன்னெனச்
சிந்தையிற்பிருகுவி னிடத்திற்சேருமன்
புந்திடத்திருநெடு மாலுமுன்னினான். (ருச)

உலகொழுக்கினையனு சரித்துமுத்தம
நலனுடைத்தெரிவையர் நணுகக்காவிரிச்
சலமிகப்பெருக்குத றன்னிலுத்தம
குலனுறப்பிரித்ததைக் கொண்டுவந்தரோ. (ருரு)

மிருகங்கள்யாவையும் விகங்கம்யாவையும்
பெருகுறநிறைந்தசம் பகமென்பேர்ப்பொழில்
அருகுறநான்குதிக் கிலுமமைந்துறப்
பொருதிராதருமந்த நதியைப்பொய்கைபோல். (ருசா)

செய்தந்தச்சலத்தினிற் றெளிந்துபங்கயம்
நெய்தலேமுதலிய பூநிரப்பினால்
ஐதுறப்புரிந்துபி ருகுவினன்பிற்கே
மெய்தருமவன்விசேடித்து வேண்டினான். (ருஎ)

நீர்விளையாடலை நெடியதேவரும்
யாருமப்பிருகுவு மமர்ந்துநோக்கியே
பேர்வறுமகிழ்வினிற் பிறங்கினார்திரு
மார்வனுஞ்சகல மங்களதெய்வத்தையே. (ருஅ)

பார்க்கவியெனப்பெயர் படைத்தணைந்துநீள்
சேக்கையென்பாற்கடல் சென்றுசேர்ந்தனன்
நீக்கமிலனைவரு நெடியமால்வயின்
நோக்கருள்விடைகொடு நோய்தினெய்தினார். (ருகு)

தந்தமிலதுமுதற் சாற்றுமித்தலம்
இந்திராக்கன்புற வெழில்சிறந்தது
முந்துபாற்கடலிற்ச வுனகரோமுன்னால்
அந்தவிந்திராயெங்ங னுயினள்கொலோ. (சுய)

அப்படியித்தடத் தமைவுசெய்தலால்
மெய்ப்புறுபாற்கட லெனவிளம்புவார்
செப்புமத்தடம்பிர சித்தமாயிற்றால்
ஒப்புனக்குரைத்தபொன் னுலகில்வந்ததும். (சுக)

பிருகுவின்சாபத்தின் பேர்ச்சிதன்னையும்
சருவநற்காலத்துந் தவறில்பத்தியோ
டிருவினை துணிதரக் கேட்கின்றானெவன்
பொருவிலுத்தமகதி புகுவனன்னவன். (சுஉ)

ஆகலாலின்னுநீ கேட்கலாகிய
சேகறுசரிதம்யான் செப்புகேளென
வாகுறுசவுனகர் கேட்கின்றார்தவம்
போகுறுசூதரோ நெருப்புப்புங்கவன். (சுங)

இவ்விடத்தினி லெந்தக்காரணத்தினால்
செவ்விநற்றவத்தினைச் செய்துளானெது
வவ்வுறக்குறித்துறு மகங்கள்யாவுக்கும்
ஒவ்வியவுடலென வுறுதலேதென. (சுச)

சூதருஞ்சவுனகர் கேட்கச்சொல்கின்றார்
ஓதுமக்கினியினுச் சரியமுற்றுள
தீதறுசரிதத்தைச் சிறந்தகாசிப
மாதவன்றனக்கிரு மனைகளுண்டரோ. (சுரு)

வினதைகத்துருவென விவரில்விண்டுவே
றனகனைத்தந்துளா ளயற்பெணட்டமா
பனகரைப்பெற்றனள் பாதலத்திலே
இனருடன்வசித்தன ரினிதினென்பரோ. (சுசு)

வேறு.—வேதமூர்த்தியாய் விளங்கியவினதைபுத் திரனுஞ்
சாதுவாய் ரசாதலத்திடைவதிந்தனன் றந்தை
ஓதுமாச்சிரமத் திருந்தொரு வடமேருத்
திதிலோர்புடை வசித்தன னிரண்டுதேவியரில். (சுஎ)

பெரியதானவோர் வாக்குவாதம்பிறந் துளதாய்
மருவுகாலத்தில் வினதைகத்துருவினை மதித்துத்
தருதலாயின ளோருரையிந்திரன் றந்தி
கருதுமாயிரம் யானையின்வலத்தது கைலே. (சுஅ)

சிகரத்தோடுறு வதுநிகர்த் திந்திரன்செல்ல
நிகரற்றோர்பெரு வாகனமாய்நெடு வானில்
நகலுற்றோங்குவ தெனச்சொலக் கேட்டனரைக்குப்
புகலுற்றாளொரு கத்துருவென்கிற பூவை. (௬௯)

உரப்பிவெஞ்சினத் தொடுநெடு மூர்க்கைநீயுரைக்க
நிரப்பிற்கேளந்த யானையிந்திரநெடு நீலம்
பரப்புபச்சுருவா மயிராவதம் பலத்தில்
இரப்பதில்லது வெனச்சழக் கொடுகறுத்தியம்ப. (௭௰)

வினதைவெஞ்சின மியம்பினளப்பெரு வேழம்
தனதுபேருருக் கறுத்துளதேலுனைத் தவிரா
நினைவினேவலை நிரப்புவனெனநிகழ்த் துதலும்
வனிதையானகத் துருவுமங்குரைத்தனள் வாக்கு. (௭௧)

விளர்த்ததேலந்த யானைநாறுண்டுக்குன் வீட்டில்
கிளத்துதொண்டினுக் கிசைகுவனென்னலுங் கிளர்ந்து
கொளுத்துகின்றகார்க் கோடன்வந் தவ்வயிற்குறுகித்
தளிர்த்தவன்புறு தாயடித்துணைகண்டு தாழ்ந்தான். (௭௨)

பின்னுமங்குறு வினதைதன்னடியிலும் பெரிது
துன்னியஞ்சலி செய்தலுமீன்றதாய் சொல்வாள்
மன்னுகின்றகார்க் கோடன்றன்செவியினின் மறைய
மின்னுகோட்டயி ராவதங்கறுப்பன்றி விளர்ப்போ. (௭௩)

சொல்லுகென்றுகேட் டலுமவன்சொல்கின்றான் றூயோய்
மல்லல்சே ரயிராவத மாயிரமதமாக்
கொல்லுறும்பலங் கொண்டதுவெளுத்ததே குறிக்கில்
ஒல்லலாவதென் றுரைத்தனன் றாய்மனமுழந்து. (௭௪)

என்செய்கேன் மகனேகறையடி கறுப்பெனவே
முன்சொனேனது நிலைபெறநீமுடிக் கிற்கில்
பின்சொலாதொரு வினதையைத் தொழுத்தியாய்ப் பிணித்து
நன்சொலோடுற நன்னயம்படுமென நவின்றாள். (௭௫)

அன்னதேபுரி குவனெனத்தாயுரைக் கமைந்து
மன்னுகின்றகார்க் கோடனுமிந்திரன் மதமாத்
துன்னுசார்பில்வந் தஞ்சலிபுரிந்திது சொன்னான்
பன்னுவல்விலங் கேயுனதழகினைப் பார்க்க. (௭௬)

காசிபன்றரு கான்முளோ நானுறு கணத்தோ
டேசிலாச்சுவர்க் கம்புகுந்தேனினி யிதற்கு
மாசுதீரநீ வழங்குதியென்னலு மதமாப்
பேசுநீகொளத் தக்கதேகோளென்று பேச. (எஎ)

தன்கணத்தொடு சார்ந்தகார்க்கோ டனுந்தங்கள்
வன்களேபரங் களின்மறைத் தலுமந்தமதமா
முன்கறுப்பெனத் தோன்றியதுர்தியாய் முகுந்தன்
நன்குறக்கொள லானவன் வினதையைநாடி. (எஅ)

வந்தபோதவள் சக்களத்திக்குறு மாண்பின்
மூந்துமேவலின் முயன்றனள் கண்டவண்மொழியால்
நந்துசெய்கையைக் கேட்டுப்பக்கிக்கெலா நாதன்
எந்தவாறிது திருநீயியம்புறில் யானே. (எகூ)

செய்துமுற்றுவ னின்னுளத் துறுதுயர்நிர
யைலன்னைநீ நவிலென வினதையுநாடி
உய்யுமாறுகத் துருவினைவினவுற வுரைத்தாள்
துய்யதாமமு தக்கல சத்தினைத் தொடர்ந்து. (அ௦)

கொண்டுவந்துறி னீபுரிகின்றகுற் றேவல்
விண்டுதிருமென் றதுவினதைக்கொடி விரும்பி
அண்டுறுங்கரு டனைக்கண்டு சிறுவநீயமுதம்
மண்டுபொற்கல சந்தரில்விரைந்து சூழ்மாறும். (அக)

என்றசொற்கொடு கருடனுஞ் சுவர்க்கத்துக்கேகி
மன்றவல்விரைந் திந்திரன்கிரகத்தின் மண்டிப்
பொன்றனிக்குறு மமுதத்தைக் கவர்தரற்பொருட்டுத்
துன்றநின்றகா வலர்கருடன்செய்கை சூழ்ந்து. (அ௨)

இந்திரற்கறி வித்தனர்களிற்றின் மீதேறி
வந்துறக்கக பதிதனதன்னை தன் மாற்றம்
முந்துறக்கொடு வந்ததுமுற்ற வேண்டுவது
தந்துரைத்தன னிந்திரனக்கினி தன்னை. (அங)

நோக்கிநீவின தைக்கொருசிறுவனை நொடியிற்
றாக்கிடென்றலுந் தகித்தனனக்கினி சார்ந்து
வாய்க்குமக்கினி தனைக்கண்டு வினதைதன்மைந்தன்
தாய்க்குவேண்டிவந் ததுதனைச் சத்தியமாக. (அச)

சொல்லிநல்லமு தந்திகழ்கலசத்தைச் சூழ்வுந்
கொல்லையுய்த்தவண் பின்னருங்கொணர்ந் திவணுய்ப்பேன்
நல்லைநீதரு கென்னவு மக்கினிநல்கா
எல்லையக்கினி தனைக்கருடன்சினந் திசைத்தான். (அரு)

அன்னைக்கன்புசெய் தரவணைமாலுக்கு மன்பால்
முன்னிற்பேனெனின் முளரிநீழலொளி முடிந்து
மன்னித்தோமஞ்செய் வதினவிசுக்களை வாங்கா
துன்னித்தேய்கெனச் சபித்துத்தானுற்றது முயன்று. (அசு)

அமுதகும்பத்தைக் கொணர்ந்துகத்துருவுமன் பாரத்
தமிநலிந்துறு தாய்புரியேவலைத் தவிர்த்துக்
கமைவுறுஞ் சுவர்க்கத்தின்மூன் போலவக்கலசம்
இமைவுறுத்தினன் பாற்கடற்கேகினனென்ப. (அஎ)

அந்தவேலை யக்கினியு மச்சாபத்தினமைவால்
நந்துமொள்ளொளி நீர்ந்துறுது யருடனளினத்
தந்தைதன் சரணடைந்துறு செய்கையைச்சாற்ற
நொந்தவக்கினி வார்த்தையைக் கேட்டயனு வல்வான். (அஅ)

முளரியே விரைவொடுசம்ப கப்பொழின் முன்னிக்
கிளரிலக்குமி பதிக்கன்பு செயிலின்பு கிடைத்து
வளருமத்தலத்திற் பகவான் வந்து வாய்ப்பான்
தளரலென்னவுந் தாமரைத் தவிசனைத்தாழ்ந்து. (அகூ

சம்பகப்பொழில் சார்ந்தவ னுக்கிரதவத்தை
நம்பிப்பன்னிரண் டெழுத்துள மந்திரநவின்று
பம்பிச்செய்கையி லுறுபொருள் கொண்டவண்பயின்றான்
உம்பர்க்கும் புகலெம்பர்க்குஞ் செய்வினைக்குரியோன். (கூ௰)

வேறு.—கொண்டபிரமாண்ட புராணத்தில் விண்டுக்ஷேத்திர கண்டத்திற்கூறி, மண்டிவரு முத்தரபாகத்திடைச் சம்பகப்பொழிலின் மகத்துவத்தில், அண்டியுறு மறுபத்து மூன்றாமத்தியாயத்தி னந்தமாயிற் றெண்டிசையோர் புகழரசகோ பாலன்றிருவருளே யாரும்வேண்ட. ()

மூன்றாமத்தியாயம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - ருஅஅ.

## ச-வது நீர் விளையாட லத்தியாயம்.

சூதர்புகல்கின்றன ரக்கினிபிரமன் சொற்படியே
மாதவத்தைச் செயநினைத்து வளருமெழுகரங்களையும்
மீதெடுத்து மூன்றடிப்பு மேதினியிற் படியவைத்துத்
தீதறுகொம்புகணான்கு சிரமிரண்டொ டோருகாலால். (க)

நின்று நெடுமாலையுள நினைத்து நனியுக்கிரமாய்
நன்று தவம்புரி பொழுதினிலிருபத் தைந்தாண்டு
சென்றுறுதலுணர்ந்துபக வானும் வரந்தெரிந்துதவ
அன்று நினைத்தொரு நீலமேகமென வமைவாகி. (உ)

பொன்னுடை புனைந்து மிளிர்புன்னகையும் பொருந்தவொரு
நன்னுளிற் செம்பகக்கா நணுகிமிகுதவ நவிலும்
தென்னனை கீழ்த்திசைக்குச் சிறந்தவனை நோக்கியிவல்
என்னகத்தவம் புரிதியியம்புதியான் மகிழ்ந்திவேன். (ங)

என்றுசொலக்கேட்டு நெருப்பினிது வரங்கொடுக்கவந்த
பொன்றிரு நாதனைநோக்கிப் பொருந்து மகிழ்வொடுவணங்கி
நின்றுதுதித்தனன் சருவநேமியுலகங்களுக்கும்
துன்றுபதியே பிரமன் சிவன்முதலோர் தொழுகழலே. (ச)

வணங்குகின்றேன் சனகாதி வழுத்து முனதாக்கினையில்
இணங்கியுறு மருத்துகளிந் திரனிரவி சந்திரனே
டிணங்கில் ஜகத்துக்கள் பொழுதுடைத் தாகிக்கருமேக
வணங்கிளருந் திருமேனி வடிவவுன்னை வணங்குகின்றேன். (ரு)

மீனுமைகோல நரசிங்கமிளிர் வாமனஞ்சீர்
ஆனதமழுராம னளிராமன் பலராமன்
தானன கண்ணனெனத் தனியுருவங்களைத் தரித்து
வானேடிவ் வுலகமெல்லாம் படைத்தளித்து மாய்ப்போனே. ()

நிலைநிலையாப் பொருளான நெடுஞ்சகத்தை யுன்னுடைய
உலைவில் வயிற்றெடுக்கு கின்றுயன்றேவும்பர்க்கொருவா
அலைவில் கருட்ன்சாபத் தாலொளியற்றடைதுயரால்
இலைகதிமற்றுனையலதென் றடைந்த வென்னையினிதளிப்பாய்.(எ)

முன்னிலுமெல்லாஞ் சுவற்றிமுடிக்கும் வலிபெரிதளித்து
நன்னிலைமைதருதி புருஷோத்தம நன்னமஸ்காரம்
என்னவுதா சனன்றுதிசெய் திடல்கேட் டெங்கணுநிறைந்து
துன்னுமவன் முன்னிலு மிக்குளதேசு சுடர்மகிமை. (அ)

பெறக்கொடுத்து மகிழ்வுட னுத்தமமான பெருவரங்கள்
நிறக்கவளித் தனனிந்தநெடுந் தீர்த்தத்தெவனொருவன்
சிறக்கவிரிச்சிகமாசந் தினகரவாரத்தாடி
உறத்திகழ்பெண் பசுச்சுவடிதீபமிவை யுதவுவனேல். (கூ)

அவன்மிகுந்த பத்திதியானத்தால் வேந்தாகிமிகு
நவமிகுஞ் செல்வங்களெல்லா நனிபெறுவனெனப்பகவான்
உவந்தருளி நெருப்பினுக்குப் பாற்கடலை யுறப்போந்தான்
செவந்ததழல் பூசிக்கச்சிறந்துளன் செவ்வாய்க்கண்ணன். (ய)

என்றுபின்னுஞ் சவுனகரோ டெழிலரியின் கதையினைநீர்
நன்றுவினவுவதெவ்வா றவ்வாறே நானுரைப்பேன்
குன்றலிலாதெனுஞ் சூதர்கொழுங் கமலமுகநோக்கி
நின்றகலைஞான முணர்சவுனகரு நிகழ்த்துகின்றார். (யக)

வேறு.—மூவாமுனிசோப்பிரளயருக்காகமுகுந்தன்முன்மகிழ்ந்து
தாவாதுறுது வாபரநல்லுகத்தின் முடிவிற்றமை பிருந்தை
மேவாவமர்ந்த வனத்திலயர் விளையாட் டுகளைப்பினும் புரிந்தான்
ஆவாவெனினீர் விளையாடல விடத்தெவர்களுடன் புரிந்தான். ()

மகளிரொனைவ ரதைவிரித்து வழுத்தவேண்டுமென வணங்கிப்
புகழுச்சூதர் கேட்டியெனப் புகல்கின்றனர் கோப்பிரளயர்க்கு
மகிழ்விற்பகவான் வரங்கொடுக்கும்போது பகவான்மலர்முகத்தைத்
திகழப்புரிந்து நனிநோக்கித் துதித்தார் தெவிட்டற் கருந்துதிகள். ()

துவரைப்பதிக்குச்சரியாக நான்கு வீதியுடன்றுலங்கி
இவிடத்தெவருமகிழ் வாசுதேவ புரியென்றெழில் விளங்கி
நவமிக்குளது துவரைமூன் று லெவ்வாறேவிங் நாளுமங்ஙன்
விவரித்துளதுநெடு வாசுதேவ புரியும் வியனிலத்தே. (யச)

நதிகோமதி யெப்படியோ வப்படியே யரித்திராநதியும்
துதிசெய் மகிமையடைந்துள திங் கிதிலே யமுனைத்துறைகுடைக்கு
வதிலேபுனலின் விளையாடன் மகிழ்வினயரல் வேண்டுமென
மதிசெய் முனிதன் மனமகிழப்புரிந்தான் வடபான்மதுரேசன். (யரு)

விசுவகருமன் றனையழைத்துப் பகவான் விரும்பி வடமதுரைக்
கிசைவினதிகமென வாசு தேவபுரியுமதினிசையென்
றசைவில் பெயரினொருநதியு மளகவிளையாட்டினுக்காக
ஒசிவிலெனக்குப் புரிகவென விசுவகருமனுடன் புரிந்தான். ()

எல்லாநகரங்களுக்கு மிதுசிறந்ததெனநால் வீதியெழிற்
கொல்லா வெளிக்கட்டுட னகக்கட் டுயர்ந்தகொடிங்கை யுபரிகைகள்
மல்லார்களிறு குதிரைபசுவருக்க நிரம்பு வயின்களுடன்
பல்லார்தடங்கள் கிணறுமடைப்பள்ளி பலவுமலங்கரித்து. (யஎ)

மயிலே முதலாம் பறைவையொலி வழங்கும்பொழிலு நகருடனே
வெயிலார்தரவு நிசாநதியே தடமாய் விளங்க நாற்றிசையும்
செயலார் பலவாமணிப் படியுந்தெளிந்து மனம்போற் புனனிறைவும்
இயலார்கமலம் பலவுடன் செங்கழுநீர் மலருமெழிலாக. (யஅ)

புனலார்ப்பறவை யொலியாலும் பொருந்து மவற்றின் குழுவாலும்
மனலார் மதிபோலோதி மங்கள் வதியுமழகுகளினாலும்
பனலாருடுக்க ளனவுமொளிர் பளிங்குமுதலாங் கிரகங்கள்
உனலார் தரவுள்ளனவெனவு மொளிரும் பலநன்மலராலும். (யகூ)

கமலத்திலையாமேகமுறு ககனம் போலவிளங்கியுயர்
அமலத்தரச வனமான வரசனுடனே குடையாக
நிமலத்துயர் வெண்கமலமலர் நிழற்றமீன்களானபடை
விமலத்துறையத் தவனாயிய மிளிரப் படகமெகினியம்ப. (உய)

பலவாமிலை யாம்பரி மான்றேர் மீன்கள் புரளலெனும் படையும்
குலவேந்தர்கள்செய் பெருந்தொழுதிபோன்று படிகளெனும் வேதி
மலர்பூங்கமலஞ் செவந்ததழல் வளரநறுந்தாள் சமித்துடனே
நலதாம்புகை வண்டுகள்கட்டு நறுந்தண்டெனும் யூபக்கட்கம். (உக)

முதலையுரலும் படராமைமுதலாஞ் சலசெந்துவின் முறமும்
சிதறில் கிருட்டிணசல முந்தேனின் பெருக்காச்சிய தாரை
மிதவும் வெளியதாமரைப்பூ வாகும் வபையுஞ் சலபறவைப்
பதமுமரித்திரா நதிதான் வேள்விச்சாலைப் படிகாட்ட. (உஉ)

வேறு.—புதிய செம்பொன் வகுந்தினீளொளிபுகமினுங்கிய பொரு
ளனுக், கதிதிருந்திய முனிவரும்படிகாண நீடுகருத்தினல்
அதிகரஞ் சகமகிழ்ந னிங்கிதவள்வு செய்வதரித்திரா
நதியெனுந்திருநாம வாவிதனன்னலஞ் சொலவென்னையே. (உங)

இன்னதாகிய நதியிடைப்புனலாடல் செய்திட வெம்பிரான்
தன்னையின்பொடு கண்டுகோபிலரோடு கோப்பிர ளயர்தவத்
துன்னலாயினர் கண்ணனிப்படி யுரைதுதிக்கு மகிழ்ந்துசீர்
மன்னுறுங் கருணைநிதித்தனி வந்துகோபிலர் வாழவே. (உச)

பிரமனுதியர் மகிழ்வுகொண்டருள் பெரிதுகூறவெலாநலா
பரணசோபை தரப்புனைந்த பதிற்றெட்டாறு சகத்திரத்
தரமினரொடு தோலினுயபை தண்மை பீச்சுதனிக்குழல்
இரதமேறி யரித்திரத்தட மெய்திறைனுட னெய்தவே. (உரு)

வந்தபின் பயனுதிதேவர் மகிழ்ந்துறுஞ் சனகாதியா
முந்தியோகியர் நாரதாதி நன்முனிவ ரந்தரமுகடெலாம்
அந்தவேளை நிறைந்துளார்முனி யானகோப்பிர ளயருடன்
பந்தமோவினர் தேவியோடுறு பகவனைத்தனி பார்த்தனர். (உசு)

நோக்கியே துதிநுவலுகின்றனர் நோன்மையோர் துதிசாமியே
காக்குமுன் பணிகளுமடந்தையர் கலனுமிக்கனை கவினவே
வாய்க்கவைத்திவ ரோடிமாநதிமன்னி நீர்விளையாடவே
போக்கறச் செயவேண்டு மாடல்பொருந்தி நீர்க்கரையேறியே. (உஎ)

கோபமங்கையரோ டுவந்தவர்கொண்ட வாபரணங்களைச்
சோபிதங்கொள மாறியேகொடு சுந்தரங்கொள வேபுனைந்
தேபயன்பெறுசேவையுந் தரல்வேண்டுமென்ப திசைந்துதேர்
தாபதன்பெறுபூவை நாயகனான யோகிகள்சாமியும். (உஅ)

உலகொழுக்கிற வாதுகோப நல்லாருடன் புனலுற்றுநீர்
சுலவுறுத்து துருத்தியுங்குழ லும்பொதிந்த தொட்குடன்
பலவுறுப்பினும் வீசியாடல் பயின்றுபல் வடிவாகியே
நலமினுக்கின ரோடுதேவர்க ளுடனீர்விளை யாடினான். (உகூ)

பலவிகாரமு மியல்வதாலு முடன்படப் புருவத்தினை
நலமதாக நெரித்தலாலு நகக்கரங்கள் பிணைப்புறச்
சுலவலாலு நலக்கிரீடை சுகம்பெறக் கிரிடித்தனர்
நிலவுவேட நிகர்ப்புறச்சிலர் நேமியைப்புணர் கின்றனர். (௩௰)

கோடுகொண்டு புனற்சிதர்ந்தனர் சிலர்கொழுங்கைகள் கட்டினால்
நீடுசோதியை நன்குகட்டினர் நீலவண்ண நெடுங்கணன்
பீடுசேர்மணி மார்புதோள்கள் பிணைந்துபின்னரு முன்னரு
மாடுநீர்குடை வார்களெண்சுவை மன்றலும்பெற லானவே. (௩க)

இங்குநேர்திரு மாலுமற்றவ ரிதையநன்கு திருத்திதான்
அங்குறும்படி யவர்களைப்புணர் வாகநீர்விளை யாடினான்
தங்குகோபிகை மார்கள்விம்மு தனங்களிற்செறி மஞ்சளும்
குங்குமந்தெரி சந்தனஞ்செய் குழம்பு நீரளறாகவே. (௩உ)

செய்கையாலகல் வானிலேமிகு தேவர்மேவு விமானராய்ப்
பொய்கைநீடு புனற்கிரீடை பொருந்துதேவனை நோக்கியே
கைகைகொண்டலர் மாரிபெய்தனர் நறுநிழற்புரி வானொன
மெய்கைகொண்டு விளங்கினார்குயர் சித்தர்சாரணர் விம்மவே. (௩௩)

சனகராதிநல் யோகர்யாவரு மதிசயந்தர நோக்கினுர்
அனகநான்முக னுந்தொழற்கரு மப்பரப்பிர மங்குலா
வினகமானுஷ ரூபமாவது மேவியாவர் களுக்குநீள்
கனகமேவுறு புண்ணியத்தள கக்கிரீடை கலந்ததே. (நடசு)

என்றுருத் தர்களுக்கொருத்த ரிசைத்துமாலே யிணங்குமன்
பொன்றநோக்கினர் தன்னியர்காங்களொருங்கு தன்னியர்காங்களொன்
றன்றியிப்படி யானரூப மெமக்குநோக்கரி தல்லவோ
நன்றுநன்றென வோதியோதி நலம்பிதற்றினர் நன்கரோ. (நடரு)

சுவேததீவுவை குந்தமேலவர் சொன்னசத்திய லோகநீ
டுவாசமார்தரு பாற்கடற்கு முவப்புமிக்கது சம்பகந்
தவாதமாபொழில் கண்ணனுக்கி தரித்திராநதி சகலரும்
அவாவுபுண்ணிய நதிகளுக்குயர் வாயபுண்ணிய நதியதே. (நடசா)

வேறு.

கண்ணனதுபாதசங்கத்தா லதிகங் கங்கையுடல் கலந்ததாலே
நண்ணுகலியாணியதி கம்பாதவைப்பினு னலதுசேது
மண்ணுமச்சி யவாலேநிவே தவைசங்கத்தாலதிக மடியிற்சங்கம்
ஒண்ணுதலாற் காவேரிதீர்த்தங்க ளுக்கெல்லாமுயர்ந்த தன்றே. (நடஎ)

இந்தநதியெல்லாங் காகுத்தனுக்குப் பிரியங்களென்ன மேன்மேன்
முந்தியொரோர்பாகமதி கங்களிந்த வரித்திரமாநதியை முன்னில்
அந்தமிகுங் கண்ணனதுபதாம்புஜச் செந்தூளியினு லமுதையாயும்
சந்தமுகாம்புஜம் பொருந்துதலினுலுந் தலைமயிர்தோய் தருதலாலும்.()

பாபங்களைப்போக்கு கிறசெய்கையாலு மெல்லாப் பயனுஞ்செய்யுந்
தீபவதிகளுக்கெல்லாஞ் சிறந்துளது கோபிகை கடிமிர்ந்தகொங்கைத்
தாபரங்களலங்கரித்த குங்குமத்தினுலு மவர்தலையிற் சூட்டும்
பூபடிந்ததேனுலும் பரிசுத்தமாய்ப் பெருகும்புனலதாகி. (நடகூ)

சகலருக்குமுயர்ந்தமுத்தி தனைக்கொடுக்க வரித்திரமா நதிதான்சார்ந்து
புகலருஞ்சம் பகப்பொழிலில் விளங்குகின்ற தினுநாமம்புனைதலாலும்
மிகவும்யதார்த்தங் கொண்டதரித்திரமா நதியென்று விளங்குகின்ற,தக
விடத்திலெனப்புலவ ரொருவருக்கங்கொ ருவர்சொல்ல லாயதன்றே.

இந்தமுனி யும்பயித்தி யம்பிடித்தவன்போல விருகைகொட்டி,அந்தமு
டன்கூத்தாடிக் கொண்டரித்தி ராநதியைவலஞ் செய்தியார்க்கும், பந்த
மகற்றச்சுதனே நமஸ்கரித்தான் கோபிகைகள் பகவான்றன்னே,விந்தையு
டனேக்கியினிக் கரையேற லாமென்றும் வேண்டலாகி. (சுக)

அவர்கள்கலையுடனுப ரணங்களகப்பட்டவர்கள் மறைத்தெடுத்துத், தவ றிலதுகொளலாகு மென்றுஞ்சொற் றிட்டிதனைத் தகவிற்கேட்டே, அ வரவர்கள் சீக்கிரமாய்க்கரையேறி யனைவோரு மலங்கரிக்கும், தவறில் கலையுடனுப ரணங்களைக்க லந்தெடுத்தார் சாமிதானும். (சுஉ)

சலத்திருந்து கரையில்வந்து வஸ்திரமாபரணங்க டாங்கும்போது, கு லத்திலொரு வஸ்திரமுந் தாடங்கமொன்றுமொரு குழையுங்கொண்டு நலத்தநவ ரத்தினசோ பிதமானவிவைகிடைக்க நயந்தகாலம், தலத்தவ ருக்கிதகரனுஞ் சம்புநந்த கோபரங்குச் சாரக்கூவி. (சுங)

சொல்லுகின்றா ரோய்நந்த கோபரோகேட்டிரால் மதுரந்தோய்ந்து
நல்லவமுதம்போன்ற குழம்புப்பான் முதலான நவிலும்பானம்
துல்லியவாகாரங்க ளால்விரைந்து பிரிதியுடன் புனலிற்றோய்ந்து
வல்லவிளையாட்டினுற் சிரமத்தை யடைந்துவிடாய் வாய்தலாலே. ()

உமதுபிள்ளையானகண்ணன் றிருத்தியுறச் செயவேண்டு மென்றங்கோ தி, அமுதமெனக்குழம்புப்பா லுண்டாகும் விதிசொலுவே னன்னசெ ய்ம்மின், கமைகொளரித் திராநதியின் கீழ்த்திசையிலின்பமது கவின் றேசத்தில், சமையும்வெண்க லக்குடத்திற் பசுவின்பாலூற்றியது தகத் தழற்றி. (சுரு)

மற்றொருகும் பத்திலந்தப் பாலைவைத்துப்பரிசுத்த மந்திரத்தால், வெ ற்றிமிகுகண்ணனுக்கென் றேசொலவேண்டுஞ் சொன்னல் விரும்புமப் பால்,குற்றமறத்தோய்ந்து குழம்பாகு மற்றையிடங்களிலிவ் வாறுகொ ள்ளா, திற்றிதனுற்பகவானுந் திருத்தியடைந் தின்புறுவா ரினிமேற்கே ண்மோ. (சுசு

உங்குலத்திற்பிறந்தவரு மிப்படிக்கே குழம்புப்பாலுவப்பச்செய்து,தங் குறுகோபாலனுக்கு நைவேத்தியஞ்செய்யத் தகுவாரீதில், எங்குமைய ப்படவேண்டா மென்றுசிவன் சொல்லநந்த கோபரவ்வா, றங்குளுற்றி ரைக்கா லந்தனிற்கோப் பிரளயரு மையன்றன்னை. (சுஎ)

சென்றுகண்டோர் விண்ணப்பஞ் செய்கின்றூர்சுவாமிநீ செப்புமிந்த
ஒன்றொருவஸ்திரத்தையே தரித்தொருகா தினிற்றா டங்கத்தையுற்று
நன்றொருகாதினிற் குண்டலத்தினையு மலங்கரித்து நல்லகேசம்,துன்று
கொண்டை யாய்முடித்துச்சேவைதரல்வேண்டுமெனச்சுருதிமேலான்.

அப்படிக்கே சேவியெனக் கோபிலர்பா லன்பினுலந்தவோலை
ஒப்புகடுக்கன்கலையொன் றுந்தரித்துவிளங்கினு னுதனைநோக்கித்
தப்பில்சனகாதியரவ் வடிவுகண்டு துதிக்கின்றூர் தகவிற்பின்பால் ,மெ
ய்ப்புடனே உயர்ந்துதலைமயிர்முடித்துக் கொண்டையினுல்வேய்தலாகி,

சந்திரன்போன் முகத்துடனே கருணைநிறைகண்களும்புன் சிரிப்புந்தா
ங்கி,அந்தமிகுதந்தமுஞ்செம் பரத்தம்பூப் போற்செவந்த வதரத்தோடு
முந்துறுகண்ணாடியொத்த கபோலமுமெள் ளுப்பூச்சம்பகப் பூமொட்
டுத், தந்துறமுநாசிகையுஞ் சங்கம்போற் கழுத்துமகன் மார்புதானும்.()

இபத்துதிக்கை போற்கரமும் வலச்செவியிற்குண்டலமு மிட்துகாதில்
சுபத்துமிகுதாடங்க முஞ்சத்தியபாமை யங்குஞ்சொலும் வலத்தில்
நிபத்துருக்குமணியும் விளங்குறமூன்று வளைவுடனே நீள்பிரம்பும்
விபத்தறக்கொண்டுஞ் சத்தியபாமையது தோளிலிடம் விளங்குகையும்

சிறிதுவளை வுறுமிடுப்பு மொற்றைவஸ்திரந்தரித்துஞ் செயரஸ்தாளி,ந
றியகனிவாழையொத்த தொடையுங் காகளமுழந்தா ணலனுங்கொஞ்ச
ம், குறிதுவளைவுறுமிட்கா லுந்திடத்தி லூன்றுவலங் கொண்டகாலும்
வெறிசெய்பதாம்புயம் விளங்குஞ்சிலம்பு தண்டைகளுமான வேடத்
தோடே. (௫௨)

மதனனுக்குமதனனென வருராஜகோபால மாலைக்கண்டு
நுதலிவணக்கம்புரிந்து தந்தமதுநகர்புகுந்தார் நுவன்றமேலோர்
இதமுட்னித்தோத்திரத்தைக் கேட்டுக்கோப் பிரளயருமெழிற்கோபால
முதலைநனிநோக்கிமகிழ்வுடன்றுதித்தார்வேண்டினர் முன்னோர்போல.

சாமிநீயிவ்வடிவத் துடன்றனே யெப்பொழுதுந் தகவாலிங்கு, யாமி
னிதுவணங்கவசித் திடல்வேண்டு மெனத்தொழுகின் றேம்பல்கால்யா
ம், பூமிகுசெம்பகம்புனைந்து செம்பகப்பூம் பொழில்விளங்கிப் புகழா
ன்மிக்க, நேமிகொளுஞ் செம்பகேசனைவணங்கு கின்றேமென்றே நே
சித்தார். (௫௪)

இப்படிக்குமுப்பத்தி ரண்டுவகையாயியல் கோபாலன்சேவை
மெய்ப்புறக்கண் டக்கோப்பி ரளயமுனிபலவகையால் வேண்டியங்குத்
தப்பறக்காட்டுப் போஜநஞ்செய்து சாமிக்குத் தகநிவேதித், தொப்புற
ப்பத்தியி னுடனேவணங்கியுந் தோத்திரித்துமகிழந் துவந்தார்மன்றே

கூறுநந்தகோபரங்குக் கொண்டுவந்த வின்பமிக்க குழம்புப்பாலைப்
பாறுபுரிராஜகோபாலன் கோபிகைகளுடன் பானஞ்செய்து
சாறுமகிழ்வுடன்கோபி கைகளுக்குங் கோபாலர் தமக்குநன்கு
தேறுநலபோஜனஞ் செய்வித்து ஜலக்கிரீடையினுஞ் சிரமந்தீர்ந்து. ()

சந்தவின்பத்துடன்விளங்கி ஞனின்னபிரபுவெனுஞ் சார்ங்கக்கையன்
முந்துமரித்திராநதியி லேஜலத்திற் கிரீடைதனே முயன்றுநல்ல
கந்தமிகுஞ்சம்பகப்பூம் பொழிலின்முனி மகிழ்வினுக்காய்க்கருதிநின்று
ன், அந்தமுட்னின்றமது முதலந்தக்ஷேத்திரம்பூ வகிலத்துக்கும். ()

அதிகமாயிற்றரித் திராநதியுமூன் றுலகங் களுக்குஞ்சுத்தக்
கதிதரும்பாவனமாயிற் றுச்சவுராட்டிரதேசங் காக்கும்வேந்தன்
துதிசெய்வல மிக்கவனங் கொருகாரணத்தாலே தனைத்தொடர்ந்த
புதிதுசெய்த நன்றிமறந்துளதோஷந் தடம்படிந்துபோக்கிப்போனன்.
தனதுநகர்க் கென்றுபிரமாண்ட மெனும்புராணத்திற் சம்பகப்பூ
வனமகிமையறுபத்தி னலாமத்தியாயமுடி வென்று வாய்ப்பப்
புனிதமிகுஞ்சூதர்சொல்லச் சவுனகருங்கேட்கின்றார் புராணமெல்லாம்
இனிதுணரு முனிவரரோ சூதபகவானே யென்றேத்திமாதோ. (ரு௧)

நான்காமத்தியாயம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - எாய௧.

## ரு-வது ராஜசேகரனத்தியாயம்.

இசைத்தசவுராட்டிர தேசாதிபதியெவனவன்பே ரென்னவன்னான்
நசித்துளசெய்ந் நன்றியினாற் றேடமெவ்வாறுயிற்று நவிலவேண்டும்
பசைத்தவற்றையெனக் கென்னப்பன்னுகின்றார்சூதருங்கோதாவிரிக்கு
மிசைத்தவடக் குக்கரையிற் சவுராட்டி ரதேசமெனவிரும்பிமாதோ.(௧)
சிந்துதேசத்துக்குஞ் சவ்வீரதேசத்தி னுக்குஞ்சேர்ந்து
முந்துநடுவிற்றன தானியங்கணிறைந்தும் பார்ப்பார் முறைசெய்வேந்தர்
நந்துறுவைசியரொடு சூத்திரருக்காதாரமாய் நலஞ்சிறந்தும்
நிந்தையறலோகபூஷண மாயுமாறுபாய்நிறைவு சேர்ந்தும். (௨)
வேறு.-பலவனங்களுடன் கூடியுமிருக்கின்றது வதற்கரசனிப்படிமேல்
நலமிகும்ராஜ சேகரனொருவனவின்றசீர் வேதவேதாங்சம்
சிலைமறைதெரிந்து நித்தமும்வேந்தர் செயுந்தருமத்துடன்கூடி
நிலைபெறுகுடும்பி யாகியுஞ் சனங்கட்கிதகரனாகியுநெறியே. (௩)
வேள்விகள் பலவுஞ்செய்துள வசுமானென்கிற வேந்தனோர் மகனைக்
கேள்வியின்மகங்கள் பலவுநன்குணர்ந்துகிளர் நியாயத்துடன் ஜனங்கள்
ஆள்வினையுறவே பாலனம் புரிந்தங்கமை வுபாயத்தொடு தனங்கள்
நீள்வுறவியற்றிவருமிந்த வேந்தனிலவனங்களிற் பயிர்நெடிதே. (௪)
மழையினாலேயே விளையுநீள்குடும்ப மலிபிரஜைகள் பயிரிட்ட, தழை
வுறுசாமை வரகுழுந்துதினை சாற்றியகடலை கோதுமையே, விழைவுறு
ம்பயறு மொச்சைகொள்ளின்னம் விளையுமெல்லாப்பயிர் களையும், கு
ழைவுசெய்முள்ளம் பன்றிகாட்டெருமை குரங்குநாய்நரிபுலிகரடி. ()
முதலியதுட்ட விலங்குகளழித்து மொழியிராப் பகல்பயிர்காவ
லதுலர்கடமையு மழித்தபோதவர்க ளவைகளைத் தடுக்கமாட்டாமல்
நுதலியவரச னரண்மனைவந்து நுவன்றனர் தமதுதுக்கத்தை
இதமுடன்வேந்தே பிரஜைகள்பயிர்க ளழிந்ததென் றின்னமேதெனவே

எல்லையிலூரூர் பயிர்செய்தவவர்கள் யாவரும் விலங்குகளாலே
வல்லைதாக்குண்டா ராதலாலரசே மற்றுனக்கியாங்கள் பிள்ளைக்கு
நல்லவொப்பலவோ புரந்தருள்செய்யு நாதனியல்லவோ நயந்து
சொல்லுமெங்களைநீ தயவுசெய்தருளித் துன்பறக்காக்குதல் வேண்டும்.

என்றவர்புகன்ற வார்த்தையைக்கேட்ட விராஜசேகரன்புகல் கின்றான்
நன்றுமன்பதைகாள் பயத்தைநீத்திடுமி னவிலுமுங் களுக்குநல்வாழ்வு
துன்றுநான்வனத்தில் வேட்டையாடுதற்குத் தோன்றிவேகத்துடன்
ெடுக்கும், கன்றுவாளிகளால் விலங்கினஞ்செற்றுக்கவல்பயந் தனைத்
தவிர்த்திடுவேன். (அ)

ஆகையானீங்கள் போகலாமெனச்சொல் வார்த்தையை யக்குடும்பிகள்
கேட்,டோகையோடூர் போனபின்பந்த வுலகுகாவலன்விரைந்தேதன்
வேகமார்சேனை களைக்குழாம்புரிந்து வேட்டையாடுதல் குறித்துற்று
ன், போகுகாலையிற் சவ்வீரதேசத்துப் புரவலன்றூண்டியதூதர். (கூ)

விரைந்துவந்தரச சேகரனிடத்து மிகுவணக்கத்துடன் றமது
புரந்தரனுரைத்த படிபுகல்கின்றார் புகன்றவெங்கோவனுப் பினதா
நிரந்தபத்திரிகை தன்னைநீநோக்க வேண்டுமென் றவர்நிகழ்த்திடலும்
தரந்தெரியிராஜ சேகரனதனைத் தவலறத்தான் படிக்கின்றான். (ய)

பெரியவர்தமக்கிங் கிதகரன்மேருப் பெருமையன்சௌமியன்செல்வம்
திருவுளன்சகல குணங்களுநிறைந்த தீரனுமிராஜ சேகரனே
உரையெனுலெந்தக் காரியத்துக்கா யுய்த்ததோ விந்தவிண்ணப்பம்
மருவியவந்தக் காரியந்தனைநீ வழங்குசவ் வீரதேசத்தே. (யக)

உள்ளவோர்பயந்தீர்ந் திடவகத்தியமா யுதவுதல்வேண்டுமா யிரங்கள்
எள்ளலாவகநே கமென்றவில்வேல் வாளேந்திய கையினராய
கொள்ளைவேடர்களால் வழிநடக்கின்ற குறைவறு சனங்கடாமிகவும்
பொள்ளலாயின சேதுடன்புகல் காசிபோகுமச் சனங்களும்புலந்த. ()

இன்னதுட்டர்களாம் வனத்துவேடர்களை யினிதொறுத்தவரை யுன்வ
சஞ்செய், துன்னவேவேண்டு மென்றபத்திரத்தி லுளபொரு டெரிந்து
சீர்வேந்தன், தன்னதுசேனைத் தலைவனைக்கூவிச் சயந்தனுந்தானைகாவல
னே, நின்னதுசேனை களையெலாங்கூட்டி நீபிரயாண மாகுதலே. (யங)

வேண்டுமாதங்கங் குதிரைதேர்காலாள் மிகுந்துள சேனையையின்னே
காண்டல்செய்திடுசவ் வீரதேசத்துக் காவலன் றனக்கடலின்றி
நீண்டவில்வேட ராலுளஜனங்க ணெகிழ்ந்துபத்திரப்படு கின்ற
தாண்டுநம்மாலங் கியாவரும்பயந்தீர்ந் தடைவிலே வழிநடந்திடுக.(யச)

என்னவவ்வரசன் சொல்லலுஞ்சயந்த னென்றசேனுபதி சகல
மன்னுசன்னுக முடனரசனுக்கு வந்துமுன்னேசெலப் பட்டான்
துன்னியவிராஜ சேகரன்விரைந்து துரங்கமாத் தேர்புகுந்தேறி
அன்னராச்சியத்தை மந்திரிவயின்வைத் தமரில்வெல்சேனைகளுடனே

செல்லலாயினன் முன்னநேகம் வெல்படைகடெரிந்த காலாள்களு மத
ற்குப், புல்லலாய்ப்பின்னே விசித்திரநிறத்துப் பொரும்பரிகளுஞ் செ
லுத்துநரும், மல்லல்சேரதற்குப் பின்பிருபுறமு மணிக்களக்கந்தரம்
போலக், கொல்லவல்விலங்கு களுமதற்குப்பின் கொடிஞ்சியந்தேர்வல
வர்களும். (௰௬)

தேருருளோசை கரிமணியோசை சிந்துரங்குதிரைசெய் யோசை
வாருறுபடக முதலவாத்தியங்கள் வழங்குறுமோசை போர்ச்சேனை
சார்வுறுமோசை சகலதிக்குகளுஞ் சார்ந்தன நிறைந்தனதாவா
வீரனும்ராஜ சேகரன்றுனே விளங்குசன் னுகமதுடனே. (௰௭)

செப்புசவ்வீர தேசநீள்வரைப்பிற் சென்றனனவ் விடத்தயுதம்
விற்புனேவேடர் திருடர்சன்னுகத் துடன்பொர விரைந்தனரரசன்
பற்பல்சேனைகளுங் கத்தியேமுதலாம் பல்படைக் கலங்களாற்பொரும்
போ,தப்படைவேந்தன் மகிழ்வுகொண்டடைந்தா னணிகொள்சேனுப
திசயந்தன். (௰௮)

விரைந்துதேரேறிச் சேனைகளுடனே மிகுபலவாளி மேகம்போற்
சொரிந்தனனப்போ தினிலந்தவேடர் தொடையிடை தலையடிதுணிந்
தார், பரந்தவப்பாணங் களினடிபட்டார் படலுமிஞ்சின சிலர்கயிற்றால்
நிரந்துகட்டுண்ணச் செய்துகோமான்ற னேர்கொடுவந் தனனரசன். ()

வந்தசீர்ச்சயந்தன் றன்னையேநோக்கி மகிழ்ந்தவருடன்பயி ரிடுவோர்
முந்துசொல்வனத்தைக் குறித்தவர்களுக்கு முதிர்மிரு கங்களாலான
அந்தமாபயந்தீர் தரப்பிரயாண மாயினன்வேட்டை யாடுதலில்
மைந்துசேர்பிரிதி யுடன்படைகளினும்வஞ்சகவலைகொள்வார்களினும்

கயிறுகொள்வார்க ளினுமிருகங்கள் கணங்கொளக் கூவுமவ்வுபாய
நயமுணர்வார்க ளினும்பினுமற்ற நலரினுஞ்சூழ்வுறப் பட்டுச்
செயிரில்பாய்மாமேற் கொண்டநேகம்போர்ச்சிங்கமேபன்றியேமுதலா
ப், பயின்மிருகங்க ணிறைந்துளஜெல்வி காவனப்பாற்கை வில்லுடனே

வேறு.—அந்தநீள்வன மெலாமரிதிற் சுற்றினன்
குந்தமேகொடு புலிக்குலத்தைக் கொன்றும்வில்
சிந்துபாணங்க ளாற்சிந்து ரங்களை
நந்திடப்பிளந் தும்வஞ்சனை நலத்தினல். (உஉ)

வலியயந்திரங் களான்மா னினங்களை
நலிவுறப்பிடித்துநீ ணணிற் பன்றிகள்
ஒலிதரப்பிணித்து மற்றுள்ள துட்டமா
மெலிவுறவடித்தும் வேறணி லுடும்பெலாம். (உரு)

கொண்டுமுண் மாக்களுங் கொண்டுமெற்றதில்
வெண்டிறப்படிசமென் காலுமேதக
வொண்டனிக்காது மிந்திரவொண்ணீலம்போல்
மண்டுறுமூக்கும்வாட் கோனைவெண்பலும். (உ௪)

கவின்கொளவுறுமொரு காட்டுப்பன்றியை
நவின்றசெங்கோனல ராஜசேகரன்
குவிந்துறநோக்கித்தன் குதிரைமீதுபோந்
துவிஞ்சுறுவினைவொடு துரத்தும்போதரோ. (உரு)

தன்னுயிர்செகுத்திடச் சாரும்வேந்தனை
மன்னுறநோக்கியவ் வலத்துச்சூகரம்
பன்னியசில்வயின் பார்க்கலாகியும்
உன்னியசிலவயி னொளித்துஞ்சென்றதே. (உசு)

நீணெடுந்தூரமந் நிலத்துவேந்தனை
ஊணறத்தொடர்ந்துற வோடிற்றவ்வனத்
தேனுறத்துரத்தின னேகுங்காலையில்
ஆண்மையினுன்பசி தாகத்தார்த்தியால். (உஎ)

ஜெல்லிகாவனத்தினீர் சிறிதுமில்லிடத்
தொல்லைசெல்பன்றியை யுலகுகாவலன்
கொல்லல்செய்தாதபங் கொளுத்தலாலவண்
மெல்லவேசிரமத்தை யடைந்துவெய்துற்றுன். (உஅ)

குதிரையுமிளைப்புறக் கொண்டபோதொரு
முதிர்பழுமரத்தடி வந்துமுன்னுறும்
அதிர்குரற்குதிரைநின் றவணிழிந்துதான்
பொதிரிளைப்புடன்வெயர் போர்ப்பவுற்றனன். (உகூ)

உற்றபோதுற்றநண் பகலிலோர்தணீர்ப்
பொற்றடம்புகுந்துநீ ராடிப்பூங்கையில்
பெற்றநீர்த்திர்த்தபாத் திரத்துடன்பெயர்
கற்றவேதியன்றனைக் கண்டுவேந்தனும். (௩௰)

நீர்தரல்வேண்டுமென் றிரப்பநின்மலத்
தார்தருவேதிய னந்தவேந்தனைச்
சோர்வுசெய்பசிநெடுந் தாகத்துன்பினால்
ஏர்தபவிளைத்தமை நோக்கியின்பொடே. (ருக)

தன்னதாச்சிரமத்திற் சாரவேயழைத்
தின்னல்சாய்வுறக்கொணர்ந் தெரிசெயோத்திரம்
நன்னலம்பெறப்புரிந் தினிதுநாடொறும்
பன்னுறத்தகும்பக வானைப்பூசித்து. (ருஉ)

அதிதியென்றுளவவ ணடைந்தவேந்தனைப்
புதிதெனத்தகும்படி பூசித்தோர்பெறு
துதிமிகுவியஞ்சனத் தோடுரூபமே
முதலியவுடனெலு மிச்சமோகனி. (ருரு)

பிழிந்தநீர்மோருடன் பின்னும்பல்வகைச்
செழுந்தகைகொடுபல சிறப்புஞ்செய்துசீர்க்
கொழுந்தெனுமரசர்கள் கோனையவ்வழி
கழிந்துறுநடைச்சிர மத்தைக்காத்தரோ. (ருச)

வைத்தனனிப்படிச் சிரமமாறுதற்
கொத்தனசெயமனத் துவந்தகோமகன்
செய்த்தலர்மலர்முகச் செவ்விகண்டுசீர்
உத்தமவேதிய னுரைக்கின்றனரோ. (ருரு)

வேறு.

ராஜசேகர னுகநிலாவுசீர்
வாசமாமலர் மார்பன்மகிழ்ந்திட
ஆசிலாதர வோடமைவாகவே
நேசமெல்லா நிகழநிருபனே. (ருசு)

உமதிராச்சிய மெவ்விடத்துற்றதோர்
அமைதியாயதெத் தேசத்தரசனீ
கமைவுறும்பெய ரேதுகருத்துற
எமர்களுக்கிசை மின்னெனவேத்தவே. (ருஎ)

கேட்டிமேதகு கேள்விகொளந்தணு
வாட்டமில்சவு ராட்டிரமன்னவன்
நீட்டுசீர்வசு மானெனுஞ்செம்மலாம்
கோட்டமில்பெரு மான்பெறுகொள்கையேன். (ருஅ)

ராஜசேகர னுமனிந்நாள்வனத்
தாசுதீரவ்டைந்தனன் கோரமாய்ப்
பாசுபன்மிரு கத்தொடுபக்ஷிகள்
நேசமாகி நிலாவுமருங்கிலே. (ங௬)

எவ்விதத்தில் வசித்துளனுயிவண்
செய்வதாயநின் பேரொதுசெப்புநீ
உய்வதாய வுறவுடனென்னகர்
வைவதின்றி நடந்திடினல்லதே. (சഠ)

அவ்விடத்துனக் காந்தனதானியம்
ஒவ்வதாக வுறைவிடமுள்ளவும்
எவ்வமின்றி யுண்டாமெனவிப்படிக்
கவ்வைகொண்டு கழறிக்கருத்துளே. (சக)

ஆபத்தாகிய காலத்தகப்படீஇ
நீபற்றுகென நேயஞ்செலுத்துதற்
கேபற்றுமுற வென்னவிசைந்துள
சோபத்தோடிசை யாதுறுகோதிலான். (சஉ)

ஆனவேதி யனைத்தொழுதன்னவன்
போனகம்புசித் துக்கனிபுந்தியால்
மேனவின்றவவ் வேதியனைப்பல
கானவின்றனன் வாய்கொடுகாவலன். (சங)

அந்தவேளைசே னுபதியானவன்
வந்தசேனைக ளோடுவனமெலாம்
முந்தநேடி முழங்குகுதிரைமாத்
தந்தகாலின் றடங்கண்டுவந்தனன். (சச)

ஜெல்லிகாவனத் தாச்சிரமத்திற்சீர்
மல்குகோனுற நோக்கிமறப்படை
வல்லதேர்கரி மாமுதலாகிய
பல்பதாதியும் பக்கமலிந்தவே. (சரு)

கண்டுநீள்சிர மந்தெறுகாவலன்
புண்டரீகம் பொருமுகநோக்கியே
எண்டபோதன னென்னும்பிராமணன்
கொண்டமன்னவ கேளெனக்கூறுவான். (ச௬)

பிரமசர்ம னென்னும்பெயரோன்பெறு
திரநலெக்கியசில னென்பேரன்யான்
தரமில்சோரந் தருமிந்தநீள்வனத்
துரனிலார்குடும் பத்துடனுற்றுளேன். (௪௭)

காட்டில்வாழு முனிக்கணங்கட்குநீள்
நாட்டினீடு நகர்ப்புறத்தேயடல்
கூட்டிநீடு குரிசிலிடத்துற
நீட்டிவாழ நினைக்கத்தகுங்கொலோ. (௪௮)

ஆகையாலவ னுகறகாதியாம்
சேகில்புண்ணியஞ் செப்புபுராணங்கள்
வாகொடியாவும் வகைந்துதெரிந்துசீர்
போகுவேள்வி முதலியபுண்ணியம். (௪௯)

செய்துகொண்டி திருந்துநகரிடை
ஐதிராஜ னமர்தரச் சேவைநான்
நைதலின்றி நடத்தகில் லேனினி
உய்தல்செய்படை யோடினதூர்க்கணே. (௫௰)

மீண்டுசெல்வது வேநலனென்றுசீர்
மாண்டகேள்வியி னன்சொலமன்னர்கோன்
நீண்டமாதவ நின்மலன்றன்முகம்
காண்டல்செய்து கழறுகின்றனரோ. (௫௧)

வேறு.

நீயெனதுநகர்க்குவரல் வேண்டாநான் மிகுந்ததன நினக்குநேர்வேன் மேயவிட்தெனப் பார்ப்பா னரசேநின்னகர்புகுந்து விளங்கும்பின்னுள், சாய்வறுமெக் கியத்துக்கா யான்வரும்போதரிய தனந்தருதலாகும் பாயபடையொடுமீண்டு சுகமேநீ யுனதூர்க்குப் படர்தல்வேண்டும். ()

இப்போதென் றந்தணன்சொற் றிடவந்தக்கோமானு மினிதுபார்ப்பான், சைப்போன கம்புசித்து வாக்காலப்பிராமணனைக் களிக்கச்செய்து, நட்போடுமெள்ளநக ரடைந்துமிஞ்சு வேடரெல்லா நலிவதாகத் துப்போடுவிலங்கிலிட்டா னிப்படிக்குத்தருமத்தின் றொடர்விறேடே.

சகலஜனங் களையுநன்கு புரந்தருளுமிந்தமன்னன் றனக்குநல்ல சுகசுவணசிகாமணியென் றொருபுதல்வ னுளனுறன் றேன்றப்பின்பு தகவுடனெக்கியசில னெனுமிந்தப் பிராமணனுந் தங்கதாய மசுமியற்றவேண்டுமென வொருகாலத் தினினினைத்து மனைவியோடே,

ஆலோசிக்கும்போது மனைவியெனுஞ் சுசீலையென்பா ளவனைநோக்கி
மேலோர்க்குத் தகுபதியேயெனப்புகல்வாள் சங்கையின்றி விளங்குகி
ன்ற, பூலோகத்திடைராஜ சேகரனு மரசனிடம் புகுந்துவேண்டு
சாலோகத் திடைதனமே முதலானயாவுமவன் றருவனென்றாள்.(ருரு)

இப்படியங்சவளியம்ப வெக்கியசீலன்புகல்வா னேழையேகேள்
ஒப்பறுமுன்றனக்காக வீணைநான்வழிநடக்க வுறலாயிற்றுத்
தப்பறநீளரசுநிலை தனிநடத்து மவன்மனத்திற் றுன்முன்சொன்ன
மெய்ப்புறுமன் பினதுநிலை விளங்காதுநானெங்கே வேந்தனெங்கே. ()

வெகுதூரமாயிருக்கின் றதுவேந்தன் பொருளாலே வேண்டல்யாது
நகுசீரினமக்கெனமற் றவன்கூறச்சினத்தாலே நன்றுபோம்போம்
தகுகாதலிவிநீயென் றவள்புருடன் றனைநோக்கிச் சாற்றும்போது
புகுகாதலுடையவந்தப் பிராமணனும் பாரியைதன் புணர்ப்பினாலே. ()

அந்தவனத்திருந்துசிந்து சவ்வீரதேசத்தி னடுத்தநாப்பண்
குந்துசவுராட்டிர தேசத்தில்வந்து பெரிதான கோட்டைவாசல்
முந்துமரண் மனைநோக்கி வாசற்காவற்காரன் முகத்தைக்கண்டு
வந்தசெயலுணாக்கின்றான் யான்சொனதாயரசன்பால்வகுத்தியென்று.

வேறு.

வேட்டைவந்த ஜெல்லிகாவனத்தினோர்சார் மேவியவெக்கியசீலன் றன
க்குமுன்னாள், நாட்டைநின்றுபுரந்தருளுந் தான்சொல்வார்த்தை நம்பி
க்கைகொண்டவன்று னயந்துவந்தான், தேட்டைநின்றசீரினனீ யன்
றேவாதல் செப்பியவுன்பால் வேள்விசெய் தற்காகக், காட்டையொன்
றுவேன்மிகுந்த தனத்தைவேண்டிக் கருதுமுன்றன் சமுகத்தைக்கா
ண்டல்செய்வான். (ருசு)

கொண்டகருத்தினுக்கேற்க வுலகாள்செங்கோற் கொற்றவன்சம்மதந்
தெரிதல் குறிக்கோளென்ன, விண்டதுசேட்டந்தநெடுவாசற் காப்போ
ன் வேந்தனவைக்களம்புகுந்து விளம்புகின்றான், மண்டலத்துமகிபா
வோர் பார்ப்பான்மிக்கவார்த்திகனுய்த் தலைநடுக்கி மகத்துக்காகப், பண்
டையநின்றனைக்காண வேண்டுமென்றென் பாலுணாத்தானென்னுமிந்த
ப்படிதான் கேட்டான். (ருஎ)

சென்றதுதானெடுங்கால மாதலாலேசிந்தை யயர்ந்தேராஜசே கரன்று
ன், நன்றுறநான்பிராமணனைத் தெரிந்தேனல்லே னம்பிக்கைசொன்ன
துமின் றென்றுசொல்லிக், குன்றுதலில்லாராஜ காரியத்திற்கூடியுணா
வாய்மூடிக் கொண்டமர்ந்தான், அன்றதுதான்றெரியாம லெக்கியசீல
னங்நகரத்திரண்டுநா ளமர்ந்துபின்பு. (ருஅ)

எவ்விதத்திலும்பரிசைக்ஷக் காகராஜா வினைக்காணவேண்டுமென வேந்த
ல்விட்டில், அவ்வளவும்பயமின்றிக் கள்ளன்போல வாபரணத்தொன்
றினைக்கொண் டகன்றுசோரர், வவ்விவருவழிவெளியில் வரும்போதந்
தவளநகர்க் காப்பாளர்கண்டுபயஞ் செய்தாத்துச், செவ்விபெறுமரசன்
பாற் சேர்க்கவப்போதினிற் பேசாதரசவைக்கட் சேர்ந்துநின்றான். ()

மந்திரியே முதலானோர்கண்டுவேண்டா மறையோய் நீயரசனதுசலன்
பெய்பேழை, எந்த விதத்தெடுத்தாய் சொல்லென்றுகேட்க வெக்கிய
சீலனுமரசன் கேட்கக்கேட்ட, அந்தமதி மந்திரிகடம்மை நோக்கியறை
கின்றான் மந்திரிகாளரசன் முன்னாள், வந்துஜெல்லிகா வனத்திற்பசி
தாகத்தால் வருந்தியெளியேன் புளையுண் மகிழ்ந்து போந்து. (௬௩)

யான்றரும் போனகம்புசித்தி யாகத்துக்கா வென்றிடம் வந்தாற்றன
நன்கீவேனென்று, தோன்றறவே பிரதிக்ஞைசெய்து சொன்னசொன்
மறந்தானிந்நாளிலாகலாலே, நான்றனி வந்திவன்றெரியச் சோரனாகி
நணுகிநின்றே னெனவேந்த னவிலுகின்றான், ஊன்று குரூரத்தொடு
வேதியனே கள்ளத்துறுமதமனே நீவேதியனா யுய்ந்தாய். (௬௪)

ஆயினுமின்ற பராதஞ் செய்து புத்தியல்லாதிங் குறுமுன்னையடுதல்
வேண்டும், மாயிருஞாலத்தவையினுணமின்றி வந்தேது சொன்னாயுன்
மதிக்கள்ளத்தை, வாயிலெந்தவிதம்புகல்வேன் றண்டஞ்செய்ய வல்லீ
ரோயிவன் கொண்ரா பரணமெல்லாம் தேய்விலது கொண்டிவனை யெ
ல்லைநீங்கச் செய்மினென வப்படியே தெருண்டு செய்தார். (௬௫)

எக்கியசீலனுந்தனக்கு வந்தமான வினத்தை நினைந்தீது மனைவியாலே
தக்கியதென்றுளையாடா தேழன்போலத் தனதுபன்ன சாலைவந்து
சார்ந்துபாரி, யைக்கசந்து மன்னனது செய்கை சொன்னனப்படிக்கு
ப்பிராமணன் போனபின்பிராஜன், நக்கிருளை யொளிருமந்தப்புரத்திற்
சார்ந்து நன்குதுயின்றெழுந்து பின்பு நன்றி கொன்றான். (௬௬)

எனுந்தோஷம் பற்றலுமவ்வரசன்பித்த னேயாகிநான்கு வாக்கிலுந்தி
ரிந்து, நினைந்த திழந்திராச்சியத்தை நீங்கிச்சென்று னெடுங்கானமப்ப
டிச்சென்னிருபன்றன்னை, இனைந்துகண்டு சுவணசிகாமணிக்குப்பட்
டமியலுவித்து மந்திரிமாரினிதுபூமி, தனந்தனி பாலனம்புரிந்தார்
மன்னன்பிராந்தி சார்ந்துநின்ற விடத்தினில்லாத்தகையனாகி. (௬௭)

ஏகாங்கியா யூருராடையின்றி யினைந்தலைந்து சூழ்ந்து தலைமயிரலைந்து
சோகாந்த மிலதிளைத்துக் கறுத்துத்தேகந் தொண்ணூறே டொருபத்
து வருஷஞ் செய்த, வாகானவுபகார மறந்ததோஷ வன்மையினெல்
லாராலும் வசையேகொண்டு, மோகாந்தனாய்க் கதறிக்கொண்டநேகமு
றை புலம்பி விழுந்து புரண்டுற நகைத்தான். (௬௮)

இப்படியே யனேகதுக்கங் கொண்டுபின்னு மிழந்துபுத்திமயங்கி ஜெல் லிகாவனத்தை, மெய்ப்பொடுகண்டே தனக்குச்சோறுதந்து விளங்கிய வெக்கிய சீலவேதியன்சேர், அப்பழுநன் மரத்தடி வந்தலைந்து வேறே யாதர வொன்றின்றி வெருவாகக்கூவித், தப்பறு தன்சுகங்களை யெண் ணிப்புலம்பித் தனிமூன்று நாளவண் சஞ்சரிக்கும்போது. (௬௯)

ஒருநாளம்முனி புனையுட் சென்றனப்போதுற்ற வெக்கி யசீலனுஞ் சௌராட்டிரத்து, வருராஜன் றனைநோக்கும் போதிலந்த மன்னனு மவ்வேதியனை நோக்கிச்சோறு, தருவாயென் றிரப்பவவனும் பித்தங் கொள் தராதிபனுக்குப்பின்னுந் தான்சோறிட்டு, வெருவாமலவன்சித் தமோகந்தீர்த்து மிகத்தெளிவித்தானினிது வியந்து வேந்தன். (௭0)

அந்தமகாத்து மாவானமுனியாலேதன் னருந்துயரத்தொடு மயக்கம னைத்து நீங்கி, முந்தவரித்திராந்தியின் முழுக்கினலே முழுதுந்தோஷ ந்தீர்ந்து சுத்தனுகி, வந்தமுன் போற்றனது நகரடைந்தானிந்த வகை பிரமாண் டபுராணந்தனிலே விட்டுணு, தந்ததுவாம் க்ஷேத்திர கண் டத்திலுத்த ரபாகச்சம்பகாரணியந் தனதுசீரே. (௭௧)

அறுபத்தைந்தாவதுவா, யுறுமத்தியாயமதி
னிறுதிக்கென்றே தெளிவு, பெறுமித்த ராதலமே. (௭௨)

அஞ்சாமத்தியாயம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - ௭௱௬௬.

## ௬-வது தோஷநீங்கின அத்தியாயம்.

சவுன கமுனிகேட்கின்றார்சூத ரேயத்தராதிபன்றான்
புவனந்தொழத்தன் னகரத்தை யெவ்வாறடைந்தான் புநுமையதே
அவனிதனிலே நன்றிகொன்ற லதுதிராதென்றுறக்கேட்டோம்
எவமிலரச சேகரனெவ்விதமாய்ப் பாவமிறலானுன். (௧)

நன்றேயெக்கி யசீலமுனி நிருபன் பாபநாசமுற
அன்றேபுரிந்த தெவ்வாறிங் கவையெல்லாநன்றாய் விரித்துக்
குன்றதுணைக்க வேண்டுமும்மைக் குறித்தே பணிகின்றே னெனலும்
பொன்றாத்தவத்துச் சூதபுரா ணிகருமினிது புகல்கின்றார். (௨)

வேறு.—புண்ணிய வழியாலே புகலன்னதாதாவாய்
நண்ணிய மறையோன் வாழ்நலனுறை தருசாலே
அண்ணலு மினிதேகி யரிதுற்றுதவமே செய்
விண்ணவ முனிதன்னை வேண்டுத லொடுகின்றான். (௩)

கண்டருமறையோனுங் காவலன் முகநோக்கி
மண்டுறு தயைசெய்து வாழ்த்துதலொடு சொல்வான்
பண்டிதர் புகழ்கோவே பாபமிலாயன்றே
எண்டருதுயரத்தை யேனடைகின்றாய்நீ. (௫)

நல்லவர்புகழுஞ்சௌ ராட்டிரதேசத்து
வல்லவன் வசுமானோர் மகனெனு மிவையெல்லாய்
இல்லது நிலைவேறு யெழில்குலைவுறுபுத்தி
அல்லது செயுமோக மதுவரலெதுவாலே. (௬)

இங்கெது பொருளாக வெய்தினை யிவையெல்லாம்
நன்கினி மொழியின்றே நலனுறு மினிதுன்பால்
சங்கைகொளாதென்று தகுமறையவனோதத்
துங்கமொடுறுகோமான் றுயராறுமனனாகி. (௭)

பெரியவர் குழுவாலும் பேசுதல் கொளலாலும்
அரிதுறுபிணிபோகி யவர்வயின் மொழிகின்றான்
விரிகலை மறையோய் நீவேண்டுதல் கொடுநீடென்
புரிபுகுதரலான போதுனதிடம் யானே. (௮)

சொல்லிய திலையென்று சொல்லியு மவமானம்
புல்லுதலது செய்தும் புரிநலனது கொன்றேன்
அல்லல்கொ டெல்லா மயர்வுற நினைவின்றி
மல்லல்செய்பொருளின்றி வளர்துணை யிலனானேன். (௯)

பிணிமிகு தலினேய்ந்து பித்தமுள்ளுறலாகி
அணிநகரதுநீங்கி யருவரை யொடுகாடு
நணுகின னெனைநீயே நலனுறு தயைசெய்து
தணிவறவருபாபந் தகைபுரி குதிதக்கோய். (௧௦)

என்றினிதுறவேண்டு மிறைவன துரைகேளா
நன்றித முறுசொல்லி னயவிரவையுநோக்கி
ஒன்றிய மிகுமன்பி னுத்தரமதுசொல்வான்
வென்றியினேயுன்வி வேகமதறிகிற்பான் (௧௧)

உன்வயின் வரல்செய்தே னன்றியுன்னுடையேம
மன்வினைகள் வான்யான் வந்தனனல்லேனல்
பொன்வயினசையில்லேன் புகுபொருள் பிறிதில்லை
என்வினை பொழுதெல்லா மிமையவர் வினைதானே. (௧௨)

பின்னரு முறுநோன்பே பெரியதோர் தனமாக
உன்னுதல் புரிகிற்பே ஞெருவனுேளர் பல்லோர்
நன்னயமறநீசெய் நவைசிறிதுணர் கில்லேன்
நின்னையும் வசைசொல்லி நேர்கில னெறிவல்லோய். (௰௨)

குழியிடை விழுதற்குக் கோருதல் புரிவானே
வழிதெரிவோன்வீழ மாறதுபுரிவானே
ஒழிவற முடிகிற்ப தொருபொழுதினுமாறு
திழிவது கொடுநின்று லெய்தினனிது காறும். (௰௩)

வேறு.

வேதசாஸ்திர புராணங்களுணர் மதிமேலோர்
ஆதலாகிய வந்தணர் மகியிலாவவரைப்
பூதலத்திடைத் திருத்துவர் பூசுரர்தமக்கே
தீதில்யாவு மதீனமென்றுணர் நெடுந்திறலோய். (௰௪)

இந்தவேதியர் தமையன்றித் தெய்வம் வேறில்லை
அந்தவேதிய ரெவரையுஞ் சபித்திடாதமரில்
முந்தமாதவ முடிவுறுஞ் சபித்திடின் முடியா
தெந்தநாளினு மெவளவோ பொறையவளவதே. (௰௫)

தவம்விசேஷித்துப் பின்னும்யான் சாற்றுவேன்றவத்தை
அவமிலாதியன் முனிவரரெவரையு மடித்தல்
எவமியற்றுதல் வசைசொலல் குரூரமாயிசைத்தல்
நவமதாநடை பிறழுதலவை நலநண்ணு. (௰௬)

முனிவனுனவ ஞெருவனைத்திருத்த முற்றுதலோ
நனியொவாது மற்றவனது தோஷத்தை நாடி
இனிதுசெவ்வை செய்குவனெனிலக்கணத்தினிலே
தனிமை சாறவங்குறைந்துப் திதனெனச் சார்வான். (௰௭)

ஆதலாற் சகலமுமுணர்முனி வரையண்மித்
தீதிலாதுலகைப்பரி பாலனஞ் செய்யுங்
கோதிலாதவன் யாவனுயினு மவன்குறித்த
நீதிசேர் சுகமடைவனப்படிக் கன்றிநின்போல். (௰௮)

பித்துக்கொண்டுறு துக்கத்தைப்பெரிதனுபவிப்போர்
இத்தராதலத்தில்லை யென்றெக்கிய சீலன்
உய்த்துரைத்திடக் கேட்டனனரசரி லொருவன்
கைத்தலங் களைக்குவித்துட னஞ்சலிகாட்டி. (௰௯)

தண்டுபோற்றரை விழுந்தெழுந்தடிக் கடிதாழ்ந்து
கொண்டுநீ யெனைப்புரந்தருள்வா யெனக்கூறி
மண்டுதோத்திரம் வழுத்தினன் வணங்கினன் மன்னன்
கண்டுமற்றது வேதியன் மறுமொழி கழறும். (உ௰)

அரசகேளினியுனது சங்கடத்தை யானகற்றி
விரைவிலின் புறுத்துவெனென தகத்தின் மேவினருக்
குரைசெய் துக்கமோர் காலத்து முற்றிடா தொடுங்கி
வரைசெயுங் குணத்துன் பிழைபொறுத்தனன் மற்றும். (உ௧)

பாவமானவை களினன்றி கொன்றவோர் பாவம்
போவதெவ்விதத்தினுமிலை புரவிமேதத்தால்
ஆவதாகிய சாந்திரா யணவிரதத்தால்
மெவல் செய்வதனு னன்றிகொன்றவன் விளங்கான். (உஉ)

ஆயினும்முனக் கினிநல்லபாவன மாகத்
தேய்வினன்மறை செப்புகின்றேன் சம்புத்தீவில்
வாயும்புண்ணியத் தலம்பல வுண்டவை வாழ்த்தற்
கேயுமேசுயம் புக்களாய்ச் சித்தரோ டிமையோர். (உ௩)

முனிவர்செய் பிரதிட்டையாய் முன்னியசெல்வம்
இனிதுநல்குபு பாவங்கள்யாவும் விட்டேகத்
தனிவிளங்குறும் பனிவரைமுதற் றகுஞ்சேது
புனிதகங்கைநர் மதைகவு தமிபுகல்சோணை. (உ௪)

கண்ணவேணியொண் சிந்துவெண்டா மரைக்கன்னி
தண்ணவேகவ திகருடை தாவுபினாகி
எண்ணுகாவிரி பொருநை நாபுரைவையை யென்னும்
வண்ணமாநதிக் கரைகளில் வைணவம் வாய்த்து. (உ௫)

நூற்றெட்டுப் பெருந்தலங்க ளுள்ளன வற்றினுன்மை
சாற்றக்கொண்டல்வண் ணனுக்கன்பு சார்ந்தது சான்றோர்
போற்றற்கொத்தது திருவரங்கம் புகழ்பொருந்தித்
தேற்றற்கன்னதி னுக்கினே யப்பெருந்திக்கில். (உ௬)

பொன்னித்தென்கரைக் குடந்தைக்குத் தெற்கெனப்புகல
மன்னித்தோன்றுவ திரண்டியோசனை வழிவாய்ப்பத்
துன்னிச்செம்ப காரணியந்தெக் கணத்துவாரகையென்
றுன்னிப்போற்றுறப் பழையதா மொருநகருண்டு. (உ௭)

அதனின்முன்ளெரு சற்பத்திலயனிலக் குமியால்
விதியுடன்கண்ண ஞகியபிரபு மேதக்கான்
முதிருமக்கினி பிருகிவர்முந்து மூவுகத்தும்
துதிசெயத்துலந் கினன்றுவா பரயுகத்தொலேவில். (உஅ)

அங்குக்கோப்பிர ளயமொடு கோபிலர்க்காக
நங்கைதேவகி புத்திரன் றிருமகனுதன்
தங்குலீலேமா னுஷத்தனு ராஜகோபால
இங்கிதத்துருக் கொண்டவ தரித்தனனென்ப. (உகூ)

உறுவரன்பினுக் காய்ப்பின்னு மூலகமேழேழும்
பெறுவதாகிய புண்ணிய நதியெலாம் பிறங்க
நெறிசெய்தாகிய வரித்திரநதியினன் னீரில்
அறிவனவ்வடி வத்துடனுடல் செய்தமர்ந்தான். (௩௰)

மஞ்சிள்குங்குமத் தணிசெய்கோபிக ளுடன்மருவி
எஞ்சலில்பிரமந் தெரிமுனிவரோத்தி
அஞ்சல்செய்திடத் தெக்கணத்துவனாயி லருளான்
விஞ்சுநீர்விளையாடலி னிறஞ்செம் பொன்மேவி. (௩க)

அரித்திரத்திருநதியென வெவர்க்கு மானந்தம்
தெரித்துநல்குத லாயிற்றுவிண்டு வின்றேகம்
பரித்துத்தீர்த்தங்கள் யாவையுஞ் சேர்ந்துபாவங்கள்
பிரித்துப்போக்குவ தாயிற்றுமூழ்கினோர் பேணி. (௩உ)

வேதந்தன்னைய பாத்திரத்தின் விலேப்படுத்தி
ஏதமாயினோர் நாத்திகர்தந்தைதா யிகழ்ந்தோர்
ஓதுறுங்குருவின் படுக்கையி லுகந்துற்றோர்
ஆதலாயினும் பாபங்களனைத்தும் விட்டகலும். (௩௩)

இவைக்கெலாமித்த ருத்துரோகம் பெரிதின்னும்
நவைக்குள்விஞ்சிய தேசெய்த நன்றியைநலிதல்
எவைக்கும்விஞ்சிய விவ்விருதோஷங்க ளினுக்கும்
செவைக்கு மாதவன்றீர்பரி காரத்தைச்செய்தான். (௩௪)

எப்படிக்கெனி லெண்கணனேமுத லிமையோர்
முப்பதோடொரு மூவர்க்குமுன் னிந்தமுளரி
வைப்பதாய்ப்பல மலரல ரித்திரமடுத்தான்
செப்பிற்றீர்ந்துறு பாவங்களெவருக்குந் தீர்க்கும். (௩௫)

என்றுநிச்சயிக் கப்பட்ட தத்தடத் தினிநீ
சென்றுமூழ்கிடிற் பரிசுத்தனாகி நின்றேயும்
நன்றுமுன்னெனப் பெறுதியின் னையவுன்னந்தன்
இன்றுமூழ்கினும் பெறுவனன் மகனையென் றிசைத்தான். (௫௬)

எனலுந்தன்றுயர் தீர்வதேயன்றிச் சேயில்லா
அனகமைந்தனும் புத்திரப்பேறடை வானே
புனலின்மூழ்கிலென் றுளங்கனி கொண்டுகோன்புகல்வான்
கனல்வினைப்பெரியோ யரித்திரா நதிகண்டு. (௫௭)

வேறு.

மூழ்கும்விதியை யெனக்குநன்றாய் மொழிதியதினான் மூழ்கினால்
மாழ்குபாவ மெவ்விதமாய் மாய்ந்துதீரு மெனமிகவும்
தாழ்வுதவிரா னப்புலம்புந் தரணிவேந்தன் றனைநோக்கி
வாழ்வுதருஞ்சீர்த் தயைவடிவா மறையோனிரங்கி வகுக்கின்றான். ()

வேந்தேயந்தத் தலத்திற்போய் விசேஷித்தந்த வரித்திரையில்
தோய்ந்துவேத வேதாந்தந் துணிந்தமறையோர் சுகதுக்கம்
சாய்ந்துமார்ச்ச ரியமின்றிச் சார்ந்தோர்க் குபகாரம்புரிந்து
நேர்ந்துதினமும் வசிக்கின்றார் நீபோனாலங் கவர்தாமே. (௫௯)

புராணத்துரைத்த படிபாபம் போகமூழ்கு விப்பார்செய்
திராணிக்குயர்ந்தோய் பின்னையும்வி சேஷித்துன் பாலன்பினால்
பிராணிக்கிதஞ்செய் துரைக்கின்றேன் பேசுமரித்தி ராநதிப்பூ
சுராணக்குவதி லடைந்துகைகால் சுத்திபுரிந்தா சமனியமும். (௬௰)

செய்துபவித்திரமுந் தரித்துத்தீராப் பாவங்களுந் தீர்ந்து
நைதல்கெடவேண் டித்துதித்து நாபிமுழுகும் படியாக
எய்துபுனலி னிடைநின்று நெடுமாலினையத் துறவெண்ணிப்
பொய்தீர்கண்ணன் பதாம்புயத்துப் பொடியாற்பரிசுத்தமும்பொருந்தி.

கோபகுலமங் கையர்குயக்குங் குமத்தாற் குழம்பிக்கோகனக
நாபன்பிரமவடிவனென நவில்கோபாலன் வரம்பெற்றுத்
தீபவதியாமரித்திரையே தெரியேன்பாபந் தெறுதல் செய்யென்
றேபல்வகைவேண் டிதல்புரித லியற்றிப்புனிதஞ் செயுந்தடத்தில். ()

முக்கான்முழுகிக் கரையேறி மொழிந்துதுதிகள் வணங்கினால்
அக்காலத்தே மனிதரெல்லா வாபத்துகளுந் தீர்ந்துய்வார்
மிக்காய்மெய்யே புகல்கின்றேன் விரைந்தின்றேபோய் மூழ்குதிநீ
தக்கானாகிப்பரிசுத்தஞ் சார்வாய்மூழ்க்காற் சாற்றினேன். (௬௩)

சாரத்துயர்ந்த சாரமிது தானென்றுயர் வேதியன்சாற்ற
வீரத்துயர்வேந் தனுங்கேட்டுத் தனக்குத்தூய்மை வரல்வேண்டிப்
போரத்தவத்தோன் மொழிப்படியே புரிதற்கியைந்தப் புனாதீர்ந்தோ
ன், வாரத்தருளாற் சம்பகப்பூ வனயாத்திரைக்கு வழிக்கொண்டான். ()

பலவாங்தேயங்களைப்பார்த்துப் பலகாடுகளுங் கடந்துபல
பலவாந்தலங்க ளுறநோக்கிப் பாலைவனம்பிற் படப்படர்ந்து
நலகாவேரிக் கரைக்குவந்து நவில்சக்கர தீர்த்தமுங்கண்டு
நலதாமந்த நெறியேசீர் நாட்சம்பகக்கா நண்ணினன். (சரு)

நண்ணியரித்தி ராநதியி னலஞ்சேர்கரைக்க ணலத்தோங்கி
வண்ணவகைப்பல் பறவைமிக மலிந்துபலவாம் விலங்குகளும்
எண்ணியிகலற் றுறத்தேங்கி யியலநறுஞ்செம் பகஞ்சோகம்
தண்ணனிழல்சால் புன்னையொண்பூத் தருபாதிரியா திகடழைத்து. ()

தாழைநறுமுல்லிகை முதலாமலரா னிறைந்துதகுங் குயில்கள்
வாழ்வினுைலியு ம்யிலாடு வனமுநான்கு வருணத்தோர்
சூழ்வினமைந்த வீடுகளின் றெடர்வோடெது ராஜனுக்கிருக்கக்
கீழ்செய்மறுகு தொறுஞ்சதுக்கங் கெழுமுசிறப்புங் கிளர்ந்ததுவே. ()

வேறு.

உடுமண்டலத்தி னடுவேவிளங் குற்றதிங்கள்
வடுவின்றிலங்கு செயல்போல நாப்பண் வயங்கப்
படுகின்றமணிக் கதிர்வீசுகோ பாலன்மேவும்
நெடுவிண்டொடர் கோபுரக்கோயிலு நீழல்செய்தே. (சஅ)

ஒளிர்செம்பகப் பூம்பொழில் சென்றுகண்டுற்றநேகம்
குளிரும்படிக ளுடன்வெண்பளிங்குக் குமானத்
தெளியும்புன லீர்ந்தடந்தேங்க லின்பஞ்செறிந்து
வளரும்படி கண்டதின்மூழ்க முன்வந்தெதிர்ந்தான். (சகூ)

மறையோன்புகன் மாண்புடன் மூழ்கியம் மன்னனன்றே
நிறைசால்புனித நெடுநீர்வினை யாவுநீக்கக்
குறைதீரமலந் தருராஜ கோபாலனைப் போய்த்
தறையோர்புகழப் பணிந்தான் பழஞ்சால்புகொண்டான். (நிய)

தினந்தோறு மன்பிற் றிசழ்ராஜகோபாலசேவை
மனந்தான்மகிழ்ந்து புனன்மூழ்கு நன்மாண்புதன்னல்
கனந்தாவுறமுன் னிலுமிக்கமெய்க் காந்திமேவித்
தனந்தானுறல் கேட்டனன்சோழதே சத்துவேந்தன. (நிக)

அங்குற் றிராஜர்க்கணி சேகரன்றன்னை நோக்கிப்
பொங்குற்றவற்குப் பலபூசைபொற் பப்புரிந்து
தங்குற்றிடவாழ் மனையும்பல தாசிதாசர்
நன்குற்றிடவுங் கலைபூண்பிற நல்கல்செய்து. (௫௨)

முகமன்பல செய்துறுஞ் சோழதேசத்தன் முன்பே
தகவன்பொடுதான் மகிழ்ந்தே சவுராட்டிரத்தின்
மகன்வந்துறத் தூதனையேவினன் வல்விரைந்து
புகமுந்துறு தூதரும்போயினர் போந்துகண்டார். (௫௩)

சவுராட்டிரச் சொர்னசிகாமணி தன்னையன்னான்
கவினேத்துபு தாழ்ந்தவன் றந்தையைக்கட்டுரைத்தார்
புவிபோற்றுறு வோயுன்பிதா புகழ்ச்சோழநாட்டில்
நவில்சீரரித் திராநதியாடுறு நன்மையாலும். (௫௪)

மலிபூம் பொழிற்சண்பகங் காண்டல்செய் மாண்பினாலும்
நலிசாட்டியந் தீர்ந்துதன் மாமனநன்குதேறிப்
பொலிதேசுடன் பூமண்டலாதிபனாகு பொற்போ
டொலிவேதியர்போற்று கோபாலனை யுன்னல் கொண்டான். ()

அதனாலினி நீயுமுன் றந்தையை யங்குவந்து
சுதனாகலிற் போற்றுதல் செய்யநின் சுற்றமோடு
கதநாறுதானைக் கணநான்குமெய் கற்றுவல்லோர்
இதமேவுதலுங் குழாங்கொண்டிட வெய்துமாதோ. (௫௬)

என்றோதுதல் கேட்டெழிற் கோமக னின்பவாரி
தன்றுபமோவத் தனிமூழ்கினன் றந்தைதன்னைச்
சென்றூர்வமோடுதனி காண்டல்செய் சிந்தைகொண்டு
நன்றோதிய தூதரைச்சால்புற நன்குசெய்தான். (௫௭)

அந்தப்புரம் பட்டணத்துச்சன மாடன் மான்றேர்
தந்தக்கரிமானடையாண் முதற்றூதர்சூழ
நந்தற்கருமா வினைவாங்கு நல்லோர்களோடு
முந்தப்பிட ரொட்டகத்திற் றனமொய்ப்பவேற்றி. (௫௮)

வழிக்கொண்டனன் மார்க்கத்திரண்டு மாதங்கழித்து
விழிக்கின்புறு செம்பகப்பூம் பொழின்மேவி நாளும்
செழித்தன்புடன் றெற்கிற்று வாரகை சென்று கண்டான்
பழிக்குப்புறந்தந்துறு தந்தைதன் பாதம் வீழ்ந்தே. (௫௯)

நோயின்றி விஞ்சுபெருந் தேசொடுநோக்குதற்குத்
தாயொனறு தந்தை தரும்பேரருடன்னிலுள்ளம்
மேயன்பின் மிக்கு மகிழ்வாயினன் வேந்தனுந்தன்
சேய்பின்பு வந்தமதியோர் களைத்தேர்ந்து கொண்டு. (சுO)

மார்பாரநன்கு மகனைத்தழீஇ யின்புமாண்டு
நேர்பூரணை நீண்டவனுள மாவாசை நேயம்
சார்பாயுறுபோது மஞ்சட் குளந்தன்னிலாடித்
தேர்பாநலதானமுஞ் செய்தனன் செவ்வியோர்க்கே. (சுக)

வேறு.—தனதுநகரிருந்து வரவழைத்துமிகு தனங்களை மெய்தழைக்கும் பார்ப்பார், மனது மகிழ்வுறப்பதினு யிரமிலக்கம் விராகனவண் வழங்கல் செய்தும், நினைவுபெறக்கோடி கன்னிகாதானம் பெரிதளித்து நெடியகோக்கள், இனிது சகத்திரதானம் புரிந்து சொன்னதான மெண்ணிலா மலிந்தான். (சுஉ)

கண்ணனது தீர்த்தத்து மிகமகிழ்ந்து நியமமுடன் கவினமூழ்கி
நண்ணுபதினாறு மகாதானமினி தியற்றினன் பின்னவதீர்த்தத்தும்
ஒண்ணியமத்துடன்முழுகி நவமணிகள் விராகனென்ப திலக்கமீந்து
புண்ணியனுங் கண்ணனுக்கே யர்ப்பணமென்றேதியம் பொற்பூமின்
னுட்கே. (சுங)

நாயகனாகியராஜ கோபாலசாமிக்கு நயந்தநேகம்
ஆயபிராகார மண்டபங்கோபு ரங்கண் முதலாய வெல்லாம்
ஏயவிசேஷித்தியற்றிச் சுவாமிக்கங் குற்சவமுமினிதுசெய்தான் [தான்.
தூயகவின் பெறுதிருத்தேரொன்று செய்து சுவாமிக்குத் துலங்கத்தந்

ராஜசேகரன் மகனுந்தனக்கு மகனுண்டாக நயந்துவேண்டித்
தேசுறுகோபாலனடி சேவித்தான் ராஜசேகரனுந்தீதில்
பூசுரன்சொன்னதை நினைத்து மகனைநோக்கிப்புகன்றான்புனிதமஞ்சள்
வாசநறுந்தடம்படித லாலுமெழிற் கோபாலன் மாட்சியாலும். (சுரு)

உனக்குமக னுறுவனென வெக்கியசீலன் புகன்றானுகுன்றதென்
றினிக்கமகனுங்கேட்டு மஞ்சள் வளந்தடத்து விதிக்கிசைய மூழ்கி
மனத்திலெழுத்திராறுஞ் செபித்துதவுங் கண்ணனடி மலரிலன்பு
தனித்துவருந் தெளிவொடுகோ பாலனைத்தானே யிதையந்தனிலே
யெண்ணி. (சுசா)

வேறு.—தெக்கணத்து வாரகைத்தலத் தரித்திராநதிப்
பக்கநீடு சம்பகப்பசும் பொழிற்குளே விராய்
மிக்ககற் பகத்தருச்செய்மேவு நீழலடியிலே
புக்கசூழ் விடங்களும் பொருந்துகோபுரங்களும். (சுஎ)

பொன்மயத்த மண்டபங்களும் பொருந்துபும்மணா
நன்மயத்து நீள்விமானநணுகு சூழ்வுளே செறிந்
தென்மயத்தவுந்த காமலெழில் செய்பங்கயா சனத்
தின்மயத்திலங்கு தோளிரண்டிரண்டு சேரவே. (௬௮)

இந்திரன்றனீல மொப்பவெழில் செய்மேனியுஞ் செழுஞ்
சந்தமேவு மணிகளோடு சங்குசக்கரங்கதைக்
கந்தமாக வலதுகையி லபயமுங் கொடும்பொனு
லுந்துசோதி முடிவிளங்க வொளிர்பொனேடு பூமியும். (௬௯)

சேரநின் றிரண்டு பால்செறிந்து சேவைசெய்பவும்
ஆரநின்ற வாசுதேவ னையுமவற்குமுன்னமே
நேர்நின்ற கோளரிக்குநிகர நீடுமாதனம்
சாரமேவி யம்பொனுடை தங்குகோலவேடமும். (௭௰)

நறியமாலையினியசந்த நானநாறுகுங்குமம்
செறியமேவு மணிகளுஞ் சிறப்பமூன்று வளைவினல்
நெறிசெய் சுந்தரங்குலாவு நேயரூபனுகியும்
பொறிசெயாவி கட்குளாவிபோலு நித்தனுகியும். (௭௧)

வலதுகாலை யொப்பவைத்து மற்றவோரிடத்தகால்
இலகுகொஞ்சம் வளைவதா யியைத்துநாறு பங்கயம்
குலவுநாபனுகியுங் குன்றந்துழுத சோதியால்
மலரின்மேவு மங்கைதங்கு மார்புடன் பொருந்தியும். (௭௨)

கமலமெல்லிதழ்க் குறழ்ந்தகாதிலே விளங்குசீர்
அமலமாகுண்மலர்களா லலங்கரிக்கலாகியும்
நிமலமேவு புன்சிரிப்பு நிலவுசீரனுகியும்
விமலமாரரயுதருக்கு விஞ்சுகாமர் மேவியும். (௭௩)

வேறு.

முறைசாலுருக்கு மணிசத்தியபாமை முதலான வெட்டுமெட்டவர்
நிறைவாக வுஞ்சொல்பதினுறுகூடி நிகழாயிரந்தொ றுவமா
நறைவீசுகின்ற குழலார்மணந்த நலனுயுயர்ந்தபரனுய்த்
துறைதேறுதேவ ரசுராதியோர்க டொழுசேவடிச்செவியனுய். (௭௪)

துகிர்போலிலங்கு விரலாழிசெய்ய சுடர்மாமணிப் பரிபுரம்
நகழாமையொப்பு புறமெல்லடிக் கணைக்கானயஞ் செயும்வரால்
நெகிழ்வாகி மூத்துவரு சிப்பிபோல நிகர்சில்லு வாழைநிகரா
மிகவூருபொன்னினுடை சூழ்நடுக்கண் மிளிர்நூலலங்கல்விரவா. ()

ஒருநான் முகற்குவரு நாபிநாறவுதரத்தநேசம் விதிசால்
கருவாக நல்லமறுமேவலாகு கடிமாலே கமலவமணி
உருமேவு முத்தினொளிமாலே நக்கவுலமேவுகின்ற விருதோள்
அருள்கூடலான வதனஞ்செவந்தவதரம் பொனுசியணியும். (எசு)

அப்போதலர்ந்த செந்தாமரைக்க ணணிநெற்றி யிட்டதிலகம்
நெய்ப்பார் சுருட்டைமயிர் மேலொளிர்ந்து நிமிர்மாமணிப் பொன்மகு [டம்
ஒப்பானதற்ற மணிகுண்டலங்களுறுபாத மாதிமுடியி
றெப்போது மேதும் விலையின்றியிட்ட வெழிலார் கலன்களிலக. ()

சங்காழியம்பு யங்கும்ப மங்குசம் வச்சிரந்து வசமே
நன்காதிரேகை மிளிர்பாத சேவைநல மேவுபாமை யொருதோள்
தங்காதரத்து மலர்போலிடக்கைதகுசீர் வலக்கையுறுசீர்
பொங்கார் பொலம்பிரம்பாய வீணைபுரிநார தாதிமுனிவோர். (எஅ)

வேறு.—இராப்பகல் வணங்கலாகியெழிற் சம்பகப்பூஞ்சோலை
விராய்ச்சஞ்சரித்துச் சந்தோஷத்து நன்மனமுமேவிப்
பராய்த்தொழுவாரை நன்குபாலனம் புரிவானுகிக்
கராய்ச்சன காதியோகி களும்புகழ்வுறுவோனுகி. (எகூ)

அமர்ந்திந்த விதமாய் வேண்டலாகிய வபீஷ்டமெல்லாம்
சுமந்துற வருள்செய்தோங்குஞ் சுந்தரராஜகோபா
லமன்றனைத்தெளிந்த நன்மாமனத்தன்பு வாய்ப்பவாய்ந்தோன்
சுமந்துறுசேடன் மேல்வாழ் தொடக்கத்தும் புறத்துந்தானே. ()

வேண்டிய வெல்லாம் பெற்றுவெறிது தோட்மும் விட்டேக
யாண்டினும் விளங்குவான் மற்றவனுக்கு வேண்டலீண்ட
நீண்டருள் புரியுங்கண்ண னினைத்துள மகிழ்வானின்றும்
காண்டல் செய்யெனக்குக் கோபாலனைச் சிந்தைகலந்தகாலே. ()

நன்மனந்தெளிந்தானந்த நலமுறுகின்றதந்த
நின்மலனரைாஜ சேகரநிருபன்றன்னைத்
தன்னியனுக வெண்ணித்தனக்கு வேண்டியவெல்லாங்கை
மன்னிய தென்றுன் சொர்னசிகாமணி மதித்தல் செய்தான். ()

தனதுதாய் தந்தையெண்ணிச் சாற்றிய தியற்றனல்ல
வினையதென் றெண்ணிக்கோயின் மேவித்தண்ணளிக்கோபாலன்
முனைகொள் சந்நிதியிற் சென்று முன்புபோலன்பு வாய்த்துத்
தனையன்வேண்டிக் கோபாலன் றன்னையின்பொடு சேவித்து. ()

மேவியபகவானுக்கு மிகுந்தயையாக வேண்டி
ஆயவோரிடத்திற்பேசா தமர்ந்தன னவனெவ்வாறு
சேயினைவேண்டி யெண்ணிச் சிந்தனைசெய் துற்றானே
ஆயவப்படியேபால னயவன் மடியில் வந்தான். (அச)

வந்துசோபாலன்வேண்டு மதலையாய் மடிமீதெய்த
அந்தவேந்தனுமப்போதி லலர்சுருள் கேசந்தொங்க
விந்தையா யசையுமுத்து மாலைகுண்டலம் வில்வீச
நந்தலில் செவ்வாய்ப்பால நலங்கொள் கண்ணனைமுன்கண்டான்.

மனங்களி கூர்ந்துவேண்டி வழுத்தினன் றேவதேவன்
கனஞ்செய்பூ மகட்குக்காந்தன் கருதுநன் முராரிலோக
இனங்களுக் கெல்லாநாத னிணையடி வணக்கஞ்செய்வோர்
புனைந்தவோ ரார்த்திதீர்க்கும் புகழிளங் கண்ணனியே. (அரு)

ஆதலாலருள் செய்தென்னை யருமகனுடைய னாகப்
பூதலந்தனிலே செய்து புரந்திட வேண்டுமென்று
திதுதிராசனீன்ற சேய்பிரார்த் திக்கலாகிக்
காதலாய்த்.தேவதேவ னாகியகமலக் கண்ணன், (அஎ)

மகிழ்ந்தவன் றனக்குநல்ல வரந்தனைக் கொடுத்தான்வேந்தே
புகழ்ந்தசீ ருனக்குநல்ல புத்திரனுளனா கிற்பான்
தகுந்தசீர்க் குழந்தையான சந்தான கண்ணனென்ன
உகந்தவிவ் வடிவையாவ னொருவன்றன் மடியில்வைத்து. (அஅ)

எனதுமெய்ஞ் ஞானநல்கு மெழில்செய் வைபவத்தைநோக்கி
மனதெவன் மகிழ்கின்றானோ வவன்மக னிலனேல்வாய்ந்து
தனதருளாலேநல்ல தனயனைப் பெறுவான் செம்பொன்
இனமிகப் பெறுவானில்லை யெனிலிந்த லோகத்தம்மா. (அகூ)

பெரியவின் பத்தைப்பெற்றுப் பின்னுமுத் தமலோகத்தில்
துரிசற விளங்குவானென் றவனுறு தூயோர்போற்ற
அரிமறை வானபின்ன ரவனரு ளாலேசேயை
உரிமையிலீன்றான் ராஜசேகர னுதவ வுற்றோன். (கூ௰)

பின்னர்மந் திரியினோடு பிள்ளையே முதலேனோரும்
உன்னருந் துயரம்யாவு முகுத்தவண் வருட்மூன்று
தன்னள வுறைந்துகண்ணன் றனக்குறு கோயிலெல்லாம்
பொன்னலங் காரமாகப் புனைந்தனன் பின்புமாதோ. (கூக)

அந்தவேங் தனுஞ்சோணுட்டோ னனுமதி பெற்றுளுகி
முந்துதன் மனைவிபிள்ளை முதற்பரி வாரம்யாவும்
சிந்தனை மகிழமூதூர் சேர்ந்தினிதிருந்தான் லோக
வந்தனைக் கிசைந்தமஞ்சள் வளநதி மகிமையாலே. (௬௨)

ஆதலான் மகிமைமாண்ட வரித்திரா நதியின்சீர்மை
தீதிலா துரைப்போர்யாரித் திறந்தரு கோபாலன்றன்
கோநில் வைபவமுந்தீர்த்தங் கொளுந்துவை பவமுமூதூர்
ஏதில்வை பவமுநன்றி யிகந்ததுக் கின்பச்சூழ்வும். (௬௩)

வேறு.

செம்பக வனத்தின்வை பவமுஞ் செம்பகப்
பைம்பொனூர் மலரின்வை பவமும் பார்த்திடில்
இம்பரோயன்றியெம் பரினுமிக்கதாய்
நம்பநீளதிசய நல்குகின்றதே. (௬௪)

இன்னபுண்ணியகதை யெவர்களாயினும்
நன்னராய் வினவினு நயந்து கற்கினும்
துன்னுதோடங்கள் யாவையுந் தொலைத்துமேல்
பொன்னின் மார்பன்பதம் புகுந்துவாழ்வரோ. (௬௫)

செம்பகாரணியத்தி லரித்திராநதி
நம்பிமூழ்கியநல ராஜசேகரன்
அன்புறுநன்றியை யயர்ந்துதீர்ந்துறு
பைம்பொருளன்பொடு பரிந்துகேட்பினும். (௬௬)

கேட்டல்செய் விப்பினுங் கேடில்பூமகள்
வேட்டவன்றிருவடி மேவலாகுவன்
நீட்டுதுட்டப்பவ நேர்ந்தபோதினும்
கோட்டமில்சம்பக வல்லிகொண்கனே. (௬௭)

ராசகோபாலனை நயந்துதோத்திர
நேசமேபுரிந்தரித் திரத்துநீணதி
பேசரும்பாபங்கள் பெயர்ந்துதீர்வுற
வாசமார்முழுக்கினல் வாய்ந்தமுத்தனய். (௬௮)

இந்தலோகத்திலெல் லாத்தனங்களும்
முந்துதானியங்களு நிறைந்துமொய்ப்புற
எந்தநாளினுஞ்சுகித் தின்பமேவுவை
குந்தமேவுறுவனோர் குறைவுமின்றியே. (௬௯)

வேறு.—இப்படிக்குப்பிரமாண்ட புராணத்தில் விட்டுணு க்ஷேத்திரக ண்டத்தில், செப்பிய வுத்தரபாகத் திற்செம்பகாரணியத் தினதுசீர்த்தி வைப்பதறுபத்தாறு கியவத்தியாயமுடி வென்று வாய்ப்ப ஒப்புதல்செய் திடவேண்டுஞ் சீனிவாசப்பெயர்கொண்டோங்குமாலே.

ஆறுவது அத்தியாயம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - ௮௱௬௬.

## எ-வது மந்திரோபதேச அத்தியாயம்.

வினவுசவுனகர் சொல்லுகின்றா ரோய்சூதரோ மிகவுநன்று, புனிதமிக லாகியசம் பகப்பொழிலின் மான்மியமிப் புவனிபோற்ற, நனிவிளங்கு சம்பகப்பூம் பொழின்மகிமை மந்திரோத்பத்திநன்மை, இனிதுவினவு தல் வேண்டுமென்றாசை பெருகுகின்ற தெனக்கும்யார்க்கும். (க)

ஆகலாலெனது ஜன்மசித்திக்காய்த் தத்துவத்தை யடைவேகூறி, மேக நிறநெடுமால்பத் தவதாரங் களிலுமருண் மேவுகண்ணன், பாகனவற்பு தசரித்தி ரத்துடனே பத்தவற்சலத்துப் பாங்கு, சேகறுபுண்ணிய மா னபுகழ்கூட்ப் புராதனனாய்த்திகழ்வோனாகி. (உ)

பத்தரொப்படிப் பிரார்த்திக்கின்றாரோ வவர்தம் பத்திதன்னால், உத்தம லக்குமிபதியா கியபகவான்பத்த ரக்ஷணத்தையுன்னிச், சுத்தமுறுதீ க்ஷிதனா குதலாலே யப்படிக்கே துலங்கத்தோன்றி, அத்தனெனும் பத் தருக்குத் திருத்திசெய்கின்றான் மற்றை யவதாரத்தில். (ங)

ஒவ்வொருகாரணநிமித்த மாவிர்ப்ப விக்கின்றா னுளதேயாதல், செவ்வி யவக்கண்ணனுக்குச் சிறந்துளதா மந்திரத்தைத் தெரித்தல்வேண்டும் இவ்விதமென் றினிவிரிவா யென்றவுடன்சூதமுனி யிசைக்கலுற்றார் அவ்வளவோவெவ்வளவு மளக்கவொண்ணாத் தேஜஸுடனமர்ந்த கண் ணன். (ச)

சரித்திரமற்புதமே மற்றவனைநினைத்தளவே யித்தராதலத்தும், விரித்து ளவெவ்வுலகத்தும் புண்ணியவான் மிகச்சுகிக் கின்றானன்றேசீர், தெ ரிக்ககில்லா தேமிகவும் பாபிஷ்டனாயிருந்தாலுஞ் சீர்க்கண்ணன், வரித் தபத்தியான்முத்த னாகின்றான் கண்ணனுக்கே மகிழ்வதாக (ரு)

எக்காலத்தினு மியன்ற மந்திரமேயற்புதமா யிருக்கலுற்ற, துக்கானசவு னகரோ துவாதசாக்ஷர மென்றோன் றுண்டுதேசு, மிக்காதித்தியரீரா று ளர்போல வோர்மறையாய் விளங்குகின்ற, தைக்காசி னிக்கணீனைத் த ளவேயவ்வரிகாண லாகின்றானே. (சு)

ஐம்பதக்கரங் கணடுவினிலே யற்புதமாக வக்கரங்கள்
நம்புசிலசிலவங்கங் கேவிஸ்தாரங்க ளாகவு நன்றாகி
இன்பமிகுசுரங்க ளுடன்கூடியு மேருறுபெரிய முத்துமாலைக்
கும்பனடுவினில் வயிரங்களைப்போல விளங்குகின்ற குரவனோத்த. (எ)

சவுனகரோ நீர்மிகவும் பாக்கியவானுலகுக்குத் தக்கீரானீர்
மவுனவுமக்குத் தவத்தின்பல சித்திக்காகமந் திரத்தினல்ல
கவனமிகும் பத்தியுண்டா யிற்றீராறெழுத்துவித்தை கருதுபிச
நவவுருவாகியபிறப்பு மின்னமுள்ள ரகசியங்க ளையுநன்றாக. (அ)

கண்ணனுக்கன் புறுபத்தனுமுமக்குச் சொல்லுகின்றே னென்றுகாதல்
நண்ணுசவுநகருக்குச் சூதர்துவாதசாக்ஷர மந்திரமு நன்றே, எண்ணு
றுமெட் டெழுத்துமந் திரத்துவைபவமும் விளங்கவினிதுசொன்னார்
கண்ணியவிப் பன்னிரண்டக் கரவடிவாய்ப்புகும் வாசுதேவமந்திரம். ()

நாலுவேதங்களிலும் ரகசியங்களிலு மதிசோபனமாய் நன்கு
சாலவிளங்குகின்றதிந்த மந்திரவுள்ளந் தனிலே வாசுதேவன்
ஏலவெந்தக் காலத்தும் வசிக்கின்றானிந்த மந்திரத்தையாவன்
ஞாலமிசைக் குருவுரைத்த படிசிரத்தை யுடனவில்கிறானேவன்னன்.

நன்மார்க்கமாயிருந்து வைகுந்தந் தனையடைந்து நாளும்வாழ்வான்
சொன்மாணித் தலத்திருடி கேசனாகியபகவான் றூயதானே
சன்மார்க்கமுளபிரமன் றனக்கிந்த வித்தைநலந் தன்னைச்சொன்னான்
முன்மாணப் பிரமனுமவ் வித்தையைநாரதனுக்கு முன்னச்சொன்னான்.

நாரதனும்பிருகுவுக்குச் சொன்னபின்பு பிரயாகக் கரையினண்ணிச்
சார்தருமேகம்போலத் தங்குகண்ணன் றெரிசனத்திற் றக்கவாவல்
கூர்தருகோபிலருக்குங் கோப்பிரளயருக்கு மன்புகோப்பச்சொன்னான்
சேர்தந்தவிருவரு மம்மந்திரத்தைப் பெற்றுமகிழ் திகழ்ந்துளாரோ. ()

எசுர்வேதத்திலும் வேதாரம்பத்திலும் விளங்குமெட் டெழுத்தும்
நிசுவாசத் தீராறாகியவெழுத்துந் தியானித்து நெடிதுசொன்னார்
வசுதேவன்மகன் வடிவாமந்திரத்தைப் பிரமன்முத லானவானோர்
விசுவாசத்துடன் செபித்துச்சித்தி பெற்றாரித்தலத்தின் மேவிமேனாள்.

தத்துவங்களறுநான்கு தனக்குமிந்த விரண்டுமந் திரந்தானாகி
ஒத்தவிந்தவிரண்டு மந்திரத்தினதுமான் மியத்தை யொருவரோனும்
இத்தரையிற் றெரிந்திலரிவ் விடத்திலெவனனுக்கிரக மெய்திறனோ
சுத்தமுட்டையமின்றி யவனேநன்கறிவான்யான் சொல்லக்கேண்மின். ()

வேறு.

பிரகலாதனத்திரி வசிட்டன் சுகன்பெருகா
தரநன்னாரதனிவர் பகவான் றனதருளால்
ஒருவிலாத வில்வைபவந்தனை யறிந்துற்றார்
சருவில் செம்பகப்பொழிலெனும் புண்ணியத்தலத்தில் (௰௫)

இமையிம் மந்திரங்களைச் சபிக்கின்ற பாகவதோத்
தமரிகத்திலும் பரத்திலும் பலசவுபாக்கியம்
அமைவுறக்கொடு புத்திரபவுத்திராவல்
கமைவுறச்சுகித்தினி தநேகம் பகல்கழித்து (௰௬)

ஆகந்திர்வுறு நாள்விண்டு சாயுச்சியத்தை
யோகமாகுவ ரிந்தமந்திரங்களை யோர்ந்து
போகிலாயிரம் விதிப்படியங்கங்கள் பொருந்த
வேகவின்கொளச் செபித்து மந்திரமுடிவினிலே. (௰௭)

மிக்கபூசுரர்தமக்குப் போசனஞ் செய்து வித்தால்
மக்கள்பெண்டிர்க ளரசர்க்ள் வானவர் வசியம்
தக்கதாயுற விண்டுசாயுச் சியந்தன்னை
ஒக்கவாய்குவர் ஓரெழுகோடி மந்திரத்தில் (௰௮)

இவ்விரண்டு மந்திரமுமே பவித்திரமென்ப
செவ்வியோர் திருவரங்கத் தெட்டெழுத்துமேசிறக்க
ஒவ்வுதெக்கணத்துவாரகை யொருபன்னிரண்டு
வவ்வுமக்கரம் வேண்டுசித்திகளெலாம் வழங்கும். (௰௯)

இதனுக்கொத்த வோர்தலமில்லை மந்திரமில்லை
உதவிற்றென்னிலும் விண்டுவுக்குகப் புறுதலங்கள்
சதமுமெட்டு மென்றுளவவையாவு முந்தமக்கு
விதமிக்கார் பிரயத்தினத்துடன் விளம்பியவே. (௨௰)

செப்புறுஞ் செகநாதமே யாதியாய்ச்சீர்சான்
றெப்புறுந் நரசிங்கமென்று றுதலமளவாய்த்
தப்பிலாதொரு நூற்றெட்டென்றுகிய தலங்கள்
ஒப்புறச்சொலில் விண்டுசாயுச்சிய முளதாம். (௨௧)

அல்லவோ கிழக்காகிய கடற்கரையதனில்
புல்லுறுஞ் சகநாதமென்றொரு பெரும்புனிதம்
சொல்லலாகிய தலத்தினிற் றொடங்கிய சனனம்
நல்லதாகிய வாசமற்று குறுநாசம். (௨௨)

கிடைத்ததேன் மனிதருக்கொரு கேடிலாவுலகம்
அடுத்ததென்பதற் கையமெவ்வளவு மின்றுமால்
கடுத்தப்பாண நன்னதியது தென்கரைக்கண்ணே
தொடுத்தமந்திரோத் தரணத்துக்காக முன்றேன்றி. (உங)

வாகுசேர் திருக்கூர்மமே வராகமே வருசீர்
காகுளம் மெனப்பெயர் பெறுந்தலங்களுங்கருத
யோகுசாலு மெய்ஞ்ஞான முண்டாகுதற்குகந்த
தாகுகின்ற லோலாத்திரித்தலமு மார்ந்துளவே. (உச)

வேறு.—வனமாலா புரமென்றும் வைகுண்ட கிரியென்று மருவியப்
இனமான நந்திபுரமென்று மப்பாற்றிருவரங்க நகரமென்றும் [பால்
வினைதீர்த்து விளங்குசர்ப்ப நகரியென்று புண்ணியந்தான்மேவலாயும்
நினைவாகவதற்கப்பா லனந்தபுரமுங் கனகமிகுசீர்க்குன்றும். (உரு)

உயர்கோவர்த்தநகிரியு மகோபிலமும் வதரிவன மும்விளங்கும்
பெயர்வில்த்தி கிரியெனவும் பிரமனுக்காய் வரதராஜனென்று பேர்கொண், டயர்வற நின்றிலகுகின்றான் புண்ணியச்சேடாசலம் வேங்கடாத்திரியென்றும், செயலுணர்வோர் புகழுகின்ற திருமலையும் விடலரங்கனென்றசீரான். (உசா)

வளர்பாண்டரகிரியொடு கருடகிரியுந் தோத்தாத்திரியும்வாய்ப்ப
ஒளிர்மங்களாத்திரியுஞ் செம்பகமாவன முடன்சுவேத வெற்பும்
குளிர்நமஸ்காரகிரி யிடபாத்திரி வாருணாத்திரி ராமாத்திரிகோதில்
மிளிர்திருவ ரங்கவனம்பிரமோதபுரங் ககனநகரமேவும். (உஎ)

சித்திதரும் பாதாளநகரம் பூருவபுரஞ் சேர்பத்தி சாரம்
ஒத்தபது மநாபமக்கி னிபுரஞ்சுவேதத்திவீபமோங்கு
வித்தசாரணியபுரம் காரணியம் வடதலமென்றுரைப்பர் மேலோர்
பத்துதெக்ஷிணகாசிகஜ தலந்தர்ப்ப சயனமெனப் பன்னலோடு. (உஅ)

பாற்கடல்பூதத்தான மேகபுரம்புனிதமிகும் பத்தசாக்ஷி
மேற்கனந்த சயனமுடனாதிகேசவ நாதமிளிர் குடந்தை
மாற்குகந்தவயோத்தி பிரயாகமமாயாபுரி வண்டுவரைமன்னு
வோர்க்கவந்தியிதையதலஞ்சீர் கேயாபுரியெனவு மோங்குமாதோ. ()

கெங்காசாகரசங்கஞ் சக்கர தீர்த்தந்துளசி புரங்கேடில்சீர்
நன்கான கீர்த்தநாபுரம் பிரபஞ்சநபுரமே நந்திக்கிராமம்
மங்காததருமபுரம் மணிக்கூடம் வியாக்கிரபுரம் வளருங்கண்ணன்
சிங்காரபுர நந்திபுரங் கோஷ்டிபுரங்காஞ்சி சித்திரகூடம். (௩௰)

தஞ்சைநகர்நைமிசம் வாரணபுரம் வராசிரமந்தயங்குகீர்த்தி
விஞ்சுமரிக்ஷேத்திரங் குருக்ஷேத்திரங் கோபவதிபுரஞ்சீர்க்கண்ணம்
அஞ்சலென வவ்விடத்திற் சுவேதவராகம் விளங்குமணி சீர்முட்டந்
துஞ்சாத்துவனா குருகையங்குலியபுரம கோயிலஞ் சூழ்ந்தேத்த.(௩௧)

நரசிங்கசுவாமியா லதிகபுண்ணியத்தலமாய் நன்குசாலும்
பரவுபுண்ணி யவிர்த்திகரமான தக்ஷிணத்துவனாப் பதியிலுந்தான்
விரவுநரசிங்கம் விளங்குங்கெடிகா சலமுமதின் மேல் பால்வாரிக்
கரையுறுகோகர்ன தேசத்திருபான் றலமுமிகக்கவினுமாதோ. (௩௨)

இப்படிநூற்றெட்டு விண்டுதலம் விளங்குகின்றன மற்றிவற்றையெண்
ணிச், செப்புதலுங் காணுதலுமெல்லோர்க்கும் பாவபரிகாரஞ்செய்
யும், அப்பிடை மூழ்குறுபோதும் வெடிபோது மரிபூசையாற்றும்போ
தும், ஒப்பிய வித்தலங்களின் மான்மியங்கற்கி லுத்தமன் சாயுச்சியஞ்
சேர்வான். (௩௩)

அவற்றின்முதலாவது தென்றிருவரங்கந் தென்றுவரை யாமென்றேமு
ன், நவிற்றியதாகலிற் சர்வபிரயத்தினத்தாலு நல்லோர்வாழ்த்தும்
எவற்றின்மிகுந்தென்றுவரையினிற் பன்னிரண்டெழுத்துமெட்டெழு
த்து, கவற்றலகற்றுந்திருவ ரங்கத்துஞ்செபித்திடுவர் கற்றுவல்லோர்.

ஆகையாற் சவுனகரேசம்பகமாவனத்தரித் திராநதிக்கண்
வாகுபெறவசித்துநித்த நூற்றெட்டுத்தரஞ்செபித்தால் வாராதின்மை
போகமுடன் சம்பத்தெல்லாமையமில்லாமற் பொருந்துமிவ்வா [யும்.
றேகவின்கொள்கோபாலனிடத்தி லன்புசெயுமவனுக்கெழில்கொள்சே

வறிஞனுக்குமிகுபொருளு மூடனுக்குவித்தையும் வாய்பேசானுக்குச்
செறிவுனாயுங் கன்னிகைக்குச் சிறந்தபுருடனு மலடிசிறக்கச்சேயும்
பெறுவர்நிச்சயம்பாதியாது காமங்குறித்துப்பெருநாடோறும்
அறிவுதருபன்னிரண்டக் கரஞ்சபிக்கின்முனேவங்கதெலாமாகும். ()

கோதில்சம்பகாரணிய நாயகனாகிய ராஜகோபாலன்செம்
போதடியையவணங்கினர்க்கெல்லாக் காமமுந்தருவான் பொருந்துபத்தி
மேதகநிராசை கொண்டுசெபிப்பானே லவன்வீடு மேவச்செய்வான்
தீதிலதிதிபூசை செய்யானெகாதசியு பவாஸமில்லான்றிருமாற்கொவ்
வான். (௩௭)

அக்கினிஹோத்திரமில்லா வேதியன் செம்பகாரணிய வாசத்தாலே
மிக்கவந்தத்தோஷமெல்லாம் விட்லாவான்றனித்தனி செம்பகக்காமே
தக்கபத்தி யொருநாளுமிலாதவற்கு மூன்றுமாசந் தான்றங்கில் [வும்
ஒக்கநல்ல கண்ணன்பாலன்புண்டா மஞ்சணதியுறுதலாலும். (௩௮)

ராஜகோபாலன் சேவையினாலும் பக்ஷத்துள்ளேனு நன்றோர்
மாசத்துள்ளேனு மவன்யோகியாகின்றான் செம்பகவான்சோலை
நேசமிகும் பொற்கமல வல்லிநாயகனை யன்புநிறையக்கொண்டு
வாசநறுஞ் சம்பகம்பாதிரி மகிழசோகுபலாசுபாரிஜாதம். (௩௯)

ஆதியகன்மலராலுஞ் செங்கழுநீர்தாமரைப் பூவணிவார்முல்லை
சோதில்சிறுசண்பகஞ் சாதிமலிகையே முதலியபூக்குழாங்களாலும்
நீதியுடனலங்கரித்துச் சேவிப்பார் தம்மையவனேசஞ் செய்து
தீதில்பலகாமமு நல்குவனன்றேசனகர் முதற்றெரிந்த யோகர். (௪௰)

கபிலர்முதலிய முனிவர் பாலகில்லியாதி முனிக்கணங்கள் கீர்த்தி
நிபிடனொனுஞ் சனகர்முதலிய வேந்தரெங்ஙு னெங்ஙனிகழ் சாருப்பிய
அபினமுத்தி யடைந்தனரோ வங்ஙனடை வாரிங்ஙனன நல்லோர்
தபுதலில்லா தாயிரஞ்சன்மாந்தரங்களின்றபசு தகுந்தியானம். (௪௧)

அரித்திரமாநதி முழுக்கால் வினைதீர்ந்து சுகப்படுவாரவண் பிறத்தல்
மரித்தல் வசித்திடுமுன்செய் புண்ணியத்தான் மனிதருக்குவாய்ப்பதாகும், தெரித்தசெம்பகப் பொழிலில் வசித்திடவன் புண்டாகிற்றேவரான, விரித்தமறை வேதியராம் யோகியராய்ப் புண்ணியத்தின் மேன்மேலாவார். (௪௨)

கோபாலன் றனைவணங்க நினைத்தவர்க்குப் பிறப்பினிமேற் கூட்டில்லை
மாபாரிவித்தலத்தி லிலக்காதிபதியிலக்கம் வழங்கினாலும்
காபாலியொரு பிடிசோறளித்தாலு மிடியனொரு காசீந்தாலும்
ஈபாவப்பலன் சரியாமெதாலுந் தன்வயிறு மாத்திரம் வளர்த்து. (௪௩)

சமாதிகளாற் பாபங்களைத்தீர்த்துப் பின்பு கண்ணன்றன்னன்பாக்கும்
அமாருகண்ணன் பத்தியுடன் கூடினவருடன் கூடுமவரு நல்லோர்
உமாகியந்தச் சாதுக்கள் சங்கதியாலரிலோக முறுவர்கோது
கமாறியுமூகனுஞ் சட்டனுங்குஷ்டரோகியும் பங்குங்கருதிச்சென்று. ()

அன்னியர் சேவையினேனுந் தாசிகள்சம்போக வியாஜத்தினேனும்
மன்னியொருநாள் ராஜகோபாலசாமியைச் சேவித்துவந்தால், துன்னியெல்லோரும் புகழுநல்லகுலத்தன்னியனுந் துயரில்யோகி, யென்ன விகத்திற் சுகித்துப்பரத்திலுத்த மகதிசெல்வான் மதியேய்ந்தோனே. ()

ஆகையாற் சருவபிரயத்தினத்தாலுந் நவரத்தினங்களுக்கு
வாகதாகத்தீர்த்த மொன்பதுசூழ் செம்பகமா வனத்திலோராண்
டோகையா குறவசித்து மாதமாதம்மோரோர் தீர்த்தமூழ்கி
யூகமாய்க்கோபாலன் றனைவணங்கி லவனையொப்பாருலகத்திலலை. ()

எல்லாலோகங்களிலு மெல்லோருக் கும்பிரிய னெனவிருப்பான் [தப்
நல்லோனுயவன்பின்னு மடிக்கடி நான்சொல்லுகின்றே னல்லோரேத்
பல்லோர்வாழ் சம்பகமாவனவாச மஞ்சணதி படிதனன்றும் [வான்.
வல்லார்வாழ் சம்பகமாவனத்தமர்ந்தான் மனிதசன்மம் வாய்த்தோனு

செம்பகமாவனத் துறுதல்வேண்டுமென்றெத் தலத்தினிடைத் திகழ்ந்
தானேனும், பைம்பொன்மலர் வல்லிநாயகனுன கோபாலன் றன்னைப்
பார்த்த, அன்பதனுற் சகலபுண்ணியங்களையு மடைவானே மாட்ஜவ
ல்லி, இன்பனுகிய ராஜகோபால னுலகங்களெல்லாங்காக்க. (சு அ)

விருதுகொண்டு தெக்ஷிணத்து வாரகையிற் செம்பகமாவனத்தின் மே
விக், கருதிவணங் கினவருக்குச்சகல சித்தியுங்கொடுக்கக் கருதிநின்று
ன், பொருதுபிரமாண்ட புராணத்தில் விண்டுக்ஷேத்திர கண்டத்திற்
போந்து,வருதல்செய்தவுத்தரபாகத்திற்சம் பகாரணிய மான்மியத்தில்.

அறுபத்தேழாவது வாய், உறுமத்தியாய முடி,
பெறுமிப்படி யெனவாய், தொறுநற்று வாருளமே. (நுல)

ஏழாவது அத்தியாயம் - முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - கூசுக.

---

## அ-வது தீர்த்தவைபவ அத்தியாயம்.

சீர்ச்சவுந கர்கேட்கின்றார் சர்ரமானதத்து வங்கடேர்ந்து
நேர்வினவு வோரானசாதகப் பக்ஷிகளுக்கு நேடப்பெய்யும்
கார்நிகருஞ்சூதரோ யும்மைநமஸ்கரிக்கின்றேன் களித்தென்கேள்விக்
கார்தரவுத்தரஞ் சொல்லவேண்டுமும்மான் மந்திரச்சீரறைந்தாயிற்றே.

ஆதலாலினி யொன்பான்றீர்த்தவைப வத்தையினி தறைதிரெந்தப்
போதிலெந்த மாதத்திலெவ்விதமாய்ப் புனன்முழுகல் பொருந்து மெல்
லா, மேதகுதீர்த்தங்களநு புண்ணியங்க ளையும்பிரித்து நிகழ்த்துமெ
ன்னச், சூதர்சொல்லுகின்றுரோய் சவுநகரோ கேளுமெனத் துணிவு
வாய்ப்ப. (உ)

வேறு.

செம்பகாரணிய மென்று திகழ்தலத்துளகல் செல்வி
பம்புமண்டாருநூறு பக்கியே மிருகம்யாவும்
நம்பரிருபமாகு நவில்கின்ற மாசமாசம்
அன்பொடு தொடங்கிப் பன்னீரக்கரஞ் சபித்துக்கொண்டு. (ங)

வேறு.—எட்டெழுத்துடன்சரணாகதிமந்திரத்தையுஞ் சபித்துக்கொண்
வட்டநீர் மஞ்சள் வாவியிலாடி வந்துபின் சகலதீர்த்தத்தும் [டியலால்
இட்டமாய் முழுகல் செய்யவேண்டியதே யினிவிசேஷித்துமா கமாசம்
தொட்டரித்திர மாநதியிலே யாவன்றெளிதல் செய்கின்றனனவனே.

கோடிஜன்மங்கள் செய்தபாபங்கள் குலைந்துதிவ்விய விமானத்தில்
ஈடுகொண்டேறி யெழிலினர் உபசாரஞ்செயத் திரும்புதலில்லா
நீடொளிபுகுகின்றனனந்த முழுக்கி னிகழ்பலசித்தியின் பொருட்டுக்
கோடுதலில்லா தநேகதானங்கள் கொடுத்தலும் வேண்டுமெற்றின்னும்.()

சூரியோதயத்தின் முன்னெழுந்திருந்து சந்தியாவந்தனஞ் சூழ்ந்து
சேரிலாப்பானு சிறிதுதித்தவுட னிகழ்கையிற் பவித்திரந்தரித்துச்
சீருடன்சுசியாய் விதியுடன் மஞ்சட்செழுநதி மாகநீராடி
ஆர்துவாதசாக்ஷ ரத்தினையெண்ணி யாதிநாளோது தாம்பூலம். (௬)

துளவுடன் கதலிப்பழ மிரண்டாநாள் சொன்னதெக்கணையுடன் றேங்
காய், வளமுற மூன்றுநாள் பலாப்பழநான் காகிய நாளைந்தாய் வருநா
ள், அளவுறு நெல்லிக்காயிருமூன்றேயாகிய நாள்சமுசாரம், களைவுறக்
கிழங்கேழாகியநாளிற் கருதியவிஞ்சி யெட்டாநாள். (எ)

பூசணிக்காயொன் பான்பகல்கீரம் பொருந்து பத்தாந்தினந்தயிரோ
நேசநெய் பதினோராம்பகல் பன்னிராகிய தினநவநீதம்
வாசமார்மஞ்ச ளேபதின்மூன்று நாள்பதினாலென நிகழ்நாள்
கூசமில்கோரோசனை பதினைந்தாய்க்குறிதினந்தயிர் விராவன்னம். (அ)

எண்ணிரண்டாநாள் சந்தனம்பதினே ழாகிய தினம்பயறென்பா
னன்னிரண்டாநா ளுழுந்துபத்தொன்பா னுணலதுவரையே யிருபான்
கண்ணுநா ணரத்தம்பழ மிருபத்தொன்றும்பகல் கருதெலுமிச்சை
வண்ணமார் செம்புப்பாத்திர நிறையெள் வருமிருபத்திரண்டாநாள்.()

தண்டுல மிருபான் மூன்றெனுநாள்பின் றக்கநெல்லாம் பசும்பயறு
மண்டிய விருபானேடிரு நான்காய் வருபகலிரு பதிற்றைந்தாய்
அண்டியநாள்கோ துமையிருபத்தா றுகியநாள் புகல்கடலை
கண்டிருபத்தேழாகுநாள் கலிங்கங் கம்புளியேழு நான்காநாள். (௰)

இருபதிற்றென்பா னுகுநாள் கோபிசந்தன முப்பதாகியநாள்
திருமணம் மாகமாதமிவ்வாறு தினந்தினந்தானங்கள் செய்து
மருவிய வேதந்தெரிந்தவர் தமக்கு மறவியில் பத்திசெய்குவனேல்
அருமைகொள் செல்வமனைத்து மூற்றின்பமடைகுவ னவனவனளவே.

தக்கதுகொண்டு தகவிசேஷித்துச் செயக்கடவது வன்னதானம்
மிக்கமற்றவன்செய் புண்ணிய வளவைவியந்துணர்வோன் பகவானே
தொக்கசீர் மஞ்சள் வாவியங்கரையிற் சோறுதந்தருள்வது செய்தால்
வைக்கவொவ்வொன்று கோடிபங்காக வரும்பலனடைத னிச்சயமே.()

வாரங்களெல்லா மாதங்களெல்லாம் வருபௌ ரணையமாவாசை
சூரியனொடுசந் திரகிரகணத்திற் றோய்ந்திடின் மஞ்சணீர்வாவி
போர்புரி யசுவமேதமோர் பதினாயிரப்பலன் பொருந்துறு நல்ல
சீருறுவாசமலர் செழுஞ்சந்தஞ் செய்யகோ ரோசனைபூரம். (௰௫)

இவைகளேமாக மாசத்தின்முடிவி லீதல் வேண்டுறு மொருமாசம்
தவலறமுழுது முழுகல்செய்வதற்குச் சத்தியில்லாவிடில் மூந்நாள்
அவதியாவது மூழ்குதல் செயவேண்டு மாயினுமாக மாசத்தில்
நவமுறுதானமடைவு செய்வதுவே நன்றத னாலெலா நலமும். (௰௬)

வந்துறுமற்றைவாவிகளிலுநீ ராடுதல்செய்வது வழக்கே
நந்தியவெட்டு மாதமுமெட்டு நற்றிருமருவு தீர்த்தங்கள்
அந்தவோரடைவே முழுகுதல் வேண்டுமென்றுரு தர்புகல்கின்றார்
முந்துகோபிலருக் காகவேதிருமான் மொழிதுவாரகைக்கு நேராக. ()

செம்பகாரணிய மாகுதல்வேண்டு மென்றுதென் றுவாரகைதிருந்தி
உம்பரும்பரவ வுத்தமதீர்த்தமாயது மஞ்சணீரோடை
பம்புகோமதிக்கு நிகரென விருந்தாவன நிகர் சம்பகப்பைங்கா
நம்பநல்லோர்கள் சொன்னதுமஞ்ச ணளினியாடுத லென்றுநன்றே. ()

சிறப்புறமாக முழுக்கதுபலனைச் செப்பியதிங்குப் பங்குனியென்
றறத்துறுமாச முழுக்கொடுபலனை யதிகமாய்ச் சொல்லுகின்றனமுன்
பிறப்புறுமலரோன் ராஜகோபாலன் பிறங்கவுற்சவம் பெரிதியற்றி
மறப்பறமுடிவி லரித்திரவாவி மன்னியாடுந ரெவரேனும். (௰௭)

எனதுலகத்தி லுற்றபோகிகள்போ லெய்துவரென்ன வெம்பெருமான்
தனதருளுளதே யாகையான்மீனந் தானெனுமாசத்தின் முழுகல்
அனகமே பின்னுஞ்சித்திரைமாசத் தரசகோபாலனுக்கினிய
வனமலர்நிறைவா யிருதுவிற் சிறப்புவாய்தலாற் கோப்பிரளயரும். ()

அற்புதலீல னைகண்ணனுக்கன் பாய்ப்பெரிதானவுற்சவத்தைப்
பற்பலவான மனோரதஞ்சித்திக் கும்படிபதினெட்டுப்பகலில்
சொற்படிபாஞ்ச ராத்திரம் பன்னீரக்கரச்சுத்த வித்தையினால்
இற்புடன் செய்துவைத்துவை சாகத்தியலுறு பூரணையினிலே. (௰௯)

அரித்திராநதியுற் சவத்தவ பிரதத்தாலே யநேகம்வேதியரோ
டொருத்தனி புரிந்தாராகையாற் பகவானுக்குவை சாகநீராடல்
விரித்திடமிகவுமினியதா மறுபத் தாறுறுகோடியாய் விளம்பித்
தெரித்ததீர்த்தங்கள் சேர்ந்ததுபகவான் சேர்ந்துநீராடுதல் செயற்கே.()

மஞ்சளந்தட மந்தாகினி பொன்னி வளஞ்செறிந்ததுதுலாமாசம்
விஞ்சுகாவேரியாடுதல் பெரிது மிகப்பெரிதரித்திரத்தாடல்
எஞ்சறுதுலா முப்பதுமரித்திரமூழ் கிடுதல்செய்குந ரெவரவரோ
செஞ்செவே யார்க்குஞ் சிறந்தவராகித்தேவர் முப்பத்து முக்கோடி.

ஆனவர்மகிழ நல்லொழுக்கினரா யரியதாபத்திரயம்போய்
மேனலத்தழியாப் பதவியையடைவார் விரும்பரித்திராநதி நீரில்
நானமோதுலாவி லதிகமாமீனநயந்தருமேட மோடிடபம்
ஊனமில் கும்பமாத நான்கினுமூழ் குதலதிபாவனமுளவே. (௨௨)

சந்திரன்பானு கிரகணந்தனிலுந் தகுமுரோகிணி திருவோணம்
முந்தியபொழுதி லரித்திராநதியின் மூழ்குதல் கண்ணனுக்குகப்பாம்
அந்தநீள் சுவாயம்புவவி மானமதற்கு மேற்கேயொருபாணம்
சிந்தினுற்செலுந்தா ரத்தரசுமரஞ் செறிந்து நாணற்களுஞ் செம்மி. ()

விளங்குகின்றது துர்வாஸதீர்த்தஞ்சீர் மேவியவாடிமாசத்தில்
களங்கமில் சனிவாரத்திலே விசேடங்கண்டது வென்று நீராடில்
தெளிந்ததேசிகன்றாய் தந்தையை நிந்தை செய்ததோஷமும் விடுமெ
னமுன், கிளந்தனன்றுர்வா சனுக்கருளிருட கேசனுகிய பகவானே. ()

அங்குகீதாபா ராயணஞ்செய்தா லரியபாபங்களுந்தீரும்
இங்கெனப்பெரியோருணர்வ ரப்படிக்கே யியம்புசீர் மகரமாசத்தில்
பொங்குறுதில்லை மரங்களால் விளங்கும் புகழ்திருப்பாற் கடல்போந்
து, பங்கின்மூன் வாரந்தனில் விசேஷித்துப் பதுமைநோற்றுற்றவவ்
விடத்தில். (௨௫)

இலக்குமிநாரா யணசுவாமிசன்னி திபிற்சரணுகதியென்று [துக்
துலக்குமந்திரத்தான் முழுகுதல் வேண்டுஞ் சொன்ன விப்படிமகரத்
கலக்கமின் மாதமுழுகி வைகறையிற் கருதுமன்போடு கோதானம்
நலக்குறப்புரிவானேலவன் செல்வநலத்தரசாகி வாழ்ந்திருப்பான்.(௨௬)

முடிவிலா விமானந்தனது தென்கிழக்கு மூலையிற் கோபிகாதீர்த்த
மடுவிலே கன்னிமாத நன்காகவந்து மூழ்குதல் செயவேண்டும் [கள்
நெடிதுமுன்னங்குக் கண்ணனைத்தனியே நேர்கொடு கோபகன்னிகை
இடுகிநீராடி மகிழ்ந்தனர் சண்ணனெழுத்தாய மந்திரத்தை. (௨௭)

புந்திவாரத்தி லெண்ணியக்கண்ணன் புணர்பரனுகி நீராடில்
சந்தனவிருக்ஷஞ் செறிந்தவத்தீர்த்தத்தான்மிகு சுகியொடு சார்வான்
விந்தையாய்ப்படிகள் விளங்குதீர்த் தத்தின்மேவு தைமாதமூழ்கினவன்
சந்ததமுபசாரத்துடன் சிங்காசனுதிபருய்க் களிதழைப்பான். (௨அ)

அதற்குமேற்றிசையிற் சோகூசள்சூழ வநேகமாம் படிகளால்விளங்கு
துதற்குலாவுருக்குமணியெனுந் தீர்த்தநுவனம் பொன்மந்திரஞ் சபித்
துப், பதைப்புறுதாடித் திங்கள் வாரத்திற் படிறினீராடுதல் வேண்டும்
சிதைப்பிலாவாடிப் பூரமால்வேண்டி செல்விநாண் மூழ்குதல்செய்து ()

உத்தமமாகக் கன்னிகாதான முதவிநற்சுமங்கலிகளுக்குச்
செய்த்தகுங் குமமுமுதவுதல் வேண்டுந் தென்றிசை யக்கினிகுண்டம்
மெய்த்தகோப்பிரள யரதுபுண்ணியதீர்த் தம்வினையாவையும் வீட்டிப்
பொய்த்தலில்லாதுவிளங்குகின்றதுகார்த்திகைப்புகழ்ப்பானுவாரத்தில்

ஆடுதல் செய்துசோ வொடுதிபநல் லகருதானமுஞ் செயல் வேண்டும்
நீடுறுபலாச மரங்களானிறைந்து நெடியபூ பசடங்கணிறைந்தும்
கூடியவெக்கியத்தினைப்புரிவா னேலவன் குதிரைமேதத்தின்
ஈடுறுபலத்தையடைவ னவ்விடத்தெள் பாசனமாத்திர மியற்றில். ()

ஆமப்போரி யாமத் தின்பலமுண்டாமாகையா லவ்விடத்தினிலே
நேமத்திறேடு கார்த்திகைமாத நிகழருஞேதயத்தினிலே
சேமித்தசகலதானமுந் தெளிவாயிருக்கிறதா லதன்வடக்குக்
காமித்தவாயுமூலையிற் கண்ணன்தீர்த்தமென் றுென்றுகண்டுளதே. ()

சொன்னதோர் சுவாயம் புவவிமானத்தின் சுத்தவொண் ஜலங்களானி
றைந்து, மன்னியமலர்ச்சம்பக மரஞ்சூழ்ந்தும் வனத்துழாய் மலிதர
வணிந்தும், துன்னியபடிகள் பலதொகத்தெளிநீர் சுலாயதோர் புண்
ணியதீர்த்தம், நன்னயத்துடனே விளங்குகின்றது நன்னலத்தனுமாத
நீராடல். (௩௩)

விசேஷமென்றுரைக்கப்படுகிற ததிலேவியந்து சோட்சமகாதானம்
விசாலமா ரவிடத்தினிநரர் புரிதல்வேண்டுமோர் கண்ணன் மந்திரத்
தைப், பசாசறச்சபித்தல்வேண்டுமக் கண்ணன்பதங்களை வணங்குதல்
வேண்டும், பசாசறமாதங்களிற்றனு மாதப்படிவ நாளென்றனன்பக
வான். (௩௪)

கிதையிலாகை யாற்றனுமாதங் கிருஷ்ணதீர்த்தத்தினீராடல்
மேதகவாகுஞ் சங்குருவாழி வியனுருவாகவேபாரி
ஜாதநன்மரங்கள்சூழ வெண்கமலந் தகுந்தசெங்கமலமாமலர்கள்
ஆதரமாக நிறைந்திருதீர்த்தமவண் விளங்குகிறதாலம்ம (௩௫)

ஆவணிமாதஞ் சித்திரைமாதமவற்றிலே மூழ்குதல் விசேடம்
மேவரதன தானமும்மெழுத்தெட்டும் விசேடமாம் விளம்பிய விமானத்
தோவறுதெற்கு வடக்கெனுந் திக்கிலொளிரு மவ்விரண்டு தீர்த்தங்கள்
பாவனமென்ப வொன்பது தீர்த்தம்படிதன் மந்திர ஜெபம்பண்ணல். ()

நவமணிபோலு நவின்றதீர்த்தங்க ளலமிகு சவுனகரோயென்
றிவிதமதாகத்தீர்த்த வைபவங்களியம்பிய தித்தகைத்தீர்த்த
மவுனிகளான பெரியரை நன்குவகுத்தல் செய்கின்றனன்கேளும்
திவியமதான வரித்திரநதிக்குத் தீங்கறுமிருகுமாமுனியே. (௩எ)

கண்ணதீர்த்தத்துக் கருணரன்றிருப்பாற் கடற்குநாராயணன்கருத
நண்ணுசக் கரதீர்த்தத்தினுக்கினிது நவின்றகோபிலரொ டானந்தர்
எண்ணுகர்த்தமர் சூரியரியல்சாத வேதர்பிக்ஷிதரென விவர்போல்
அண்ணல்சேருருக்குமணியெனுந் தீர்த்தத் தைவர்வாழ்கின்றனரம்ம.

விமானமேற்கான புண்ணியதீர்த்த மேவினர் விளங்குதுர்வாஸர்
சமாதிசாக்ஷாது வெக்கியபுருஷர் தக்ககோப்பிரளயர் வீணைக்
குமாதகரான நாரதர் வளர்சீருதாசன குண்டத்திலுறைந்தார்
அமாகிய கோபிதீர்த்தத்திலேசீ ரமைந்தவுத்தவர் வசித்தமர்ந்தார். ()

இவ்வகையான தீர்த்தமூற்றிலுஞ்சீ ரிலங்குறுவிட்டுணுவான
எவ்வமில்லாத துவாரகாநாதனென்றசீர்ப் பிரபு தேவதையா
மௌவகோபாலன் றெற்கொடுவடக்கு வாய்ந்த பக்கங்களின்மருவிக்
கவ்வைதீர் சங்கசக்கரங்கொண்டு கருதுமூவரிலைவினலழகாய். (சய)

நகுபிரம்பேந்தி நவின்றகோபிகைக ணிமகிழ்வாகுதற்காக
மிகுதரவிளங்குகின்றனனந்தமிளி ரிரண்டாயுதங்களுஞ்சீர்த்
தகுதிகொள் பக்கங்களிலுறுதீர்த்தந் தங்கிநேத்திரம் படாவாகத்
தொகுதரும்பூதம் பசாசொடு பிரேதந்தொடங்கிராக்கதர் சுலவாமல். ()

காத்துறுகின்ற நந்தகமென்னுங் கத்திதானரித்திராநதியும்
சேர்த்தகுசார்ங்க வில்லுறுதிருப்பாற் கடலிலுஞ்சிறந்த கோபிகையி
லேத்துறுபதும மக்கினிகுண்டத் தியாவையுமுருக்கும ணியெனும்
தீர்த்தவாரியிற்கௌ மோதகிக் கதையுந்திகழ்ந்த கண்ணன் பராசத்தி.()

கண்ணதீர்த்தத்து மலாயுதமுசலா யுதந்துருவாசமாகயத்தும்
நண்ணியிப்படி யெவ்வாயுதங்களுஞ்சீர் நவின்றசு ரையொறுக்கிற்கும்
புண்ணியதீர்த்தம் யாவையுமறைந்து பொருந்தியதிப்படி யொன்பான்
எண்ணுறுதீர்த்த க்ஷேத்திரமோக்ஷமீவது மனிதருக்கென்ப. (சரு)

ஆயவிவ்விடத்திற் சகலதானமுஞ்செய் தாற்கண்ணன்மகிழுவானதற்கு
மேயதாஞ்சத்தி யிலனெனி லொருபாலாடிநல்வினைசெயல் வேண்டும்
ஏயமாத்திரஞ்செய் யாதுறக்கூட்டா தின்னமுஞ் சொல்கிறேன் கேளும்
ஓய்சவுனகரோ முன்பிரமாத்தன் னுழைமகிழ்ந்தாச்சரியத்தால். (௪௪)

விளங்குறு செய்கை யரசகோபாலன்றனக்கு முன்மேவியவுகத்தில்
அளந்துறு தனது கற்பத்தின் முன்னாலாகியபாஞ்சராத்திரத்தில்
வளந்தரச்சொன்ன வகைப்படிச்சகல வானவர்களுமவண்வந்து
களங்கமில்லாம லற்புதமாகக்காட்டுமுற்சவத் தைமங்களமாய். (௪௫)

அவிட்ட நக்ஷத்திரத்திலாரம்பஞ் செய்து மத்தியிற்பகவானுக்
குவிட்டிலங்கியசீர்க் கருடவாகனவுற் சவத்தினைக்குவாலுறப்புரிந்து
தெவிட்டறுசகலதேவருங் கூடித்திகழ்ந்துசீர் மனமகிழ்வாக
உவட்டறு விவாகஞ்செய்து ரோகிணிநக்ஷத்திரத் திரதவுற்சவத்தை ()

செய்துவைத்துற்சவத்தது முடிவிற்றேவனுக் கவபிரதஸ்நானம்
செய்துவைத்தாரப் போதுகொள்பகவான்றேவரானவர்பலராலும் [ஞ்
செய்துதிகொண் டெல்லோர்க்கு நல்வரந்தன்னதற்குப்பின்புதிரோத
செய்துறுமுகத்திற் பிருகுமாமுனிவன் சிந்தனைகளிப்பதற்காக. (௪௭)

திருமகட்டனக்கு வரந்தரவந்த தேவனுக்கன்பினுற்சவத்தை
மருவல்செய்தனடைமாதநாள் பூசம் வளர்பிறையாகு காலத்தில்
அருடிருநெடுமாற் கேழெனுந்திதி ரேவதியெனு நாடுசாரோணம்
ஒருமுதற்பூசநாளினிற் புஷ்பராகங்க ளிழைத்துளதாகி (௪௮)

திவ்வியமானவிரதத்தை யோட்டி மகோற்சவஞ்செய்தவபிரதத்
திவ்வியஸ்நானுதிகளெலாஞ் செய்துவைத்தன டுவாபரயுகத்தில்
ஒவ்வியமுடிவிலக்கினிதனக்கு வரந்தரவந்தவுத்தமனுக்
கொவ்வியவசந்தகாலவுற்சவத்தையுற்றசித்திரைப்பௌரணையில் (௪௯)

முதலிறுவாகவற்புதமென்ன முயன்றுசெய்தனனந்தயுகத்தே
நுதலியபிருகுமாமுனியாலு நோன்மைசேர் தாமரைமலரா [ன்
விதமுறவாடல்செயும் விளையாட்டாலெம்பிரான் விதானம்வீற்றிருந்தா
நதமெனலானவரித்திராநதியினல்லதோரானி மாசத்தில் (௫௰)

பூரணைதனிலப்பிருகுமாமுனிவன்புணரெழிற்கன்னியருட்னே
சேர்தருகோபாலனுக்கு நன்முகத் தெப்பவுற்சவஞ்செய்துவைத்தான்
நேர்துவா பரமாமுகத்தது முடிவினிகழ்த்து கோப்பிரளயரென்னுஞ்
சோர்விலந்தணமாமுனியும் வைசாகமாசத்து விசாகநாடொட்டங்கி. ()

சுக்கிரவாரந்தன்னில் யாவருக்குந் துயரில்லா வின்பமுண்டாகத், தக்க
சீர்விளங்கி ராஜகோபாலன்றனக்கு நல்லுற்சவமுழுதும், மிக்கதாகச்செ
ய்திரதவுற்சவமும் விளங்குவித்தரித்திராநதியில், தொக்கநீராடல்செய்
தெலாநலனுந்தொடுத்து மோக்கத்தைமுன்னடைந்தான். (௫௨)

பின்கலியுகத்திராஜசேகரனும் பெருந்தகைதுலாவெனுமாசத், தின்பக
வானுக்கின்பமாய்த் தீபாவளியெலோருக்குமின்பியல, அன்புடனியற்
றிவைத்தன னிவ்வா றுகவெவ்வரசருங் கண்ணன், தன்பெரும்பத்திந
ழைக்கவற்புதமாய்த் தருந்தவுற்சவஞ் செய்துவைத்தார் (௫௩)

ராஜகோபாலசாமியுந் தேவர்நவில்வுறு மனிதர்யாவருக்கும்
நேசமாய்க்காமமனைத்தையுந்தந்துநிழல் செய்துசம்பகராணிய
வாசமார்தலத்தினடிவிலேயின்றும்வயங்குகின்றானுறுவானோர்
பேசியவசுரராரசர்கள்கிரீடம்பிறழ்ந்தொளிர்மணிகளால்விளங்கி. (௫௪)

அமர்திருவடிக ளழகுசெய்துறவாழ்வாகியசம்பக நாதன் [கால்
நிமிர்புகழ்தருமான்மியத்தினைத் தெரிந்து நிகழத்துறநிகழ்த்துறப் பல
இமிழ்தரக்கேட்டுக்கண்ண னன்பதனுலியங்குறு சவுனகர்யாரும்
தமிதமிவழுத்தச்சூதமாமுனிவர் தமைவிநியுடன்புகழ்சாற்றி. (௫௫)

சொல்லுகின்றனரோய் பெரியமாதவத்துச் சூதமாமுனிவரே யெம்
மை, நல்லதாஞ்சுத்தஞ்செய்து வைந்நிர்நீர்நவில்புராணத் தினைக்கேட்
டுப், பல்குழாத்தோர்க்குஞ் சமுசியந்தீர்ந்து பயந்தகிராஜகோபாலன்
மல்லல்சேர்சம்பகராணியத்துமகத்துவமெவர்க்குமெக்காலும். (௫௬)

சுபந்தருகிறதோய்சூதரே சகலபுராணவர்த்தங்களும்சொல்லிச் [ண்டும்
செபம்செய்யுமும்மைநமஸ்கரிக்கின்றோந்தெரிந்தெமைப்புரந்திடல்வே
தபங்கிகழ்வுறவென் றின்னவாறனேகந் தபோதனர்புகழ்ந்திடப்புராண
உபந்தெரிமகான்மாவாகிய சூதருள்ளவாறுதியோடந்தம் (௫௭)

செம்பகராணியமகத்துவங்கேட்கத்தினந்தினங்குதூகலஞ்சிறந்து
நம்புசீர்ச்சவுனகருக்குமுன் சொன்னார் நவின்றவிப்புண்ணியகதையை
அன்புசான்றெவரே யாயிலும்வணங்கி யமர்ந்துகற்றனா ரெனிலளவாப்
பம்புசீர்செல்வங்கல்விசந்தானம்படைத் துநீளாயுளும்படைப்பார். ()

பொன்புரைகமலவல்லிநாயகன்றன்புண்ணியசரித் திரந்தன்னை [ம்
அன்புடன்கேட்டல்படித்தல் கற்பித்தலமர்ந்துகேட்பித்த லிவ்வனைத்து
துன்பறவிகத்திற்சகலபாக்கியமுஞ் சொல்லியகீர்த்தியுஞ் சுகமும்
இன்பமோவின்றிமுடிவிலேபரமபதத்தையு மெய்துவித்திடுமே. (௫௯)

என்றினவாறுசூதமாமுனிவரியல் பொடுபுராணநன் கியம்பித்
துன்றியமுனிவரெவரையு நல்லசுகிர்தர்களாகவே செய்து
நன்றிசேர் நயிமிசாரணியத்தி னயந்துமுன்னாரணன் றனது
வென்றிசேர்சரிதம்யாவையும்படித்து மிளிர்தருஞ் சம்பகாரணியம். ()

விளங்குறு சார்வபௌமனுகியசீர் விமலனற்புத சரித்திரத்தை
வளந்தரமுழுதுஞ் சொல்லியம்முனிகள் வழுத்தோடுவந்தனைவாழக்
களங்கமில்லாதுவிளங்குகின்றார் சீர்காண்பிரமாண்ட புராணத்
தளந்துறுவிண்டுக்ஷேத்திர கண்டத்தாகியவுத்தரபாகம் (௯௧)

தன்னிலேசம்பகப்பொழின்மகிமை தனிலறுபத்தொட்டாகி
மன்னியவத்தியாயநன்முடிவு வாழுருக்கு மணிசத்யபாமை
பொன்னிறக்கமலவல்லிகூடுறுஞ்சீர் பொங்கியராஜகோபாலன்
என்னலாகியசுவாமினே நமவென்றெழுதினன் சீநிவாசேசன். (௯௨)

அந்தணன்சீநிவாசா சாரியன் வடநூலாய்ந்து
தந்தனன்மொழிபெயர்த்துத்தமிழிலே சம்பகேசன்
விந்தைசேர்மகிமை நாகைவேங்கடராயலேந்திரன்
சந்ததம்விளங்கநூலோர் சவைக்களத்தினிதுமாதோ (௯௩)

இந்த ஒருகவி - தஞ்சை ம-௱-௱-ஸ்ரீ முத்துசாமியுபாத் தியாயரவர்களாலே சொல்லியது. சீநிவாசாசாரியார் தமிழ்நடை வண்ணமே செய்யுளாயியன்றது பெரும்பாலுமெனக்கொள்க.

இதுமுழுதும். தில்லைத்தானம். ஸ்ரீவைகுண்டாசாரிய சுவாமிகளாலே வடமொழிக்கொப்ப நோக்கலானது.

மன்னார்கோயிற் புராணம் முற்றிற்று.

ஆக - திருவிருத்தம் - ௲௪.



# அட்டவணை.


| | பக்கம். | பாடற்றொகை. |
|---|---|---|
| பாயிரம் | ௧ | ௰௭ |
| நாட்டுச்சிறப்பு | ௩ | ௨௱ |
| நகரச்சிறப்பு | ௩௰ | ௯௮ |
| கோப்பிரளயர் அத்தியாயம் | ௪௩ | ௭௪ |
| சேவைசாதித்த அத்தியாயம் | ௫௨ | ௱௮௰ |
| பார்க்கவிப்பிராட்டியார் அத்தியாயம் | ௭௪ | ௯௧ |
| நீர்விளையாடலத்தியாயம் | ௮௫ | ௫௯ |
| ராஜசேகர னத்தியாயம் | ௯௩ | ௭௨ |
| தோஷநீங்கின அத்தியாயம் | ௱௨ | ௱ |
| மந்திரோபதேச அத்தியாயம் | ௱௰௫ | ௫௰ |
| தீர்த்தவைபவ அத்தியாயம். | ௱௨௧ | ௬௩ |
| ஆக - செய்யுள் ௲௪. | | |


௭௪ - பக்கமுதல் பாட்டிலக்கத்தொகைப் பிறழ்வுதிருத்தியும். ௱௨௫-ம் - பக்கத்தில் அவ்விடத்தெள்பாசன மென்பதை அவ்விடத் தெளபாசனமென்றும்.

இவ்வித அச்சுப்பிழைமுதலிய குற்றங்கடிந்து குறைபெய்து வா சித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீவேத வியாசபட்டர் திருவடிகளே சரணம்.

